

"என் குழந்தைக்கு, சரியான அளவில், இன்றியமையாத ஊட்டச்சத்து அளிக்கப்படவேண்டும்.

## அதனால்தான், நான் செரிலாக்கை நம்புகிறேன்."

"என் குழந்தைக்கு, 4 மாதங்கள் முடிந்தவுடன், அவனுக்கு எந்த திட உணவைப் புகட்டத் தொடங்குவது என்று, உண்மையிலேயே நான் யோசிக்கலானேன். வெறுமனே திட உணவு மட்டும் போதுமானது ஆகாது. குழந்தை ஆரோக்கியமாகவும், வலுவாகவும் வளர்ச்சியடைய, சமச்சீரான அளவில் ஊட்டச்சத்துக்கள் நிறைந்த திட உணவு தேவைப்படுவதாம், என் மருத்துவர் கூறினார். எனவேதான், நான் செரிலாக்கையும் புகட்டத் தொடங்கினேன்."



**செரிலாக் எளிதில் சீரணிக்கத்தக்க, சமச்சீரான போஷாக்கு :**

செரிலாக் தேவையான ஊட்டச் சத்துக்களை, சரியான அளவில் வழங்குகிறது. இயற்கையான புரதச்சத்துக்கள் நிறைந்த, பால் மற்றும் கோதுமை கொண்டு தயாரிக்கப்பட்ட செரிலாக்கில், கார்போஹைட்ரேட்டுகளும், கொழுப்புச் சத்துக்களும் கூட அடங்கியுள்ளன. அத்துடன், அத்தியாவசியமான விடமின்களும், தாதுப் பொருட்களும் இதில் நிரம்பியுள்ளன. இதனால் உங்கள் குழந்தைக்கு, ஒவ்வொரு முறையு(ம்) சமச்சீரான உணவு கிடைக்கிறது.

**சீரணிப்பது எளிது, விதவிதமான பல சுவை உணவுகள் :**

நெஸ்லேயின் புரட்சிகரமான 'ஜெட்-லைன் என்ஜைமேடிக் தொழில்நுட்பம், கார்போஹைட்ரேட்டுகளை எளிதில் சீரணிக்க உதவுகிறது. இதனால் மிருதுவான செரிலாக்கை, உங்கள் குழந்தை, எளிதில் சீரணிக்க முடிகிறது.

செரிலாக்கின் சுவையை, குழந்தைகள் மிகவும் விரும்புகின்றன. 4 மற்றும் 6 மாதங்களுக்கு இடையேயான காலத்தில், செரிலாக் வீட் மற்றும் செரிலாக் ரைஸ்-ஆகியவற்றிலிருந்து ஒன்றைத் தெரிந்தெடுங்கள். பின்னர் பார்த்து மகிழுங்கள் உங்கள் குழந்தையின் மகிழ்ச்சிக் கும்மாளத்தை!




Mudra/NES:2582 Tam

**உங்கள் குழந்தைக்கு செரிலாக் அனுகூலத்தை அளியுங்கள்.**

IMPORTANT NOTICE : MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY. INFANT FOOD SHALL BE INTRODUCED ONLY AFTER 4 MONTHS OF AGE

महत्वपूर्ण सूचना: माँ का दूध आपके बच्चे के लिए सर्वोत्तम है। ४ महीने के बाद ही उसे शिशु आहार देना शुरू करें





# டான்ஸி ராணி!

தமிழக அரசியலைப் பரபரப்பாக மாற்றிய டான்ஸி தீர்ப்பை டிசம்பர் நான்காம் தேதி யன்று நீதிபதி தினகர் சொன்னபோது, உயர்நீதி மன்ற வளாகம், தீபாவளித் திருநாளை நினைவு படுத்தும் அளவுக்கு அ.தி.மு.க. தொண்டர்களால் மாற்றப் பட்டு விட்டது.

அ.தி.மு.க. தொண்டர்களே எதிர் பார்க்காத இனிமையான தீர்ப்பு இது. மூன்று வழக்குகளிலிருந்தும் முற்றி லும் விடுதலை.

தி.மு.க. வட்டாரத்தில் இதைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

"நீதிபதியை விட நீதியை மதிக் கிறேன்" என்று கலைஞர் சொன்ன தற்கு ஆயிரம் உட்பொருளுண்டு எனகிறார்கள் கழகத் தொண்டர்கள்.

டான்ஸி வழக்காகட்டும்; ஹோட் டல் வழக்காகட்டும், தனி நீதிமன்றத்தின் பரிசிலனையில் இருந்தபோதே ஜெயலலிதா வால் பல நிலைகளில் ஸ்பீட் பிரேக்கர் போடப்பட்ட வழக் குகள்தான். சுப்ரீம் கோர்ட் வரை சென்று prima facie உள்ள வழக்குகள் என்று சொல்லப்பட்டவை. குறிப்பாக "டான்ஸி, அரசு நிறுவனம் இல்லை" என்ற முடிவு மோச மான பின் விளைவுகளை

உண்டாக்கும்" என்கிறார்கள் சீனியர் வழக்கறிஞர்கள்.

"டான்ஸி அரசு நிறுவனம் இல்லையென்றால் அதனுடைய செயல்பாடுகள் பற்றிய கூட்டம் முதலமைச்சர் தலைமையில் ஏன் நடந்தது? அதனுடைய வரவு செலவுகள் சட்டசபையில் ஏன் வைக்கப்படுகின்றன? நீதிபதியின் கூற்றைப் பார்த்தால் எதிர்காலத்தில் மின்சார வாரியம், வீட்டு வசதி வாரியம், குடிசை மாற்று வாரியம், போன்றவற்றிற்கும் அரசுக்கும் கூட சம்பந்தம் இல்லை என்று சொல்லிவிடுவார்களே!" என்கிறார்கள் அவர்கள்.

"அரசுச் சொத்துக்களை இனி யார் வேண்டுமானாலும் அபகரித்துக் கொள்ள வகை செய்யும் தீர்ப்பு இது. பதவியிலிருப்பவர்கள், சுத்த சுயம்பிரகாசமாக இருக்க வேண்டும் என்ற அடிப்படையில்தான் வழிகாட்டும் நெறி முறைகள் இருக்கின்றன. அது சட்ட புத்தகத்தில் இல்லை; எனவே அதற்கு உரிய முக்கியத்துவம் கொடுக்க முடியாது என்று சொல்லப்படுமானால், அந்தத் தீர்ப்பு திருத்தப்பட வேண்டிய தீர்ப்பு. அரசு கஜானாவிலிருந்து சம்பளம் பெறும் ஊழியர்_ அது ஒரு ரூபாயாக இருந்தாலும் சரி, வழிகாட்டும் நெறிமுறைகளை மீறாமல் இருந்தால்தான், மக்களுக்கு அரசின் மீதும், ஆளும் அரசியல்வாதிகளின் மீதும் நம்பிக்கை ஏற்படும்" என்று நம்மிடம் சொன்னார் பா.ம.க. நிறுவனர் டாக்டர் ராமதாஸ்.

அரசுத் தரப்பை எடுத்துச் சொன்ன வெங்கடபதியின் மீது தி.மு.க.வுக்குக் கோபம். 'மனிதர் சொதப்பி விட்டார்' என்று குற்றம் சாட்டுகிறார் தி.மு.க.வின் மூத்த வழக்கறிஞர் ஒருவர். இந்த வழக்குகளில் ஏற்கெனவே அனுபவம் பெற்றவர்களிடம் அவர் கலந்து பேசவில்லையாம்.

"ஜெயலலிதாவுக்கு எதிராக மற்ற முனைகளில், ஏதாவது நடக்கும்போது அதைத் தங்களுக்குச் சாதகமாக மாற்ற தி.மு.க. முயன்றதே தவிர அதுவாக முனைந்து சரியானபடி போராடவில்லை. அவ்வளவு ஏன்...தி.மு.க. ஆட்சியில் சகல சௌகரியங்களையும் பெற்ற சில சீனியர் தி.மு.க. சார்பு வழக்கறிஞர்களே, தற்போது அரசு வழக்கறிஞராகச் செயல்பட ஒப்புக்கொள்ளவில்லை" என்கிறார்கள் சில தி.மு.க. கூட்டணிக் கட்சிப் பிரமுகர்கள்.

ஹோட்டல் வழக்கில் "தவறுவது மனித இயல்பு. ஒரு உத்தரவு, விதிகளுக்குப் புறம்பாக இருந்தால், அதற்கு உள்நோக்கம் கற்பித்து வழக்கு போட முடியாது. குற்றம் சாட்டப்பட்டவர்கள் மீது தக்க ஆதாரத்துடன் அரசுத் தரப்பு நிரூபிக்கவில்லை" என்று நீதிபதி கூறியிருக்கிறார். இதே விவகாரம் முன்பு உயர்நீதிமன்றத்தில் விசாரணைக்கு வந்தபோது மறைந்த நீதிபதி சீனிவாசன் "நாடொறும் நாடி முறை செய்யா மன்னவன்; நாடொறும் நாடு கெடும்' என்ற குறளைச் சொல்லி ஜெயலலிதா அரசின் செயலை இடித்துரைத்தார். இந்தக் கருத்தைச் சொன்ன மறைந்த நீதிபதியின் வீட்டிற்கு மின்சாரம் வெட்டப்பட்டது என்றும் பேச்சு உண்டு.

தீர்ப்பின் நெளிவு சுளிவுகள் இப்படி இருக்கும் நிலையில் அரசியல் ரீதியாக சர்வபலம் கொண்டு மீண்டும் விஸ்வரூபம் எடுத்திருக்கும் ஜெ., இனி தன் அஜெண்டாவின் ஒரு பகுதியாக தி.மு.க.வின் 'மாண்புகளை' அதே தனி நீதிமன்றத்திற்கு இழுக்கும் வாய்ப்புகள் பிரகாசமாக இருப்பதாகச் சொல்கிறார்கள்.

குறிப்பாக ஸ்டாலின் மீது பிடி இறுகக் கூடும். எழப்போகும் சவால்களைச் சந்திக்கும் அரசியல் பலமும், மனோ தைரியமும் கழகத்தினருக்கு இருக்குமா என்பதிலும் ஐயப்பாடு பலருக்கு உண்டு. இதற்குக் காரணம், கழக ஆட்சியில் பலன்பெற்ற பிரமுகர்கள் பலர் இப்போது 'அமைதியாக' செயலற்று இருக்க விரும்புகிறார்களே தவிர போராடத் தயாராக இல்லை.

"பா.ஜ.க.விலிருந்து தி.மு.க.வைப் பிரித்துத் தள்ளிவிட்டால் தன் நடவடிக்கையில் யாரும் கேள்வி கேட்க முடியாது" என்ற காய்களை நகர்த்தி வருகிறார் ஜெ.

"பா.ஜ.க. செல்வாக்கு இழந்து வருகிறது; இனி அதனுடன் இருப்பது பயனில்லை" என்று தி.மு.க.வில் ஓர் எண்ணம் இருந்தாலும் 'நாமே முறித்துக் கொள்ள வேண்டாம்' என்ற தனது வழக்கமான பாணியைக் கடைப்பிடித்து வருகிறது தி.மு.க.

ஆண்டிப்பட்டி தேர்தல் தேதி அறிவிக்கப்பட்டப்பின் தமிழக அரசியலில் மேலும் பல திருப்பங்கள் நிகழக் கூடும்.

— கௌசி

படங்கள் : சௌரா

# அழகிய நம்பிக்கு ஒரு நாட்டியமாலை!



• அனிதா ரத்னம்

ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசி எந்த அளவுக்கு ப்ரசித்தமோ அந்த அளவுக்கு நெல்லை மாவட்டம் வள்ளியூருக்கு அருகில் உள்ள திருக்குறுங்குடியில் கைசிக ஏகாதசி பிரசித்தம்.

ஸ்ரீரங்கநாதனுக்குச் சொர்க்க வாசல் திறப்பு மாதிரி திருக்குறுங்குடி அழகிய நம்பிக்கு அன்றைய இரவு (விடிய விடிய) கைசிக ஏகாதசியின் சிறப்பை உணர்த்தும் வகையில் ஒரு நாட்டிய நாடகம் நடைபெறுகிறது.

கோயிலுக்கு உள்ளே நாடகம் நடந்தாலும், நாடகத்தின் வில்லனான சண்டாளனின் பாத்திர பிரவேசம், கோயிலுக்கு வெளியிலிருந்து மக்கள் புடைசூழ நிகழ்கிறது! புதிதாக வருபவர்கள் நிச்சயம் பயந்து போவார்கள். சண்டாளனின் முகமூடியும், வாத்திய முழக்கங்களும் கலவரப்படுத்துகின்றன. அதேபோல் நாடக பாத்திரங்கள் நம்பியைத் தரிசிக்கப் போகும் காட்சியில் உண்மையாகவே மேடையை விட்டு இறங்கி, எதிரே உற்சவ மூர்த்தியாக அமர்ந் திருக்கும் நம்பியின் முன்னால் சென்று அங்கு நாட்டியம் ஆடுகிறார்கள். ஓர் இடத்தில் உட்கார்ந்தோமா, நாடகம் பார்த்தோமா என்று இல்லை. எழுந்து ஓடி ஒதுங்கி பார்க்க வேண்டும்.

இவ்வளவு தொன்மையும் வித்தியாசமான காட்சியமைப்பும் வாய்ந்த இந்த நாடகம் அழிந்து போய்விடும் நிலையில் இருந்ததை பிரபல நாட்டிய கலைஞர் அனிதா ரத்னத்தின் கவனத்திற்குக் கொண்டு வர, அவர் எடுத்துக்கொண்ட முயற்சி யில் தற்போது புத்துயிர் பெற்று நடைபெற்று வருகிறது.

நாடகத்தின் கதை என்னவோ ரத்தினச் சுருக்கம்தான். ஆனால் இனிமை யான கர்னாடக சங்கீதமும் சிறப்பான நாட்டியமும் ஐந்து மணி நேரத்துக்கு மேல் இழுத்துச் செல்கின்றன.

கைசிக ஏகாதசி (கார்த்திகை மாதத்தில் வரும் ஏகாதசி) விரதம் இருந்த நம்பாடுவான் என்ற பாணன், விரதத்தை முடிக்கும் முன் அழகிய நம்பியைத் தரிசிக்க கோயிலை நோக்கிப் புறப்படுகிறான். வழியில் ஒரு ராட் சதன் அவனைக் கொன்று தின்னப் போவதாக சொல் கிறான். பாணனோ நான் சுவாமியைத் தரிசித்துவிட்டு வந்தபின் என்னை உண்ணலாம் என்று மன்றாடு கிறான். ஆனால் ராட்சதனுக்கு மனசில்லை. நீண்ட விவாதத்துக்குப் பிறகு ஒப்புக்கொள்கிறான். சொன்ன மாதிரியே நம்பாடுவான் விரதத்தை முடித்து விட்டு ராட்சதனை நோக்கிப் புறப்படுகிறான். நம்பிக் கடவுளே ஒரு மனித உருவெடுத்து நம்பாடுவானைத் தடுத்து, உயிர் பிழைக்க வேறு பாதையில் செல்லச் சொல்கிறார். பாணன் தான் செய்த சத்தியத்தில் நிலைத்து நிற்கிறான். நம்பி, தன் தெய்வ பலத்தால் ராட்சதனின் பசியைப் போக்கி விடுகிறார். ராட்சதனுக்குப் பசி போய்விட்டதால் பாணனிடம் அவன் பெற்ற புண்ணியத்தில் பங்கு கேட்கிறான். பாணன் மறுக்க, மீண்டும் விவாதம். கடை சியில் ராட்சதன் பாணனின் காலில் விழ, நாடகம் முடிகிறது. நாடகம் தொடங் குவதற்குச் சற்று முன்னால் பரம்பரை பரம்பரையாக நம்பாடுவான் வேடம் போட்டுக் கொண்ட ஒரு மூதாட்டி அளிக்கும் மாலையைப் பரம்பரை நட்டுவனார் பெற்றுக் கொள்ள, நாடகம் தொடங்குகிறது. மற்ற நாடகங்களைப் போல் தனித்தனியாகப் பாத்திர அறிமுகங்கள் இல்லாமல் நேரடியாகக் கதை தொடங்கிவிடுகிறது. வைணவ தலத்தில் பிள்ளை யார் துதிக்கு ஏது இடம்?



• சண்டாளன் வரும் காட்சி!

"திருக்குறுங்குடியைச் சேர்ந்த எங்கள் குடும்பத்தினர் பலருக்கு, கைசிக ஏகாதசி நாட்டிய நாடகத்தைப் பற்றித் தெரியவில்லை. ஒருநாள் என் அலுவலகத்துக்கு வந்த பேராசிரியர் ராமா னுஜம் இதைக் குறிப்பிட்டார். அந்தக் கேள்வியே என்னை வியப்பில் ஆழ்த்தியது. இன்றைக்கு இதன் உன்னத வடிவைப் பார்க்கும்போது எங்கள் ஊரின் சிறப்பம்சத்தை எப்படி விட்டு விட்டோம் என்று பதைபதைக்க வைக்கிறது" என்கிறார் இந்நாட்டிய நாடகத்தை நடத்திவரும் அனிதா ரத்னம்.

- மெலட்டூர் இரா. நடராஜன்



# வி.ஆர்.எஸ் வாங்கிக்கொண்

தும்புரு

முத்துஸ்வாமி தீக்ஷிதரின் 'மீனாக்ஷி மேமுதம் தேஹி' கீர்த்தனைக்கு ஒரு தனி அந்தஸ்து உண்டு. அதிலே இடம் பெறும் 'மீனலோசனி பாச மோசனி' என்ற அடியைப் பாடிக் கொண்டிருக்கும்போதே அவர் உயிர் பிரிந்தது என்பார்கள்.

மீன் விழியாளான மதுரை மீனாக்ஷி தனது பார்வையின் கருணையினாலேயே பந்த - பாசங்களைப் போக்கி நற்கதியை அளிப்பவள் என்று பொருள் கொள்ளலாம்.

தீக்ஷிதர் பாடியது சம்ஸ்கிருதத்தில். எனவே பாச மோசனி என்பதிலுள்ள 'ச'வை சமஸ்கிருத 'ச'வாக 'ஸ'வுக்கும் 'ஷ'வுக்கும் இடையிலான ஒலியில் உச்சரிப்பதே சரி. இந்த பாச மோசனியை 'பாஸ' மோசனியாக்கினால் அர்த்தம் ஃபெயிலில் ஆகிவிடும்! இது ஷீனியர் - மன்னிக்கவும் - ஸீனியர் வித்வான்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம்.

லக்ஷ்மி ரங்கராஜன் இது விஷயத்தில் நமது எதிர்பார்ப்பைப் பொய்க்கச் செய்துவிட்டார்! எனினும் ஒரு பெரிய ஆறுதல் - அனேகம் பாடகர்கள் வழக்கமாக அந்த அடியை நிரவலுக்கு எடுத்துக்கொண்டு திரும்பத் திரும்பப் பாடுவார்கள். இந்திய அணி காட்சுகளை டிராப் செய்யும் லாகவத்துடன் லக்ஷ்மி இந்த நிரவலை டிராப் செய்துவிட, பாச மோசனி பிழைத்துப்போனாள்.

ஸாமா வர்ணம், ஸ்ரீ மஹாகணபதிம் பஜேஹம் (அடாணா) என்று இரண்டு பிரகாசமான உருப்படிகளுடன் ஆரம்பித்தது லக்ஷ்மியின் கச்சேரி (சபா: சங்கீதாலயம்; அரங்கம்: ராக்சுதா)

மூன்றாவது பாட்டாக 'எந்நேரமும் உந்தன்' என்ற தேவகாந்தாரி ராக பாடலை ஆவலாய்த்தான் எடுத்தார் லக்ஷ்மி; ஆனால் அது எடுபட மறுத்து உட்கார்ந்துவிட்டது.

இந்த ஸ்பீட் பிரேகரை மறந்துவிட்டு, மூன்றாவதாக லக்ஷ்மி மலையமாருதம் ஆலாபனை பாடியதாகக் கற்பனை செய்து கொண்டால் அதுவரையிலான கச்சேரிக்கு நல்ல மதிப்பெண் தரலாம்.

அதன்பிறகு வயலின் எச்.என். பாஸ்கர் மலையமாருதத்தை ஃபாஸ்ட் பார்வார்டில் ஓட்ட, 'கற்பக மனோகரா' என்ற பாபனாசம் சிவன் கீர்த்தனைக்கு நிரவல் ஸ்வரம் வேறு பாடினார் லக்ஷ்மி. அத்தனை அலங்காரங்களையும் தாங்கிக் கொள்ள முடியாமல் அந்த மலையமாருதம் அப்பாடி என்று படுத்துவிட்டது!

'அங்காரகமாச்ரயாம்யகம்' என்ற தீக்ஷிதரின் நவக்ரஹ கீர்த்தனையைத் தொடர்ந்து மோகனம்... ஆத்மார்த்தமாக ஆரம்பித்த ஆலாபனை அவ்வப்போது கேளிக்கைப் பாதைகளில் திசை திரும்பி, கடைசியில் காணாமலே போய் விட்டதுதான் சோகம். அதைக் கண்டுபிடிக்கிறேன் என்று புறப்பட்ட எச்.என். பாஸ்கர் கடைசியில் மோகன கல்யாணியைக் கண்டுபிடித்தது அதைவிட சோகம்!

மோகனத்தில் 'ஜகதீச்வரி கிருபைபுரி' என்ற கிருதி மிகச் சுமார் ரகம்.

பிரதான ராகமான பூர்வி கல்யாணிக்கு வரும்முன் லலித பஞ்சமம் என்ற ராகத்தில் 'பரம புருஷம்' என்ற பாட்டை காகிதத்தைப் பார்த்து ஒப்பித்தார் லக்ஷ்மி. தவறாகப் பாடுவதைக் காட்டிலும் காகிதம் பார்த்துப் பாடுவது மேல் என்று வாதிடலாம். ஆனால் கர்நாடக சங்கீதத்தில் உயிரே ஹ்ருதய பாவத்தில்தானிருக்கிறது. வார்த்தைகளை உள்ளத்தில் பதித்துக் கொள்ளாமல் நாவால் உச்சரிக்கும்போது ஹ்ருதயபாவம் வி.ஆர்.எஸ்ஸில் எழுதிக் கொடுத்துவிட்டு வீட்டுக்குப் போய் விடுகிறது!

பூர்வி கல்யாணியில் நிரவல் செய்யாததால் இரண்டு மணி நேரக் கச்சேரி ஒரே நிரவலுடன் முடிந்துவிட்டது. கற்பனை ஸ்வரங்களைத் தொடர்ந்த தனியாவர்த்தனத்தில் நெய்வேலி ஸ்கந்த சுப்ரமண்யம் சுவாரஸ்யமான கணக்குகள் வாசித்தார்.

இடையூறு செய்யாத இதமான, மிதமான வாசிப்பு.





பளிச்சிடும் தனித்தன்மை

# ற்றுதயமாவும்!

மிடில் லெவல் கலைஞர் என்று அருணா ரங்கநாதனைக் குறிப்பிட்டுப் பேசினார் நாத இன்பம் செயலாளர் எஸ்.வி. கிருஷ்ணன். அந்த நிலையிலான பாடகர்களின் அவஸ்தைகளை மறைமுகமாகச் சுட்டிக் காட்டினார்.

எல்லோருமே எம்.எஸ். சுப்புலக்ஷ்மிகளாகிவிட முடியாதுதான். ஆனால் ஒரு கலைஞர் எடுத்த காரியத்தில் முழு மனது செலுத்திச் செயல்பட வேண்டும் என்று விமர்சகர்கள் மட்டுமல்ல, ரசிகர்களும் எதிர்பார்க்கிறார்கள். அடுக்கடுக்காக காகிதங்களுடன் மேடையேறினார் அருணா ரங்கநாதன். (சபா: நாத இன்பம், அரங்கம்: ராக சுதா)



கச்சிதம் எங்கே?

பரம நிதானம்; பழைமை என்ற பிருந்தா- முக்தா பாணியின் அடையாளங்களை பலங்களாக மாற்றிக் கொள்ள அசுர உழைப்பு தேவை; இல்லாவிட்டால் அவையே கலைஞரின் பலவீனங்களாகிவிடும். அருணா ரங்கநாதனின் இசை இந்த அபாயத்தில்தான் சிக்கியிருக்கிறது.

தேவமனோஹரி, ஸாவேரி ஆலாபனைகள். எழுச்சியூட்டக் கூடிய ராகங்கள் அல்ல. அங்கங்கே அழகான சஞ்சாரங்கள் கேட்டாலும் அசைபோடும் அளவுக்கு எதுவும் இல்லை.

வினவே ஓ மனஸா, குலபிருதுனு, தேவி பாவனி போன்ற அதிகம் பாடப்படாத கிர்த்தனைகளை இந்தக் கச்சேரியில் கேட்க முடிந்தது.

அருணா கற்பனை ஸ்வரம் பாடுகிறபோது படுகிற டென்ஷன் நம்மையும் பற்றிக் கொள்கிறது. காம்படிஷனில் பாடும் குழந்தை போல் அவஸ்தை. போதும் என்று கும்பிடத் தோன்றுகிறது.

இதெல்லாம் என்னைப் பாதிக்கவில்லை என்பதுபோல் குனிந்த தலை நிமிராமல் வயலின் வாசித்த இளம் பெண் அக்கரை சுபலக்ஷ்மி நிச்சயமாக 'மிடில் லெவல்' கலைஞரில்லை. இவருடைய தேவமனோஹரி ஆலாபனையில் தீர்மானமான அக்கரை முத்திரை பதிந்திருந்தது. ஸாவேரி, மெருகு போட்ட பழங்கால நகையாக ஜொலித்தது. வாசிப்பில் அழுத்தமும் இனிமையும் சுத்தமும் தனித்தன்மையும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற கலைஞர். அக்கறையுடன் கவனிக்கப்பட வேண்டிய இசைச் செல்வி!

மிருதங்கம் வாசித்த டி. ராஜகோபால் பொறுமை காத்து தனியாவர்த்தனத்தின் போது 'உள்ளேன் ஐயா!' என்று பதிவு செய்துகொண்டார். ○

# இவர்கள் கச்சேரி செய்தால்...



"சிங்கால் சென்று
செல்வியைச் சந்தித்தால்
எங்களைச்
சந்தேகிக்கலாகுமோ?
கிளியே! சற்றும் சூதறியா
சத்தியசந்தர்களான
எங்களை
நிந்திக்கலாகுமோ?"

ஆடுவோமே
பள்ளு பாடுவோமே
அசல் இந்தியப்
பிரஜையாக உரிமை
பெற்றோமென்று
ஆடுவோமே...



"அழைக்கிறதே அழைக்கிறதே
ஆண்டிப்பட்டி! இழுக்கிறதே
இழுக்கிறதே முதல்வர் பதவி!
புறப்பட்டேன் புறப்பட்டேன்
ரதத்தில் ஏறி! இனி இல்லை இனி
இல்லை கோர்ட்டு கச்சேரி!"



"தாயே!
தாயே!
தாயே!



"இதுக்குமேல ஒரு
வார்த்தை பாடக் கூடாதுன்னு
மேலிடத்து உத்தரவாம்.

கௌதம் ராம்

# அன்னை

## மருத்துவமனை

சித்தா, அக்குபங்சர் மற்றும் யோகா

(ஃபிஸியோதெரபி இணைந்தது)

ANNAI INSTITUTE OF ALTERNATIVE MEDICINE

தங்கி சிகிச்சைப் பெறும்வசதிகளுடன் கூடியது

ஐந்து சிறப்புப் பிரிவுகள்

- சித்தா - மருந்து செய் நிலையம் இணைந்தது
- அக்குபங்சர் • யோகா
- ஃபிஸியோதெரபி • மசாஜ்தெரபி

பஞ்சகர்மா மற்றும் வீயாட்கு சைனீஸ் மசாஜ்

(Treatment & General Body Massage)

**House visits undertaken for Physiotherapy & Massage**

11, வாசன் தெரு, தியாகராயநகர், சென்னை - 17.

(பனகல் பார்க் - ஏ.ஆர். ஆர். வளாகம் அருகில்)

✆ 8142988

*A holistic approach to health care*

அனைத்து வாத நோய்களுக்கும் முழுமையான தீர்வு

**பக்க வாதம்**
PARALYSIS

**மூளை வளர்ச்சிக் குறைவு**
CEREBRAL PALSY

**மூட்டுவலி**
ARTHRITIS

**கழுத்து வலி**
CERVICAL SPONDYLITIS

**இடுப்பு வலி**
LUMBAR SPONDYLITIS

**ஆஸ்துமா, சைனஸ்**
ASTHMA, SINUSITIS

**கர்ப்பப்பை கட்டிகள் & நோய்கள்**
GYNECOLOGICAL COMPLAINTS

**சிறப்புச் சிகிச்சை :**

- சர்க்கரை நோய் மற்றும் சிறுநீரகக் கற்களுக்கு ஹெர்பல் சிரப்



**ADMISSION NOTIFICATION**

# NATIONAL INSTITUTE OF LABOUR EDUCATION & MANAGEMENT (NILEM)

Offers the following **Six Months Diploma Courses** by Correspondence

- TOTAL QUALITY MANAGEMENT & ISO 9000
- BUSINESS MANAGEMENT
- PERSONNEL MGMT. & INDL. RELATIONS
- HUMAN RESOURCES DEVELOPMENT
- ENVIRONMENT & POLLUTION CONTROL
- QUALITY CONTROL & ISO 9000
- ENVIRONMENTAL MGMT. ISO 14000/14001
- PRODUCTION MANAGEMENT
- SALES & MARKETING MANAGEMENT
- INTERNATIONAL BUSINESS MANAGEMENT
- QUALITY ASSURANCE & ISO 9000
- LABOUR WELFARE
- BUSINESS ADMINISTRATION
- FINANCIAL MANAGEMENT
- MATERIALS MANAGEMENT
- EXPORT & IMPORT MANAGEMENT
- QUALITY ASSURANCE & QS 9000
- INDUSTRIAL SAFETY
- LABOUR LAWS
- OFFICE ADMINISTRATION
- CONTRACTS MANAGEMENT
- FIRE & SAFETY MANAGEMENT
- INDUSTRIAL LAW
- HOSPITAL ADMINISTRATION

No formal qualification is required for joining the courses. Each diploma has 4 written papers. Tuition Fee Rs. 800/- (Including Study Materials & Model Question Papers). Examination will be conducted in all major centres in India. For detailed Prospectus & Application Form send Rs. 30/- by D.D./M.O./I.P.O. in favour of **NATIONAL INSTITUTE OF LABOUR EDUCATION & MANAGEMENT** and apply to **NILEM**, No. 59, 2nd Street, Parameswari Nagar, Adyar, Chennai - 20. ✆ : 4911443 E-mail : nilem@rediffmail.com

கல்லூரியின் பெயரே பூங்கா கலை அறிவியல் கல்லூரி! பெயருக்கேற்ப கண்களைக் கவரும் விதவிதமான செடிகள்! அவை பூத்துச் சொரிந்து கொண்டிருந்தாலும், கல்லூரிக்குள் நுழைந்ததும் நம் நாசியைத் துளைத்தது பூக்களின் வாசனையல்ல... மசாலா மணம்! உமிழ்நீர் அருவியை உருவாக்கிய அந்த மசாலா வாசனையை மோப்பம் பிடித்தபடி நடந்தோம்! கடைசியாய் நாம் போய் நின்றது கல்லூரியின் கேட்டரிங் அண்ட் ஹோட்டல் மேனேஜ்மென்ட் துறை! அங்கே வகுப்பறையே ஒரு நவீன சமையல்கூடமாக மாறியிருந்தது! தலையில் வெண் நிறக் கூம்புத் தொப்பியும் (Touqe) உடம்பில் வெண்நிற மேலங்கியும் அணிந்து நவீன நளனைப் போல வல்லாரை சூப் செய்துகொண்டிருந்தார் டேவிட்!

அன்றைய வகுப்



• கிருஷ்ணா சைதன்யா

# கல்லூரி வைரம்



• டேவிட்



• மாரியப்பன்



பின் டெமோ ரெசிப்பிகளில் அதுவும் ஒன்று. நாம் தேடி வந்த கல்லூரியின் தலைமை வைரம் இவர்! "சூப் சாப்பிட்டுவிட்டு நம்ம கை ருசி எப்படியென்று சான்றிதழ் தாருங்கள்!" என்ற டேவிட், கழுத்தில் டைகட்டி நட்சத்திர விடுதி பேரர் தோற்றத்தில் இருந்த தம் சக வகுப்புத் தோழர் கிருஷ்ண சைதன்யாவை அர்த்தமுடன் பார்த்தார்.

அவர் நம்மைப் பக்கத்து வகுப்பறைக்கு அழைத்துப்போனார். அந்த வகுப்பறையோ மாடல் ரெஸ்டாரெண்டாக இருந்தது! எக்கச்சக்க அலங்காரத் தோற்றத்துடன் இருந்த

# பூக்கள் நிறைந்த கல்லூரியில் மசாலா வாசம்!

டைனிங் டேபிளில் அமர வைத்துவிட்டுப் போனவர், அடுத்த சில நொடிகளில் செவ்வக ட்ரே ஒன்றை ஒற்றைக் கையால் லாவகமாய்த் தாங்கியபடி வந்தார். ட்ரேயிலிருந்து இரண்டு சூப் நிரம்பிய கிண்ணங்களை நமக்கும் புகைப்படக்காரருக்கும் கனிவுடன் வைத்து விட்டு புன்சிரித்தார். ஒரு மிடறு சூப்பை சுவைத்தோம். ஆ... என்ன சுவை! ஆனால் டேவிட், கிருஷ்ணா இருவரின் பேச்சும் அதைவிட சுவையாக இருந்தது. முதலில் பேச்சைத் தொடங்கியது டேவிட்தான்!

“நான் மூன்றாமாண்டு கேட்ரிங் அண்ட் ஹோட்டல் மேனேஜ்மெண்ட் படிக்கிறேன். எல்கேஜியிலிருந்து இன்றுவரைக்கும் மிஸ் சகுந்தலா ஷர்மாதான் என்னை படிக்க வைக்கறாங்க! சென்னை மைலாப்பூரில் இருக்கும் சில்ட்ரன்ஸ்கார்டன் ஸ்கூலின் தாளாளர் அவங்க, என்னை மாதிரி நூற்றுக் கணக்கான பேரை ஆளாக்கி விட்டிருக்காங்க! பூங்கா கல்லூரியில் நன்கொடை கிடையாது. கல்வி கட்டணம் மட்டும்தான். அதனால்தான் இங்கே வந்து படிக்கிறேன்'' என்று சொல்லும் டேவிட், கல்லூரியில் விழாக்களை ஏற்பாடு செய்வதில் தொடங்கி, துறைகளுக்கு இடையே ஒரு மக்கள் தொடர்பாளரைப் போல செயல்படுவதுவரை, தேர்ந்தெடுக்கப்படாத ஒரு மாணவர் தலைவர் போல இருக்கிறார்.

கிருஷ்ணசைதன்யா இதே படிப்பில் இரண்டாமாண்டு மாணவர். கல்லூரிகள் அளவிலான நீச்சல் போட்டிகளில் பரிசுகளை அள்ளி வந்திருக்கும் கிருஷ்ணா, மாயாஜால் என்ற பொழுதுபோக்கு நிறுவனத்தில் பகுதி நேரம் பணியாற்றிக் கொண்டு, படிக்கும்போதே பணம் சம்பாதிக்கும் கெட்டிக்காரர்.

“கேட்டரிங் படிக்கிற ஒவ்வொருத்தரும் கட்டாயம் பிரெஞ்சு மொழி படிச்சே ஆகணும். ஏன்னா பிரெஞ்சு மெனுஸ் இந்தப் படிப்பில் அதிகம்'' என்கிறார்.

டேவிட் _ கிருஷ்ணா, விருந்தோம்பலில் இருந்து விடுபட்டு கல்லூரியின் மைதானத்திற்குள் நுழைகிறோம். அங்கே ஓட்டப் பயிற்சியில் ஈடுபட்டிருந்தவர் மாரியப்பன். மின்னணு அறிவியல் படிக்கும் இரண்டாமாண்டு மாணவர். மகாபலிபுரம் அருகே, உத்தண்டி என்கிற கடற்கரை



• அபிஷேக், மலர்விழி, அருணா, சரண்யா



"உன் பாய்ஃபிரண்டு சேகரை ஏன் கை கழுவிட்டே...?"

"பாய்ஃபிரண்டாக இருக்கக்கூட வர தட்சணை கேட்கிறான்!"

கிராமத்தில் இருக்கும் பூங்கா கலை அறிவியல் கல்லூரியின் முகவரியைத் தேசிய அளவில் பிரபலப்படுத்தியவர். இருபத்து இரண்டு மாநிலங்களுக்கு இடையே நடந்த ஓபன் ரிலே போட்டியில் தமது குழுவுக்கு முதல் பரிசைத் தட்டிக் கொண்டு வந்திருக்கும் குழு கேப்டன். இது தவிர இருநூறு மற்றும் நானூறு மீட்டர் பந்தயங்களிலும் கல்லூரிகள் அளவில் முன்னணியில் இருப்பவர். "வரும் டிசம்பர் இருபத்தாறு அன்று தஞ்சையில் நடைபெற இருக்கும் மாநில அளவிலான ஓட்டப் பந்தயப் போட்டிகளுக்கு நம்பிக்கையோடு போகிறேன். வெற்றியோடு திரும்புவேன்" என்று சொல்லும் மாரியப்பன், "நான் இந்த அளவு வளரக் காரணமாக இருந்தவர் எனது பயிற்சியாளர் ரியாஸ்தான்" என்கிறார். அவரிடம் கை குலுக்கிவிட்டு, கல்லூரியின் மாணவர் ஜமா ஸ்பாட்டிற்கு வந்தோம்.

ஒரு டஜன் ஊஞ்சல்கள் தொங்கிக் கொண்டிருக்க, ஒரு ஊஞ்சலில் ஜாலியாக ஆடியபடி நமக்காக காத்திருந்தனர் மூன்று மாணவிகளும் ஒரு மாணவரும்.

மாணவர் அபிஷேக் முதலாண்டு அறிவியல் மாணவர். "சொந்த ஊரான கொல்கத்தாவிலிருந்து, அப்பாவின் வேலை நிமித்தம் தமிழகத்தில் குடியேறி வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நான் வளர்ந்தது எல்லாம் சென்னையில்தான், எனவே தமிழகத்தை எனது சொந்த மாநிலமாக நினைக்கிறேன். இங்கே இருக்கும் மாறாத கலாசாரம் தமிழகம் மீதான எனது காதலை அதிகரிக்கச் செய்கிறது" எனும் அபிஷேக் படிப்பிலும், பழகுவதிலும் கல்லூரியின் முன்மாதிரி மாணவர் என்று சான்றிதழ் தருகிறார்கள்.

மலர்விழி கள்ளமில்லாமல் அடிக்கடி சிரித்துக்கொண்டேயிருக்கும் பிசிஏ இறுதியாண்டு மாணவி. படிப்பில் கெட்டி! படபடப்பான பேச்சிலும் கட்டி! "பேருந்துகளிலும், வீட்டுக்குச் செல்லும் வழிகளிலும் ஈவ்டீசிங்கில் ஈடுபட்ட பல குறும்பர்களை, அடித்து உதைத்து அனுப்பினேன். எனக்கு மட்டுமல்ல; என் கண் முன்னால் மற்ற மாணவிகளுக்கு இப்படி அநியாயம் நடந்தாலும் பார்த்துக்கொண்டு சும்மா இருக்க மாட்டேன்" என்கிறார் இந்த துணிச்சல் திலகம்!

வங்கி மேலாண்மை படிப்பில் இறுதியாண்டு படிக்கும் அருணா, கல்லூரியின் நடன மாமணி. இவர் லதா ரஜினிகாந்தின் 'தயா பௌண்டேஷன்' நடத்திய நடனப் போட்டியில் மாநில அளவில் முதல் பரிசைத் தட்டி வந்து கல்லூரிக்குப் பெருமை சேர்த்திருக்கிறார்.

மூன்றாமண்டு - வணிகவியல் படிக்கும் சரண்யா பல்வேறு பரிசுப் போட்டிகளில் பரிசுகளைத் தட்டி வந்திருப்பவர். ஆனால் ரத்தினச் சுருக்கமாய் நறுக்கென்று பேசுகிறார். "பி.காம்தானே... அஞ்சல் வழியில் படிக்கிறேன்னு சொன்னேன். ஆனால் கல்லூரி போய் நிறைய நண்பர்கள் கூடப் பழகி, சமுதாயத்தைப் புரிஞ்சுக்கோன்னு அப்பா அம்மா கல்லூரியில் சேர வெச்சாங்க! அவங்க சொன்னது ரொம்ப சரி... இந்த மூணு வருஷ கல்லூரி வாழ்க்கையில் வெறும் படிப்பு மட்டுமில்லே, மனிதர்களைப் படிக்க கத்துக்கிட்டேன்..." என்கிறார்.

கடலலைகளின் பின்னணியில் பசுமை சூழ்ந்து காணப்படும் பூங்கா கலை அறிவியல் கல்லூரியில், தரமான கல்வி வழங்கப்பட்டும் மாணவர் எண்ணிக்கை குறைவாக இருப்பது ஏன்? என்ற கேள்வி எழ, அதற்கும் மாணவர்களே பதில் தந்தார்கள்! இங்கே எந்தப் பேருந்தும் நிறுத்தப்படுவதில்லை. ஒன்று கல்லூரிக்கு ஒரு கிலோ மீட்டர் முன்னதாக, அல்லது ஒரு கிலோ மீட்டருக்கு அப்பால் பேருந்து நிறுத்தங்கள் இருக்கின்றன. அதனால் மாணவர்கள் வரத் தயங்குகிறார்கள்!"

- ஆர்.சி. ஜெயந்தன்

படங்கள்: ஸ்ரீஹரி

பத்திரிகையாளர்களைத்
தாக்கினதுக்காக இந்த மெடல்.
அம்மா கொடுத்த மெடல்களோட
இதையும் குத்திக்குங்க....

பிரஸ் கவுன்சில்



2001 டிசம்பர் 16
விஷு மார்கழி 1
மலர் : 60
இதழ் : 20

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கடவுளின் கருணை!!!

தேர்தலில் மக்கள் அ.தி.மு.க.வுக்குப் பெருவாரியாக வாக்களித்து ஆட்சியில் அமர்த்தினால், ஜெயலலிதா மீது தொடரப்பட்டுள்ள வழக்குகளின் போக்கே திசைமாறி பிசுபிசுத்துப்போகும் என்று கருதினோம். அவ்வாறே நடந்திருக்கிறது.

டான்ஸி வழக்கு தொடரப்பட்டது முதல் அதைச் சந்திக்காமல் இழுத்தடித்து வந்த ஜெயலலிதா, 2001 சட்டமன்றத் தேர்தலில் வென்ற பிறகு அதே வழக்கை நடத்தவும் சந்திக்கவும் ஒரேயடியாக அவசரம் காட்டினார்.

அ.தி.மு.க. ஆட்சிக்கு முந்தைய காலகட்டத்தில் சாட்சிகளாக ஆஜரானவர்கள் பலர், ஆட்சி மாறியதுமே அந்தர்பல்டி அடித்தனர். அரசு தரப்பு வழக்குரைஞர்கள் மாற்றப்பட்டனர். இப்போது டான்ஸி வழக்கில், நாம் எதிர்பார்த்தது போலவே ஜெயலலிதா நிரபராதி என்று உயர்நீதிமன்றத்தில் தீர்ப்பு வழங்கப்பட்டிருக்கிறது. ஜெயலலிதா கூறுவதுபோல் கடவுளின் கருணையால் விளைந்த தீர்ப்பாக இது இருக்கலாம்; ஆனால் பன்னீர் செல்வம் சொல்வதுபோல் இத்தீர்ப்பு தர்மத்தின் வெற்றி அல்ல; தர்மத்தின் படுகொலையே!

நீதிபதி தினகரின் தீர்ப்பு பின்வரும் அம்சங்களை வலியுறுத்துகிறது:

- சட்டம் வேறு; நெறிமுறைகள் வேறு. சட்டப்படி குற்றம் எதுவும் நிகழவில்லை. அரசு ஊழியர், அரசு நிலம் வாங்கக் கூடாது என்பது சட்டமல்ல; நெறிமுறைதான். எனவே டான்ஸி நில




பேரத்தில் சட்டம் மீறப்படவில்லை.

● டான்ஸி நிறுவனம் அரசு நிறுவனமே அல்ல. எனவே அரசு நிலம் அரசு ஊழியரால் வாங்கப்பட்டது என்ற குற்றச்சாட்டுக்கே இடமில்லை.

● நிலத்தின் சந்தை மதிப்பு என்பது அவரவர் பார்வையில் வேறுபடும். வழிகாட்டல் **(guideline)** மதிப்புக்கும் அதற்கும் தொடர்பில்லை.

· இவ்வாறு டான்ஸி வழக்கின் தீர்ப்புக்குக் காரணங்கள் அல்லது அடிப்படைகள் பட்டியலிடப்பட்டுள்ளன.

டான்ஸியும் அதைப் போன்ற வேறு பல நிறுவனங்களும் தமிழக அரசால் உருவாக்கப்பட்ட, சுய அதிகாரம் பெற்ற அமைப்புகள். அவற்றைத் தோற்றுவிப்பதும் அரசுதான்; இழுத்து மூடுவதும் அரசுதான். அவை அரசாங்க கொள்கைகளின் அடிப்படையில்தான் இயங்கியாக வேண்டும். அதற்காகத்தான் ஐ.ஏ.எஸ். அதிகாரி ஒருவருக்கு அந்நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பு தரப்படுகிறது. கோப்புகள் முதல்வர் பார்வைக்குச் சென்று வருகின்றன. எனவே, டான்ஸி போன்ற நிறுவனங்கள் அரசு நிறுவனங்கள் அல்ல என்று கூறுவது சட்ட ரீதியாக வேண்டுமானால் சரியாக இருக்கலாம்; ஆனால் அரசுக்கு அவற்றின் இயக்கத்தில் சர்வநிச்சயமாகத் தார்மிகப் பொறுப்பு இருக்கிறது.

தார்மிகப் பொறுப்பு என்கிற பண்புக்கு இன்று பொது வாழ்க்கையில் அடியோடு மதிப்பே இல்லை என்கிற பயங்கர உண்மையைத் தான் டான்ஸி வழக்கு தீர்ப்பு அடிக்கோடிட்டுக் காட்டுகிறது. சட்டம் வேறு, நன்னடத்தை விதிமுறைகள் வேறு; அரசு ஊழியர், அரசு நிலம் வாங்குவதில் சட்ட மீறல் இல்லை என்கிற வாதம் தார்மிக நெறிகளை, தர்மத்தைப் புறக்கணிக்கிற வாதமாக அமைந்திருக்கிறது.

நாளை அரசு அதிகாரிகள் பலரும் அரசு நிலங்களைச் சொந்தப் பணத்திலோ அல்லது லஞ்சப் பணத்திலோ வாங்க ஆரம்பிக்கலாம். நெறிமுறைகள் வேண்டுமானால் புறக்கணிக்கப்பட்டிருக்கலாம், ஆனால் சட்டரீதியாக அது தவறில்லை என்று வாதாட வழி பிறக்கிறது.

சட்டம் என்பது நீதியை நிலைநாட்டுவதற்கான ஓர் ஆயுதம்தான். சட்டத்தின் அடிப்படையில் நீதி வழங்கப்படலாம். ஆனால் தர்மம் தான் இறுதி இலக்காக இருக்க வேண்டும். நமது பொது




வாழ்க்கையில் தர்மத்தைப் புறக்கணிக்கவோ அவமதிக்கவோ சட்டம் வளைக்கப்படுகிறபோது, அதை வளைப்பவர்களுக்கு நீதிமன்றத்தில் பாதுகாப்பு கிடைக்கிற அளவுக்குத் தர்மத்துக்குப் பாதுகாப்பு கிடைப்பதில்லை! அதனால்தான் சென்னை மாநகரின் மையமான பகுதியில் கிரவுண்டு மூன்று லட்சம் ரூபாய் வீதம் ஜெயலலிதா மூன்று ஏக்கர் நிலம் வாங்க முடிகிறது. அது ரொம்ப நியாயம், நீதி என்றும் கருதப்படுகிறது. (இன்று சென்னையில் கிரவுண்டு மதிப்பு அனைவரும் அறிந்ததே)

சட்டத்தை உருவாக்கவும் அது கடைப்பிடிக்கப்படுகிறதா என்று கண்காணிக்கவும் ஜனநாயக அமைப்பில் சட்டமன்றமும் நிர்வாகமும் நீதித்துறையும் இயங்குகின்றன. ஆனால், தர்மத்தையும் உயர் நெறிமுறைகளையும் மரபுகளையும் பாதுகாக்கவும் வலியுறுத்தவும் அமைப்புகள் தோற்று விக்கப்படவில்லை. அவற்றைப் பாதுகாக்காத சட்டம் உயிரற்ற உடல் போன்றதுதான். டான்ஸி, ப்ளெசன்ட் ஸ்டே வழக்கு தீர்ப்புகள் உடலைக் காப்பாற்றி உயிரைப் புறக்கணித்துவிட்டன.

உச்சநீதி மன்றத்தில் சு.சுவாமி அல்லது தி.மு.கழகம் மேல் முறையீடு செய்யலாம். ஆனால், உச்சநீதிமன்றம் அம்மனுவை ஏற்க வேண்டும்; ஏற்றபின் உயர்நீதிமன்றத் தீர்ப்புக்கு இடைக்காலத் தடை விதிக்க வேண்டும்; பின்னர் விசாரணை நடத்தி தீர்ப்பு வழங்க வேண்டும்.

உச்சநீதி மன்றம் உயர்நீதி மன்றத் தீர்ப்பைத் தடை செய்யாத வரையில் ஜெயலலிதா நிரபராதி; தேர்தலில் நிற்கலாம்; மீண்டும் முதல்வராகலாம். நிர்வாகம் என்பதை மருந்துக்கும் காணாத பினாமி முதல்வரின் ஆட்சி தமிழகத்துக்குத் தலைகுனிவு. அதைவிட ஜெயலலிதாவின் நேரடி ஆட்சியே நாட்டுக்கு நல்லது.

பழிவாங்கல் மனப்பான்மை, மோசடி, ஆடம்பரம் போன்றவற்றை ஒதுக்கிவிட்டு மக்கள் நலனை மட்டுமே கருத்தில் கொண்டு ஜெயலலிதா புதிய உத்வேகத்துடன் நல்லாட்சி வழங்கி, தமிழகத்தை முன்னணி மாநிலமாக உயர்த்திக்காட்ட இது ஒரு நல்ல சந்தர்ப்பம். அவ்வாறு செய்வாரானால், அரசியல் ரீதியாக அசைக்கமுடியாத பலத்தைப் பெற்றுவிடுவார்.

அப்படி அவர் நடந்து கொள்ள வேண்டும் என்பதற்காக, ஜெயலலிதா குறிப்பிடும் கடவுளின் கருணையைத்தான் நாமும் இறைஞ்ச வேண்டியிருக்கிறது. ○

# சென்னைத் திருவிழா!

கச்சேரி பஸ்... கச்சேரி புஸ்... என்றெல்லாம் சொல்லுவதைவிட, கச்சேரி BUZZ என்றே சொல்லிவிடுவது நல்லது. இது இசை, நடனம் பற்றிய விஷயங்களுக்காகவே பிரத்யேகமாக நடத்தப்படும் இலவச மாத இதழ். ஜனவரி முதல் நவம்பர் வரை மாத இதழாக வெளிவரும் இந்த இதழ் சென்னையில் சங்கீத சீசன் ஆரம்பித்ததும் நாளிதழாக மாறிவிடுகிறது!

தினமும் மாலை ஆறு மணிக்குக் கச்சேரி நடக்கும் சென்னை நகரத்துப் பிரதானமான பத்து சபாக்களிலும் சுடச்சுட சங்கீத விமர்சனங்கள், செய்திகள் தாங்கிய இந்த இதழ்கள் விநியோகிக்கப்படுகின்றன.

இன்டர் நெட்டிலும், www.kutcheribuzz.com என்று வெளியாகிறது. இதனை நடத்தி வருபவர் சென்னை நகரின் மூத்த பத்திரிகையாளர்களில் ஒருவரான வின்சென்ட் டிசோசா. இவர் கடந்த மூன்றாண்டுகளாக, சீசனின்போது கச்சேரிகள், சபாக்கள், வித்வான்கள் என பல்வேறு தகவல்கள் கொண்ட கையேடு ஒன்றையும் அச்சிட்டு விநியோகிக்கிறார்.

இவ்வாண்டு, சங்கீத சீசன் என்பதையே 'சென்னைத் திருவிழா' என்று பெயர் மாற்றி துண்டுப் பிரசுரங்களாக விநியோகிக்க ஏற்பாடு செய்திருக்கிறார்.

"இப்படி துண்டுப் பிரசுரம் விநியோகம் செய்தால், இசைக் கச்சேரிகளுக்கு புதியவர்களை வரவழைத்து விட முடியுமா?'' என்றால் சிரிக்கிறார் டிசோசா. ஒரு வட்டத்துக்குள் இருப்பவர்களுடன் சங்கீத சீசன் முடிந்து போய் விடுகிறது. பெரிய அளவில் இங்கே நிகழ்ச்சிகள் நடைபெறுகிறபோது பெரும்பாலானோர் அதில் பங்கேற்றுப் பயன் பெற வேண்டும் என்பதே என் விருப்பம்.

''வித்வான்களிடம் தேதி வாங்கினால் வேலை முடிந்தது என்று சபா செகரட்டரிகள் நினைக்கிறார்கள். அவர்கள் என்ன பாடப் போகிறார்கள்? புதிதாக என்ன ஐடியா வைத்திருக்கிறார்கள் என்றெல்லாம் கலந்து விவாதிப்பதே இல்லை. அதனால்தான் சீசன், வெரைட்டி இல்லாமல் டல் அடிக்கிறது.

"டிசம்பர் சீசனின் புரோகிராமை, நவம்பர் இறுதிவரை முடிவு செய்வதில்லை; அப்படியே முடிவு செய்தாலும் விளம்பரம் செய்வதில்லை. ஆகஸ்ட், செப்டெம்பரிலேயே நிகழ்ச்சி நிரலை முடிவு செய்து, விளம்பரம் செய்தால், பல்வேறு நாட்டு ரசிகர்களும் தங்கள் பயணத்தை முன் கூட்டியே திட்டமிட்டு, இங்கே வர சௌகரியமாக இருக்குமில்லையா?

"கர்நாடக இசையோடு கூட வேறுபல நல்ல விஷயங்களையும் இந்த சீசனில் கொடுத்து டூரிஸ்ட்களையும் கவர வாய்ப்பு இருக்கிறது. சங்கீதக் கச்சேரிகள் நடைபெறும் போதே, சில நாட்களுக்குப் 'பட்டுத் திருவிழா' என்று புடைவைக் கண்காட்சி நடத்தலாம். உணவுத் திருவிழா நடத்தலாம்.

















திரைப்படவிழா கூட நடத்தலாம். சமஸ்கிருதத்துக்கு உலகெங்கும் மதிப்பு இருப்பதால், சமஸ்கிருத வகுப்புகள் மற்றும் யோகா பயிற்சி வகுப்புகள் கூட நடத்தலாம். இதெல்லாம் சாத்தியமா? என்று தானே கேட்கிறீர்கள்? மனம் இருந்தால் மார்க்கம் உண்டு" என்று அடுக்குகிறார் டிசோசா.

கச்சேரி BUZZ அப்போது கலைவிழா BUZZ என்று பெயர் மாற்றம் பெறுமோ?

— பாரதி

# நீங்கள் கேட்டவை - தராசு

☐ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
க. சரண்யா
148, பாதாள விநாயகர் கோயில் தெரு, இராயபுரம், சென்னை - 13

● ஆர். குட்டிபிரசன்னா, கரூர்.

? ஆயிரக்கணக்கான வழக்குகள் தேங்கியிருக்கும் நிலையில் கோர்ட்டுகளுக்குக் கோடைவிடுமுறை அவசியமா?

! ஆங்கிலேயர்கள் நீதிபதிகளாக இருந்த காலத்தில் வெயில் தாங்காமல் மலை வாசஸ்தலங்களுக்குப் போய் ஓய்வு எடுத்துக் கொண்டார்கள். இன்றும் அதையே கடைப்பிடிப்பது அபத்தம்!

● ஆனந்தி ராஜா, மணப்பாறை.

? ஏற்றிய பஸ் கட்டணத்தில் இரண்டு பைசா குறைக்கப்படும். அப்போதுதானே 'பஸ் கட்டணத்தைக் குறைத்த குலவிக்குக்கு நன்றி' என்று போஸ்டர் அடிக்கலாம்..! சரியா சார்?

! ஏற்றிய அவப்பெயர் பன்னீருக்கு; அதைக் குறைத்த நற்பெயர் ஜெவுக்கு என்கிற விசித்திர நிலை!

● ரேவதி சங்கர், சென்னை - 13.

? ஆந்திராவில் நக்ஸலைட்கள் அட்டகாசம் குறித்து..?

! புதிதல்ல. அவ்வமைப்பைத் தடை செய்ய வேண்டும் என்ற அத்வானியின் தாமதமான யோசனைதான் புதிது!

● எஸ். சாந்தி, காட்பாடி.

? பிணைக் கைதிகளை மீட்க தீவிரவாதிகளை விடுதலை செய்யும்போது, பணம் தந்து ராஜ்குமாரை மீட்டிருந்தாலும் அது பெரிய தவறா?

! அப்போதைய நெருக்கடியில் ராஜ்குமார் உயிர் அல்லது பாதுகாப்புக்குப் பங்கம் வந்தால் தமிழக - கர்நாடக விரோதம் பற்றிக் கொள்ளும் என்கிற ஆபத்தான நிலைமையில் வேறு வழியின்றிப் பணம் தரப்பட்டிருப்பின் குறைகூற முடியாதுதான்.

● க.வே. சித்திரவேலு, கருப்பம்புலம்.

? பாராளுமன்றம், சட்டமன்றத்தில் கோஷம் எழுப்பி, சபையின் மையப்பகுதிக்குச் சென்றாலும் தண்டனையாமே?

! இதையெல்லாம்கூட சட்டம் இயற்றி நடைமுறைப்படுத்த வேண்டிய இழிநிலைக்கு நாடு வந்துவிட்டதாக நினைத்து வாக்காளர்கள் நொந்துகொள்ள வேண்டியதுதான்.

● விஜயஸ்ரீ இராஜேசுவரன், மொரட்டுப்பாளையம்.

? பால் விலையும் குடிநீர் விலையும் ஒன்றாக இருப்பது எதைக் காட்டுகிறது?

! நகராட்சிகள் வழங்கும் தண்ணீரைக் குடித்து, வியாதிகளை வரவழைத்துக் கொண்டு டாக்டருக்கும் மருந்துக்கும் அழுவதற்குப் பதில், பால் விலை கொடுத்தாவது குடிநீர் வாங்கலாம் என்று ஏராளமானவர்கள் முடிவு செய்துவிட்டார்கள் என்பதைத்

## பால் விலை - குடிநீர் விலை ஒன்றாயிருக்கிறதே?...

தான்.

● கார்த்திக் அமர்த்தியா, மயிலாடுதுறை.

? எம்.எல்.ஏக்களின் சொத்து விவரங்களை வெளியிடுவதைக் கட்டாயமாக்கக் கூடாது என்று தமிழக சட்டப் பேரவை கருத்து தெரிவித்திருப்பது குறித்து..?

! ஆச்சர்யமில்லை! விரைவில் 'ஜெ'வும் எம்.எல்.ஏ. ஆகப்போகிறார், பாருங்கள்.

● வ. பத்திரகாளி, காவல்கிணறுபுதூர்.

? தொழிலாளர்களுக்கு வழங்கப்படும் போனஸ் அத்தொழிலின் லாபத்தைப் பொறுத்ததா? அல்லது அவர்களது உரிமையா?

! குறைந்தபட்ச போனஸ் அவர்களது உரிமை; அதற்கு மேல் கேட்கும்போது லாபத்தைப் பொறுத்துத்தான் அமையும். அதே நேரத்தில், நஷ்டம் ஏற்படுவதற்குத் தொழிலாளர் காரணமா, தொழில் - பொருளாதார சூழல் காரணமா; அல்லது மோசமான நிர்வாகம் காரணமா என்பதையும் யோசிக்க வேண்டும். வாதப் பிரதிவாதங்கள் இதனால் தான் எழுகின்றன.

● கல்லார் ரஹ்மத், நாகை-1.

? வாய்மை வெல்லும் என்று எழுதப்பட்டிருக்கும் நீதி மன்றங்களிலேயே அது தோற்றுவிடுகிறதே?

! அங்கே தோற்பது வாய்மை அல்ல; அதை நிலைநாட்ட முடியாமல் தோற்கும் சட்டமும் நீதியும்தான்.

● கல்லன் கிருஷ்ணராஜ், குன்னூர் - 5.

? எம்.ஏ.சி. அறக்கட்டளை விருதை முத்துக்கண்ணப்பர், ராஜம் கிருஷ்ணன் ஆகியோருடன் இன்னொருத்தரும்



• வருத்தமா மகாராஜா!

• ஜெயம் ஜெயம்!



• நற்பெயர்...



• ...ரிப்பேர்!



• தாமத யோசனை!





• நெருக்கடி நியாயம்!



• அன்னை அடியார்!

பெற்றிருந்தார். அதைப் பாராட்டி 'முத்தான செலக்ஷன்' என்று தாரக பகுதியில் குறிப்பிட்டதற்கு இப்போது வருத்தபடுகிறீர்களா?

! வெற்றிகரமான தொழிலதிபர் என்ற முறையில் சரவண பவன் ராஜகோபாலுக்கு முன்னர் விருது வழங்கப்பட்டதை இன்று குறை கூற முடியாது. ஜீவஜோதி மௌனமாக இருந்தவரையில் வெளியில் தெரியாதிருந்த விஷயங்கள், அவர் பேச ஆரம்பித்த பிறகுதானே அடிபட ஆரம்பித்துள்ளன.

● வகீகரன், சென்னை - 18.

? விருப்ப ஓய்வுத் திட்டத்தின் கீழ் தமிழக அமைச்சரவை விருப்ப ஓய்வு எடுத்துக் கொண்டால் என்ன...?

! கொஞ்சம் பொறுங்க; ஆண்டிப்பட்டி இடைத் தேர்தல் ஆனதும் ஜெ. பிராண்ட் விருப்ப ஓய்வுத் திட்டம் ஸ்பெஷலாக அறிமுகமாகும்.

● க. சரண்யா, சென்னை - 13. ❐

? இரண்டாயிரம் கோடி ரூபாய்க்கு இரண்டாவது பட்ஜெட் மூலம் வழிவகுத்ததைப் பற்றி முதல்வர் பன்னீர் செல்வமோ நிதியமைச்சர் பொன்னையனோ பேசவில்லை கவனித்தீர்களா?

! அது கிடக்கட்டும்! 6,600 கோடி விற்பனை வரி, அரசால் வசூலிக்கப்படாமலேயே இருக்கிறது என்பதைச் சொன்னார்களா பாருங்கள்! அதை வசூலிக்க வழியில்லாமல் மக்களை இப்படிக் கசக்கிப் பிழிவது வக்கிரமாகவல்லவா இருக்கிறது!

● நா. ஆனந்த், மதுரை - 10.

? கல்கி விமர்சிக்கும் திரைப்படங்கள் (பாண்டவர் பூமி, சாம்ராட் அசோகா) நன்றாக இருந்தாலும் வெற்றி பெறுவதில்லையே, ஏன்?

! நல்ல படங்களை நல்லவிதமாக விமர்சிக்கத்தான் முடியும். போய்ப் பார்ப்பது ரசிகர்கள் வேலை.

● க. கந்தையா, நாகர்கோயில். ✱

? சேலம் ஸ்டீல் பிளான்ட் தொழிற்சாலை தனியார்மயமாகக் கூடாது என்று எதிர்க்கும் கி. வீரமணி, தமிழக போக்குவரத்துத் துறை தனியார் மயமாகவேண்டும் என்று கூறுவது ஏன்...?

! சிம்பிள்! அது பி.ஜே.பியின் முடிவு; இது ஜெ. முடிவு!

● ஆர். எஸ். லக்ஷ்மி, கோவை - 41.

? 63 நாயன்மார்கள்போல் ஏன் பெண் பக்தர்கள் (ஆண்டாள் நீங்கலாக) இறைவனைப் போற்றிப் பாடியதில்லை?

! நாயன்மார்களிலேயே பலர் பெண்கள், உதாரணம் - திலகவதியார்; காரைக்கால் அம்மையார். அவர்களுக்கு முன்னரும் பின்னரும் இறைவனைப் பாடிய பெண் அடியார்கள் பலப் பலர் - ஔவை; வடக்கே மீரா, கர்நாடகாவில் அக்கமகாதேவி, சமீபத்தில் அம்புஜம் கிருஷ்ணா...

● ரூ. 50/- பரிசு பெறுபவர்: க. கந்தையா, 183, சகோதரர் தெரு, நாகர்கோயில் - 629 001.

விருது பெறுவோர் பக்கம்

# சிந்தையில் நிற்கும் சில

நாம் நடைமுறை வாழ்க்கையில் எவ்வளவோ பேர்களையும், எத்தனையோ சம்பவங்களையும் எதிர்கொள்கிறோம். ஆனாலும் சில நிகழ்வுகளும், சில மனிதர்களும் நம்முள் பசுமையாக இடம் பிடித்துவிடுவார்கள்.

சில சப்தங்களைக் கேட்டாலும், சில பொருட்களைப் பார்த்தாலும்கூட அவை நம் நினைவில் மோதுவது உண்டு. இடியோசை கேட்டால் என் பாட்டி டி.கே. பட்டம்மாளுக்கு இன்னும் பயம். இடியோசையை இன்றும் நான் கேட்கும்போது இந்த ஓசைக்குச் சிறு பிள்ளைபோல் பயந்து 'அர்ஜுனா அர்ஜுனா' என்று ஜபிக்கத் தொடங்கும் பாட்டியின் நினைவுதான் வரும்.

அதேபோல் இரயில் பயணங்களில் இரயில் தண்டவாள ஓசை கேட்டால் என் தாத்தா பாலக்காடு மணி அய்யரின் ஞாபகம்தான் வரும். அவர் தனது வாழ் நாளில் பெரும் பகுதியை ரயில் பயணத்திலேயே கழித்திருக்கிறார். அம்மாதிரியான இரயில் பயணங்களில் இரயில் தண்டவாளத்தில் ஓடும்போது ஒலிக்கும் தாள கதியை மனத்தில் வாங்கி - அந்த ஓசையையே நயமான கோர்வைகளாகத் தயார் செய்வாராம். தாத்தாவின் அரிதான, அழகான பல கோர்வைகளுக்கு இத்தண்டவாள ஓசையும் துணை புரிந்திருக்கிறதே என்றெண்ணி வியந்து கொள்வேன்.

இசைக் கலைஞர்கள் வெளியூர்ப் பயணத்தில் சுவையான நிகழ்ச்சிகளை எதிர் கொள்வதுண்டு. இவற்றை வீட்டிற்கு வந்து குடும்பத்துடன் வேடிக்கையாய்ப் பகிர்ந்து

கொள்வதில் தனி சந்தோஷம். எனது பாட்டியும் இது போன்ற பல கவையான சம்பவங்களை எங்களுக்குக் கதை போல, சிரிக்கச் சிரிக்க அழகாகச் சொல்வார்.



டில்லியில் அகில இந்திய வானொலி நிகழ்ச்சி நேர்முகமாக என் பாட்டி டி.கே.பி. பாட ஏற்பாடு ஆகி இருந்தது. மேடையில் பாட்டியும் பக்கவாத்யக் கலைஞர்களும் அமர்ந்து ஆகிவிட்டது. ரசிகர்கள் கூட்டமும் நிறைந்து உள்ளது. குறிப்பாக அப்போதைய ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணனும் எதிரில் அமர்ந்திருக்க, கலைஞர்கள் பெயரும், பாடலின் பெயரும் ஒலி வாங்கியில் அறிவித்துவிட்டார்கள். நீலாயதாக்ஷி' என்ற பரக ராக சியாமா சாஸ்திரிகள் கீர்த்தனையைப் பாட்டி ஆரம்பித்தார். திடீரென்று ஒரே களேபரம், குழப்பம், இரைச்சல். மேடையும் கிடுகிடுவென ஆடுகிறது. மனத்தில் பீதியுடன் ஆனால் பாடுவதை நிறுத்தாமல், பாட்டி இடமும் வலமும் பார்க்க வயிலின், மிருதங்க கலைஞர்கள் இருவரும் வாத்தியத்தைக் கீழே வைத்துவிட்டு, பயமுடன் விழி பிதுங்கி நின்று கொண்டிருக்கிறார்கள். தம்பூரா கலைஞர் போன இடம் தெரியவில்லையாம். நீலாயதாக்ஷி' கீர்த்தனையை விடாமல் பாட்டி பாடிக் கொண்டே இருக்கிறார். இவ்வளவும் சில வினாடிகளில் நடந்து முடிந்தது. அப்படி என்னதான் நடந்தது? டில்லியையே கலக்கிய நில நடுக்கம்!

இது நடந்தது சற்று ஏறக்குறைய 45 வருடங்களுக்கு முன்னால்.

கர்மயோகியாக பாட்டி டி.கே.பி. தான் தொடங்கிய பாடலைத் தொடர்ந்து பாட, அவரது மனோதிடத்தை டாக்டர் ராதாகிருஷ்ணன் மிகவும் சிலாகித்தாராம்.

டில்லி செல்லும் சமயங்களில், நேரடி ஒலிபரப்பு நிகழ்ச்சியின்



போதெல்லாம் இதுதான் என் ஞாபகத்திற்கு வரும்.

தற்போது சில மாதங்களுக்கு முன் சென்னையில் சிறு நில நடுக்கம் ஏற்பட்ட சமயம் நான் ஸ்டுடியோவில் ஒரு பாடல் பாடிக் கொண்டிருந்தேன். தினாவின் இசையில 'மருமகள்' தொலைக்காட்சித் தொடருக்காக. சரணம் பாடி முடிப்பதற்கு முன்பே, தினா சாரும், சவுண்டு இஞ்சினியரும் மற்றும் கூட இருந்தவர்களும் 'வெளியே வாங்க' என்று கூறி ஓடினர். நான் நின்று கொண்டு லயித்துப் பாடிக் கொண்டிருந்ததால் ஒன்றுமே புரியவில்லை. எல்லோரும் வெளியே ஏன் செல்கிறார்கள் என நினைத்து நானும் வெளியே போனபோது

# சங்கதிகள்!



'இசைப் பேரொளி' நித்யஸ்ரீ மகாதேவன்



தான் நில நடுக்கம் ஏற்பட்டது எனத் தெரிந்துக் கொண்டேன். அப்போதும் பாட்டியின் அனுபவம்தான் மனத்திற்கு உடன் நினைவு வந்தது.

ஒரு முறை ஐரோப்பாவில் ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சிக்காக கச்சேரி நடக்கும் தினத்தில் போய்ச் சேர்ந்தேன். பெட்டி ஏனோ மக்கர் செய்ததால் நம்பர் லாக்கை உடைத்தோம். திறந்தால் ஜீன்சும், பாண்டும், மினி ஸ்கர்ட் மயமாக, வேறெதோ வெளிநாட்டுப் பெண்ணின் பெட்டியை மாற்றி எடுத்து வந்துவிட்டது புரிந்தது. கச்சேரியை ஏற்பாடு செய்தவர்கள் உடனே அங்கு வசிக்கும் லோசனி மாமி வீட்டிற்கு அழைத்துச் சென்று மாமியின் புடவையையும் சட்டையையும் நான் அணிந்து கச்சேரியைச் சமாளித்ததை நினைத்தால் இப்போதும் வேடிக்கையாகவும் பரவசம் ஆகவும் இருக்கும். மாமி இல்லை என்றால் ஜீன்ஸ் பான்ட்டில் தான் கச்சேரி அரங்கேறி இருக்கும்!

ஒரு சமயம் சேலத்தில் கச்சேரிக்காக ஏற்காடு எக்ஸ்பிரஸ்ஸில் நானும், பக்க வாத்யக் கலைஞர்களும் பயணம் செய்வதாக ஏற்பாடு. நானும், என் அப்பாவும் இங்கே மற்றொரு கச்சேரியை முடித்துவிட்டு வருவதாக அவர்களிடம் தெரிவித்திருந்தோம். அங்கிருந்து வரச் சிறிது தாமதமாகி, கடைசி நிமிடத்தில் வேறு ஏதோ கோச்சில் ஏறிவிட்டோம். வண்டி கிளம்பி மெல்ல நகர்ந்து கொண்டிருந்த சமயம், வெளியே எட்டிப் பார்த்தபோது சில பரிச்சயமான முகங்கள்- கையை ஆட்டுகிறார்கள்! நானும் ஒரு வினாடி நட்போடு பதிலுக்கு டாட்டா காண்பித்தபோது தான் அவர்கள் தான் நம் பக்கவாத்ய கலைஞர்கள் என்னைக் காணாததால் இறங்கிவிட்டார்கள் என்பது உறைத்தது. அங்கிருந்தே அடுத்த வண்டியில் கிளம்பி வருமாறு கூறி பயணத்தைத் தொடர்ந்தோம். ஒரே குழப்பம் கந்தஸாமியாகிவிட்டது!

வயதான ஒரு பெரியவர் தன் பேத்தியின் திருமண வரவேற்பிற்கு என் கச்சேரி ஏற்பாடு செய்ய வந்தார். அப்போது அவர் தன் திருமணத்திற்கு என் பாட்டி தான் கச்சேரி செய்தார் என்றும், மேலும் ஒரு சம்பவத்தையும் நினைவு கூர்ந்தார். பரமேச்வரன் என்ற அவரது பெயரையும் தனது மனைவியார் - 'பார்வதி' என்ற பெயரையும் இணைத்து 'பராத்பரா - பரமேச்வரா பார்வதிபதே' என்று விஸ்தாரமாக எனது பாட்டி பாடியதைக் கூறிப் புளகாங்கிதமடைந்தார். நான் அவரது பேத்தி கல்யாணத்தில் பாடும்போது 'தேவி நீயே துணை' என்று கீர்வாணி ராக க்ருதியை ப்ரதானமாகப் பாடினேன். இதில் ஆச்சர்யம் என்னவென்றால், அனுபல்லவியில்,

'தேவாதி தேவன் சந்தேரசன் சித்தம் கவர் புவன சுந்தரி' என்று வரும். நான் பாடிய கல்யாண தம்பதியின் பெயரும் 'சுந்தரேசன்' - 'புவனா' என்று அந்தப் பாடலில் இடம் பெற்றதை அவர்கள் கவனித்து மிகவும் பூரித்தனர். இது ஏதேச்சையாக அமைந்த ஒன்று. இந்நிகழ்ச்சி நான் அந்த க்ருதியைப் பாடும் போதெல்லாம் நினைவுக்கு வரும்.

பாட்டியுடன் இலங்கை சென்றிருந்தேன். எனக்கு ஏழு வயதிருக்கும். பாட்டியின் நெடு நாளைய ரசிகர் என்னைப் பாடும்படி கேட்டார். எனக்குத் தெரிந்த ஏதோ இரண்டு பாடல்களைப் பாடினேன். மறு நாள் கச்சேரி முடிந்து விமான நிலையத்திற்கு அனைவரும் கிளம்பும் சமயம் அவர் வந்து ஒரு சிறு பெட்டியைப் பாட்டியிடம் கொடுத்து, 'இந்த சிறு பரிசை உங்கள் செல்லப் பேத்திக்கு அணிவித்து ஆசிர்வதியுங்கள், 'அவர் பாட்டிற்கு என் சிறு அன்பளிப்பு' என்று கூறினார். அது ஒரு சிறு அழகான மோதிரம். என் பாட்டி எனக்கு அதை அணிவித்தார். எனக்கோ ஒரே சந்தோஷம். இப்போதும் என் இசைக்குக்

கிடைத்த முதற் பரிசை நான் பொக்கிஷமாய்ப் பாதுகாத்து வைத்துள்ளேன்.

கச்சேரி செய்ய ஆரம்பித்த சமயத்தில், ஒரு கச்சேரிக்கு வயலின் மேதை டி.என். கிருஷ்ணன் வந்திருந்தார். எனக்கு அவரைப் பார்த்து பயம் கலந்த சந்தோஷமாக இருந்தது. முழு நிகழ்ச்சியையும் ரசித்துக் கேட்டு விட்டு என்னை ஆசிர்வதித்துவிட்டு, ஹைதராபாத்தில் ஒரு கச்சேரி ஏற்பாடு செய்வதாகச் சொன்னார். சொன்னதைப் போலவே இரண்டு நாட்களில் ஒரு மிகப் பெரிய அகில இந்திய இசை விழாவில்' ஹைதராபாத்தில் பங்கேற்க கடிதம் வந்தவுடன், மிகவும் பூரித்துவிட்டேன். ஏனெனில் பெரிய ப்ரஸித்தமான கலைஞர்கள் பங்கேற்கும் விழாவில் எனக்கு வாய்ப்பைப் பெற்றது மிகவும் பெரிய விஷயமாக இருந்தது. இன்றும் டி.என்.கிருஷ்ணனைப் பற்றி நினைக்கும் போது எல்லாம் எனக்கு முதன்முதலில் அவர் ஏற்பாடு செய்து கொடுத்த பெரிய வாய்ப்பை மனத்திற்குள் நன்றியுடன் நினைவு கூர்வேன்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆடிப்பூர உற்சவத்தில் ஆகஸ்ட் 14, 1997 அன்று கச்சேரி. விடுதலை பெற்று 50ஆவது சுதந்திர தினம். மணி இரவு 11.59 தாண்டியபோது நான் 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே' ஆரம்பித்தபோது நானும், கேட்டுக் கொண்டிருந்த அனைவரும் நெகிழ்ந்துவிட்டோம். என் பாட்டி 50 ஆண்டுகளுக்கு முன் இதே பாடலை சுதந்திரம் கிடைத்தவுடன். வானொலியில் முதன்முதலில் பாடியது அனைவர்க்கும் தெரியும். அதே பாடலை ஐம்பது வருடத்திற்குப் பிறகு பேத்தியாக நான் பாடியது மறக்க முடியாத ஒரு பெருமையான அனுபவம்.

இப்போது திருவையாறுக்கு வருவோம் : -

புஷ்ய மண்டபத் தெருவில் இருக்கும் அக்ரஹாரத்தில் உள்ள ஒரு வீட்டில் ஒரே பரபரப்பு. தெருவில் உள்ள பெண்மணிகள் அந்த வீட்டிற்குள் வருவதும் போவதுமாக உற்சாகம் பொங்கி வழிகிறது. என்ன காரணம்? திருமதி டி.கே.பி. அந்த வீட்டிற்கு வருகை தந்துள்ளார். அது மிருதங்க மேதை பாலக்காட்டு மணி அய்யரின் இல்லம். பிறந்திருக்கும் பேத்தியின் பெயர் சூட்டு விழாவிற்கு காப்பு அரிசி - சகிதமும் பரிசுப் பொருட்களுடனும் அங்கு பாட்டி டி.கே.பி. வந்திருக்கிறார். தொட்டில் வைபவத்தை டி.கே.பி 'தர்மஸம்வர்த்தினி' என்று பாடலுடன் ஆரம்பிக்க, அந்த இசைக்கே பெயர் போன திருவையாற்றில் உள்ள இசைக் கலைஞர்கள் எல்லோரும் மிகவும் பிரியமாக இந்த வைபவத்தில் கலந்து கொண்டனர். ஐந்து மணி நேரத்திற்கு மேல் இசை மழையில் கோலாகலமாய்க் கடந்தது.

அந்த பாக்யசாலிக் குழந்தை வேறு யாரும் இல்லை. நானே தான்! என் அம்மா லலிதா இந்நிகழ்ச்சியைப் பலமுறை பூரிப்புடன் கூறியிருப்பதை நான் கேட்டிருக்கிறேன். இப்படி ஓர் இசைக் குடும்பத்தில் என்னைப் பிறக்கச் செய்த கடவுளை, ஒவ்வொரு கணமும் நினைத்து நினைத்துநன்றி செலுத்துகிறேன். (அப்போது எனக்குச் சூட்டிய பெயரே நித்ய ஸ்ரீ அப்பேற்பட்ட பெரியோர்களின் ஆசியும் அனுக்ரஹமும் தான் நான் ஒரு சிறு திவிலை ஞானத்துடனாவது இருக்கிறேன் என்பதில் துளியும் சந்தேகமில்லை.

சமீபத்தில் புட்டபர்த்தியில் எனக்கு என் வாழ்வில் மெய்சிலிர்க்க வைத்த அரிய பாக்யம் கிட்டியது. அது பகவான் ஸ்ரீசாயி பாபா அவர்களின் சன்னிதியில், அவருக்கு மிக அருகே அமர்ந்து பாடும்படியான பாக்கியம். சுமார் ஒரு மணி நேரத்திற்கு என்ன பாடினேன் என்று எனக்கே தெரியாத பரவச நிலையில் என்னை மறந்து பாடினேன். பகவானின் திருவாயால் 'மீரா பஜன்' என்று கேட்க நான் அதைப்பாட, என்னே! என் பாக்யம்! அவருடைய திருக்கரங்களால் தருவித்து எனக்கு அளித்த பிரஸாதத்தை நான் வாழ்க்கையில் கிடைத்தற்கரிய பெரும் பேறாகக் கருதுகிறேன்!

---

"காலைப் பார்த்தே இது பெண் குதிரைன்னு எப்படிடா கண்டு பிடிச்சே?"

"ஹை ஹீல்ஸ் லாடம் அடிச்சிருக்கு பார்."

- ஜோசப் காமராஜ்





உமையாள்புரம் கே.சிவராமன்

இந்த முறை இனியவன் கல்யாணப் பேச்சை எடுப்பான் என்று பத்மினி எதிர்பார்த்தாள். அந்த எதிர்பார்ப்பு வீண் போகவில்லை.

சென்னையிலிருந்து மூன்று மாதங்களுக்கு ஒரு முறை சிங்கப்பூர் வருவதும், நிர்வாகத்தின் பல்வேறு பிரிவுகள் குறித்துச் சொற்பொழிவுகள் ஆற்றுவதும், கைதட்டலுடன் கணிசமான சன்மானமும் பெற்றுச் செல்வதுமாக இருந்தான். வேலையில் கண்ணும் கருத்துமானவன். பேச்சிலும் தோற்றத்திலும் பெயருக்கேற்றவன். வந்தோம் போனோம் என்றிராமல் சில்பாவிடம் அவன் கவனமும் நேசமும் செலுத்த ஆரம்பித்தது தனது அதிர்ஷ்டம்தான் என்று நினைத்துக் கொண்டாள் பத்மினி.

அறிவும் அழகும் பெண் குழந்தைகளுடன் போட்டிப் போட்டுக் கொண்டு வளர்ந்தால் பெற்றோருக்குத்தான் தாக்குப் பிடிப்பது கஷ்டமாயிருக்கிறது. அதிலும் அப்பாவும் - அம்மாவுமாகத் தானே இருந்து பொறுப்புகளை நிறைவேற்றும் கட்டாயம் பத்மினிக்கு. அறிவோடு அழகும் குணமும் படைத்த ஒருவன் தானே முன்வந்து பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன் என்று சொன்னால் சந்தோஷத்தைக் காட்டிலும் நிம்மதி அதிகமாயிருக்கிறது.

''நாளைக்கு இனியவன் உன்னைப் பார்க்க வருவார்மா...'' சொன்னபோது சில்பாகூட வெட்கப்பட்டாள். எதையும் யதார்த்தமாகப் பார்க்கும் 'நோ நான் ஸென்ஸ்' பெண்.

அவன் முகம் இலேசாகச் சிவப்பதையும் கண்கள் நேராக அம்மாவைப் பார்க்க மறுத்து சாப்பாட்டில் என்றுமில்லாத போலிக் கவனம் செலுத்துவதையும் பத்மினி கவனித்தாள்.

'எதுக்கு வரார் இனியவன்?' - பத்மினி கேட்கவில்லை.

புரிந்துபோயிற்று! தானும் இது போன்ற மலர்ப் பாதைகளில் நடந்து வந்தவள்தானே. இருபத்தைந்து வருடங்களாகிவிட்டன என்பதால் அதெல்லாம் மறந்துவிடவில்லை. மலர்ப்பாதை வெகு சீக்கிரமே முள் பாதை யாகிவிட்ட போதிலும் இந்த வலிகளைத் தாங்கிக் கொள்ள பழைய இனிய ஞாபகங்கள்தான் சக்தி தருகின்றன.

''எப்போம்மா வருவார்..?'' நேரத்தை மட்டும் சில்பாவிடம் கேட்டு வைத்துக் கொண்டாள்.



விருது பெறுவோர் பக்கம்

# தோல்வியில் வெற்றி!

எப்போதும் போல் நேரம் தவறாமல் வந்தான் இனியவன்.

"வாங்க..."

"வணக்கம்மா!"

''என்ன சாப்பிடலாம்..?''

"முதல்ல தண்ணி, அப்புறம், பேசி முடிச்ச பிறகு நல்லதா ஒரு ஸ்வீட்!"

'புரிந்தது' என்ற புன்னகையுடன் ட்ரேயில் தண்ணீர் வைத்து எடுத்து வந்தாள். ஒரு மிடறு குடித்துவிட்டு ஆரம்பித்தான்.

''சில்பாவை எனக்கு ரொம்ப பிடிச்சிருக்கு. சுத்தி வளைக்காமச் சொல்றேன். அவகிட்டேயே இதைச் சொன்னப்போ உங்ககிட்டே பேசச் சொன்னா..!"

''உங்களைப் பிடிச்சிருக்குன்னு அவ சொல்லலியா....?"

இனியவன் திகைத்துப் போய்ப்

பார்த்தான்.

"பரவாயில்லை. சொல்லலியேன்னு யோசிக்காதீங்க. அவளுக்கும் உங்களைப் பிடிச்சுத்தானிருக்கு. ஆனா அவ இலேசுல எதையும் சொல்லிக்கமாட்டா... அவ அப்பா மாதிரி..." - பத்மினியின் முகம் கொஞ்சம் வாட்டமுற்றதைப் பார்த்துச் சொன்னான் இனியவன் :

"அப்பாவும் இப்போ இருந்திருந்தா ரொம்ப நல்லாயிருந்திருக்கும். உங்க ஃபீலிங் எனக்குப் புரியாம இல்லை."

"என் உணர்வுகளை விடுங்க இனியவன். இதிலே உங்க உணர்வுதான் முக்கியம். சில விஷயங்களை - அதாவது உண்மைகளை நான் உங்களுக்குச் சொல்லியாகணும். சில்பாவுக்குக்கூட இன்னும் தெரியாத உண்மைகள்..."

"சொல்லுங்க..."

"சில்பாவோட அப்பா இருக்கார்; நல்ல திடகாத்திரமா, குடும்பம் குழந்தை குட்டியோட சந்தோஷமா சென்னைல இருக்கார்..."

"ஐயோ!"

"இங்கே வந்தார், என்னோட பழகினார், அன்பைப் பொழிஞ்சார். ஆனா அவர் வீட்ல கல்யாண ஏற்பாடு பண்ணினப்போ அந்த உண்மையைச் சொல்ல அவருக்குத் தைரியமே வரலை. எனக்குக் கல்யாணப் பத்திரிகை மாத்திரம் வந்தது. அவருக்கும் ராஜேஸ்வரிக்குமான கல்யாணம். அப்போ நான் சில்பாவைச் சுமந்துகிட்டிருந்தேன். ஏழாம் மாசம். எங்களுக்குச் சிமந்த கல்யாணம் நடந்திருக்க வேண்டிய சமயம் அவங்களுக்குக் கல்யாணம் ஆச்சு! சில்பாவுக்கு ஓரளவு உண்மை தெரியும். ஆனா அவர் போய்ச் சேர்ந்துட்டார்னு நினைச்சுட்டிருக்கா..."

"ரொம்ப அதிர்ச்சியாயிருக்கும்மா! ஸோ ஸாரி."

"அதிர்ச்சி கிடக்கட்டும். இப்போ உங்க மனசு என்ன சொல்லுது..? நீங்க சில்பாவைக் கல்யாணம் பண்ணிக்கத் தயாரா..?"

பேச்சால் உலகை வென்றவன் பேசாமல் உட்கார்ந்திருந்தான்.

விரக்தியான சிரிப்பு பத்மினியிடமிருந்து வெளிப்பட்டது.

"என்ன... மிஸ்டர் இனியவன்? கசப்பான அதிர்ச்சியா?"

"அதிர்ச்சிதான்மா! இனிமே சில்பாவை என் மனசை விட்டு இறக்கி வைக்கறதுதான் சரியான முடிவா இருக்கும்."

"கடைசியில், நீங்களும் ஒரு கோழை தானா!"

"இல்லை. சில்பாவோட அப்பா செஞ்ச தப்பை நானும் செய்துடக் கூடாது..."

இப்போது பத்மினியின் முதிர்ந்த முகத்தில் அதிர்ச்சி ஆழ்ந்த ரேகைகளைப் பதித்தது.

"சென்னைல மஞ்சுளா இருக்கா. நாலு வருஷமாச்சு எங்களுக்குக் கல்யாணமாகி... இங்கே வந்து சில்பாவோட பழக்கம் ஏற்பட்ட பிறகு மனசு குரங்குத்தனம் பண்ண ஆரம்பிச்சுடுத்து..."

பத்மினிக்குத் தலை சுற்றியது. கை, கால்கள் வெடவெடக்க உட்கார்ந்து தலையைப் பிடித்துக் கொண்டாள்.

"இன்னிக்கு நீங்க சில்பாவோட அப்பாவைப் பற்றிச் சொன்னது எனக்கு அதிர்ச்சி வைத்தியம்..."

இனியவன் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தான். 'சில்பா இந்த அதிர்ச்சியை எப்படித் தாங்குவாள்?' என்ற கேள்வி வந்து பத்மினியைப் பயமுறுத்தியது.

'பரவாயில்லை...! ஷி இஸ் எ நோ நான்சென்ஸ் கர்ல் அப்படித்தான் அவளை வளர்த்திருக்கேன்' - மீண்டும் தன்னைச் சமாதானப்படுத்திக் கொள்ள ஆரம்பித்தாள் பத்மினி. இருபத்தைந்து வயதில் வரமறுத்துச் சண்டி செய்த சமாதானம் இப்போது சுலபமாகக் கைவசப்படுவதாகத் தோன்றியது. ●







# தலை (தப்பிய) தீபாவளி!

ரிமோட்

டிசம்பர் நாலாம் தேதியன்று பார்த்த மாதிரி அப்படியொரு ஆனந்த பரவசத்தை ஜெயலலிதாவின் முகத்தில் கண்டு ரொம்பக் காலமாகிறது. வழக்குகளிலிருந்து விடுதலையானது, "கடவுள் அருள், கடவுள் என்னிடம் மிகுந்த கருணை காட்டியிருக்கிறார்" என்றார். அது உள்ளத்தின் அடி ஆழத்திலிருந்து வந்ததாகவே இருந்தது. Success is to be measured by the obstacles one has overcome while trying to succeed என்று புக்கர் வாஷிங்டன் சொன்னது ஜெயலலிதாவுக்காகவே.

கூடை கூடையாக ஸ்வீட்கள் வழங்கப்பட்டதையும் ஆயிரம் ஆயிரமாக ஆயிரம்வாலா பட்டாக சரங்கள் வெடிக்கப்பட்டதையும் கண்டபோது உண்மையிலேயே இது ஜெயலலிதாவுக்குத் தலை (தப்பிய) தீபாவளிதான் என்று தோன்றியது.

'திருவையாறு தியாகப்பிரம்ம ஆராதனையா இது? அதற்கு இன்னும் ஒரு மாதத்துக்கு மேல் இருக்கிறதே?' என்ற திகைப்பு ஏற்பட்டது. 'சூர்யா'வில் அந்த நிகழ்ச்சியைப் பார்த்தபோது.

ஒரு டஜன் வயலின் கலைஞர்களும் பற்பல மிருதங்கக்காரர்களும் மோர்சிங்காரர்களும் வரிசையாக அமர்ந்து இசைத்துக் கொண்டிருந்தார்கள். எல்லோரும் சட்டை அணியாத வெற்று மார்பினர். பக்தியும் சிரத்தையும் பார்த்தவுடன் தெரிந்தது. ஜகன்மோகினி ராகத்தில் 'ஸோபில்லு' தியாகப் பிரம்ம கிருதி. மிதமான வேகமும் ஸ்வரங்களும் had

an endearing classical spirit.

மேடையின் பின்னணியில் இருந்த திரையில் என்ன விழா என்று எழுதப்பட்டிருந்தது - மலையாளத்தில். செம்பை வைத்தியநாத பாகவதரின் உருவப் படம் பிரதானமாகவும் பெரிதாகவும் வைக்கப்பட்டிருந்ததால் அவருடைய நினைவு நாளாகவோ பிறந்த நாளாகவோ இருந்திருக்கும். எதுவானால் என்ன, ரசிக்க முடிந்தது இந்த 'ஜந்த்ர சம்மேளன'த்தை. (ரேடியோக்காரர்கள் கண்டுபிடித்தது இந்தத் தலைப்பு. இப்போது உபயோகிக்கிறார்களோ?)

மெகா சீரியல்களில் வரும் வசனங்களில் அனேகமாகச் சாதுரியமோ சமத்காரமோ இருப்பது கிடையாது. எல்லாமே உயிரற்ற, சம்பிரதாயமான matter of fact உரையாடல்தான். கதையில் குறிப்பிட்ட கட்டம் நன்றாக அமைந்துவிட்டால் அதன் தயவில் தப்பி விடுகின்றன. ஆகவே, ஸ்டார் விஜய்யின் 'பொம்மைகள்' தொடரில் ஒரு பகுதி தற்செயலாகக் காதில் விழுந்தபோது சந்தோஷமாக இருந்தது.

ஸ்ரீகாந்த் தன் மனைவியிடம் சொல்லிக்கொண்டிருக்கிறார்.

"ஒண்ணு செய். ஆத்திலே அடுப்புக் கரி இருக்கோல்லியோ, அதை நன்னா குழைச்சு நீ உன் மூஞ்சியிலே பூசிக்கோ. நான் என் மூஞ்சியிலே பூசிக்கிறேன். ரெண்டு பேரும் ஜட்ஜ் முன்னாடி போய் நிற்போம். பிள்ளையாண்டான் நம்ம மூஞ்சியிலே கரியைப் பூசிட்டான்னு ஜட்ஜ் புரிஞ்சுப்பார்."

எந்தப் பிள்ளையாண்டான் அப்படி என்ன காரியம் செய்து தொலைத்தான் என்பது தொடர்ச்சியாகப் பார்ப்பவர்களுக்குத்தான் புரியும். ஆனால் கண்டிப்புக் காட்டத் தெரியாத தந்தையாக ஸ்ரீகாந்த் இருந்திருக்கிறார் என்பது மட்டும் புரிகிறது. Fathers are pals now a days because they don't have the guts to be fathers என்று யாரோ சொன்னார்கள்.

படம் வரும் பின்னே, பூஜை வரும் முன்னே. (சிலதடவை கேஸட் வரும் முன்னே.)

'கற்பூர நாயகி' படத்துக்கான பூஜை நடந்ததை ஜெயா டீவியில் பார்த்தபோது ஒரு ஏமாற்றமும் ஒரு ஆச்சரியமும் உதித்தன.

ஏமாற்றம்: பூஜை செய்த குருக்கள் கற்பூரத் தட்டை ஏந்தி வந்தபோது, வரிசையின் கடைசியில் நின்றிருந்த நிர்வாகிகளில் ஒருவர் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு கரன்ஸி நோட்டை எடுத்துக் கொண்டிருந்தார். அது நூறு ரூபாய் நோட்டு மாதிரியும் இருந்தது. ஐந்நூறு ரூபாய் நோட்டு மாதிரியும் இருந்தது. தட்டில் வைக்கும்போது கண்டுபிடித்துவிடலாம் என்று நினைத்திருக்க, அதைக் காட்டவேயில்லை.

ஆச்சரியம்: அரை நிஜாரும் அரைக்கைச் சட்டையுமாக, கவுண்டமணியிடம் கன்னாபின்னாவென்று திட்டு வாங்குகிற செந்தில், இந்தப் பூஜையின்போது ஜம்மென்று ட்ரிம்மென்று ஸஃபாரி சூட்டில் மிடுக்காகக் காட்சி அளித்தார். Dressed to kill!

படங்கள்:
சௌரா



• செம்பை

விநோத்

டைரக்டர் வஸந்த் இயக்கும் 'ஏய் நீ ரொம்ப அழகா இருக்கே' படத்திற்கு ஐந்து இசையமைப்பாளர்கள். அந்த ஐந்து பேருமே, இந்தப் படத்தின் மூலமாகத்தான் திரையுலகிற்கே அறிமுகமாகிறார்கள்.

''என் படங்களில், பாடல்கள் எல்லாமே மிக நன்றாக அமைய வேண்டும் என்று பிரயத்தனப்படுகிறவன் நான். கடந்த பல மாதங்களாகவே, படத்துக்கு இசையமைக்க வாய்ப்பு கேட்டு, நிறைய இளைஞர்கள் அணுகினார்கள். அவர்களில் சிலருக்கு நல்ல இசைத்திறமை இருப்பதை நான் தெரிந்து கொண்டாலும், அவர்களில் மிகச் சிறந்த நான்கைந்து பேர்களை அறிமுகப்படுத்த வேண்டும் என்று முடிவு செய்தேன். நான் அடுத்து நாலைந்து படங்கள் இயக்கும் வரை அவர்கள் காத்திருக்க வேண்டுமே!

எனவே, அவர்கள் அனைவரையும் பயன்படுத்திக் கொள்ளுவது எப்படி என்று யோசித்தேன். அப்போதுதான் திடீரென்று ஆளுக்கு ஒரு பாட்டு என்று ஐந்து பேருக்கு வாய்ப்பு கொடுத்தால் என்ன என்று தோன்றியது. தயாரிப்பாளர் ஜி.வி.யிடம் இதைச் சொன்னபோது உடனே ஓ.கே. சொல்லிவிட்டார்.

''உண்மையில் ஐந்து பேர் இல்லை, ஏழு பேர். ஆம்! இரண்டு இரட்டையர்கள் இருக்கிறார்களே! ஒரு பாட்டுக்கு ரமேஷ் விநாயகம் என்பவர் இசையமைக்கிறார். இரவுக்கு ஆயிரம் கண்கள் என்கிற டி.வி. தொடருக்கும் இசையமைத்திருக்கிறார். இவர் இசையமைத்த ஐயப்ப பாடல் கேஸட் வேகமாக விற்பனையாகிக் கொண்டிருக்கிறது.

''அடுத்து, பாடகர் ஸ்ரீனிவாஸ் திரைப்பட இசையமைப்பாளராக அறிமுகமாகிறார். அவரிடமிருக்கிற இசைத் திறமை புதுப் பரிமாணம் பெற இருக்கிறது.

''அடுத்து, முருகன். இவர் பாடகி அனுராதா ஸ்ரீராமின் சகோதரர். இவருக்கு, இசைத்துறையில், அமெரிக்கப் பல்கலைக் கழகம் ஒன்றில் மேற்படிப்பு படிக்க ஸ்காலர்ஷிப் கிடைத்துள்ளது. ஆனாலும், என் படத்தில் இசையமைப்பதற்கு முன்னுரிமை கொடுத்து, டியூன் போடுவதில் பிஸியாக இருக்கிறார். அடுத்தது அரவிந்த் - சங்கர் என்ற இரட்டையர். இவர்கள் இருவரும் விளம்பரங்களுக்கு இசையமைத்துள்ள அனுபவசாலிகள்.

''கடைசியாக, ராகவ் - ராஜா என்ற இரட்டையர். இவர்களில் ராஜா செம்மங்குடியின் பேரன். இப்போது டி.வி. தொடர்களுக்கு இசையமைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆக, ஐந்து பாடல்கள் மூலம் ஏழு ஸ்வரங்களைப் போல, ஏழு இளைஞர்கள் அறிமுகமாகிறார்கள்.



# ஆளுக்கொரு பாட்டு!

- எஸ். சந்திரமௌலி

ஓம் சாந்தி

# உன்னை நீயே குணப்படுத்தலாம்



உயிரோட்டத்தை அளிக்கும் உயிர் சக்தியான 'கீ' (K1) என்ற அடிப்படை சக்தியுடன் 'ரேய்' (REI)என்ற பேராற்றல் கொண்ட தெய்வீக பிரபஞ்ச சக்தியை இணைக்கும்போது கிடைப்பதுதான் ரேய்கி (REIKI)என்ற அற்புதமான சிகிச்சை சக்தி. இந்த சக்தியை ஆண், பெண், வயது வேறுபாடின்றி, எந்த மதத்தை சேர்ந்தவர்களானாலும் தாராளமாக பெற முடியும். ஒரு சில நாட்களிலேயே 'ரேய்கி' முறையை கற்று, இனிஷியேஷன் பெற்ற பிறகு தனக்காக தானே உபயோகப்படுத்த முடியும். சாதாரண படிப்பறிவே இதற்கு போதும். ரேய்கி மூலமாக அனேகமாக எல்லாவித உடல், மன நோய்களையும் பெருவாரியாக சரி செய்து கொள்ளலாம். இதற்கு தேவை மன உறுதியும், தன்னம்பிக்கையும் தான்!

உடலை வருத்தும் யோகாசனப் பயிற்சிகளோ, மனதை கட்டிப்போடும் கட்டாய தியானமோ இதில் இல்லை. இருக்கும் இடத்திலேயே அமர்ந்து சுதந்திரமாக, நிம்மதியாக தானே ரேய்கி செய்து கொள்ளலாம். மருந்து, மாத்திரைகள் உண்டாக்கும் பக்கவிளைவுகள் எதுவும் இதனால் கிடையாது. நன்கு தேர்ச்சியடைந்தவர்கள் மற்றவர்களுக்கும் ரேய்கி செய்து குணப்படுத்தலாம். சுமார் 6 மாதங்கள் நன்றாக பயிற்சி செய்த பின் விருப்புமுள்ளவர்கள் 'ரேய்கி மாஸ்டர்ஷிப்' பெற்று அடிப்படை ரேய்கி வகுப்பு நடத்தலாம்.

ICRTயின் மெம்பரான இவர் பிரபல இன்டர்னேஷனல் மாஸ்டர்களான William Hauw, William Rand, Paula Horan, Gissele King, Catherine Anderson, Alton Kamadon, போன்றவர்களிடம் நேரிடையாக பயிற்சி பெற்றவர். கடந்த 8 வருடமாக நூற்றுக்கணக்கானவர்கள் இவரிடம் பயிற்சி பெற்று வாழ்வில் வளம் பெற்றிருக் கிறார்கள்.

ரேய்கி **I, II, IIIA, IIIB** (மாஸ்டர்ஷிப்)தவிர கருணா ரேய்கி,**Magnified Healing, PENDULUM DOWSING, MELCHIZEDEK METHOD OF HEALING.** போன்றவைகளுக்கும் பயிற்சி தருகிறார்.

சுயவிலாசமிட்ட தபால்தலையுடன் கூடிய உறை அனுப்பி பயிற்சி விபரம் பெறலாம்.

**Mrs. LAKSHMI NARAAYAN**
**Reiki Master / Teacher**
37/1, II Main Road, Kalaimagal Nagar,
Ekkaduthangal, Chennai - 600 097.
Ph: 2323066

Email: lakshmi_reiki@yahoo.com
Email: lakshmi_reiki@hotmail.com

**பிரதி மாதமும் வகுப்புகள் இருக்கும்**

---

**பருக பருக ஆனந்தம்**
**அதிக ஆனந்தம்**
**சுத்தமான தஞ்சாவூர் டிகிரி காப்பிக்கு**

# ஜீவா காபி

**கல்யாணங்களுக்கும் சுபகாரியங்களுக்கும்**
**100% பியூர் பில்டர் காபி பவுடர்**

*தயாரிப்பாளர்கள்:*

**ஜீவா காபி ஒர்க்ஸ்**
28, பி.வி. நாயக்கன் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

இலவச டோர் டெலிவரிக்கு தொடர்பு கொள்ளவும்:(சென்னை) : **8444725, 8442667**

டெல்லி, மும்பை, கொல்கத்தா.
E-mail:coffeeps@md3.vsnl.net.in

---



# பிராமண முதியோர் இல்லம்

**அன்பான உபசரிப்பு, தரமான உணவு, மருத்துவ வசதியுடன் கூடிய பிராமணர்களுக்கான முதியோர் இல்லத்திற்கு நடக்க இயலாதவர்கள், படுக்கையில் இருப்பவர்கள் வரவேற்கப்படுகிறார்கள்.**

**பெற்றோர்கள் நினைவு நாள், குழந்தைகள் பிறந்த நாள் மற்றும் திருமண நாட்களை எங்களுடன் சேர்ந்து கொண்டாடுங்கள்.**

பிராமண முதியோர் இல்லம்,
5, 25வது குறுக்கு தெரு,
(ராஜராஜேஸ்வரி கோவில் அருகில்)
தில்லை கங்கா நகர், நங்கநல்லூர்,
சென்னை - 600 061. போன் : 2324276.





# என் பயணம்

அடைந்த பெயரும் புகழும்
அவன் அருளால்.
சலசலத்து ஓடும் ஆறு
சலனமின்றி ஜனித்தது எங்கே?
விரிந்து பரந்த மரத்தின்
விதை நட்டது எப்போ?
நடனத்தின் சிகரம் தொடமுயலும்
நானும் அப்படித்தான்.

விளையாட்டாய்த் தொடர்ந்த நடனம்
விருதைக் கொண்டு வந்திருக்கிறது
பெற்றோர் உற்சாகம்; கை-
பிடித்தவரின் ஆதரவு.
எதிர்நீச்சல், கண்ணீர், கசப்பு,
என்றாலும், கூடவே இளமையின் உழைப்பு,
எனது கலைக்கு இட்ட
எதார்த்தமான உரங்கள்.
உயரே, உயரே, இன்னும் உயரே,
ஏறுதல் தரும் மகிழ்ச்சிக்கு
எதுதான் ஈடு?
விருதுகள் தரும் மகிழ்ச்சி, வியப்பு எல்லாம்
விடைகளைக் கேட்கும் சில வினாக்கள்
என் உள்ளே கேட்கும் குரல்
என்ன பதில் சொல்லுகிறது:
'திட்டம் போடாமலே, திருத்தங்கள் கைகொடுக்க
திடமாக உருவாக்கு, இது உன் உலகம்!
திடீரென்று தெரியும் புதுப்பாதையில்
தீச்சுடராய் வெளிச்சக் கீற்று.
தொடருவேன் என்
பயணத்தை.



'நிருத்ய சூடாமணி'
ஊர்மிளா சத்யநாராயணா

புதுயுக யோகா – 11

# உயிரை உறிஞ்சும் ஆபத்து!

டாக்டர் ஏ.எஸ். அசோக்குமார்

ஸ்வீட் நியூஸ் இல்லைதான். ஆனால் புள்ளி விவரம் சொல்கிறதே! தமிழ் நாட்டில் மட்டும் பதினைந்து லட்சத்துக்கும் அதிகமானவர்கள் சர்க்கரை நோயால் பாதிக்கப்பட்டுள்ளனராம்!

நீரிழிவு, சர்க்கரை வியாதி, இனிப்பு நோய், மதுமேகம், டயாபெடிக்ஸ் மெல்லைடஸ் என்று ஏகப்பட்ட பெயர் சூட்டி அழைத்தாலும், 'உயிரை மெல்ல உறிஞ்சும் ஆபத்து' என்பதே சரியான பெயர் விளக்கம்.

பான்கிரியாஸ் சுரப்பி எனப்படும் கணையம் வேண்டிய அளவு இன்சுலினைச் சுரக்காததாலேயே நீரிழிவு நோய் உண்டாகிறது.

நீரிழிவு நோய் ஏற்பட காரணங்களை ஆராயும்போது முதலில் வருவது பரம்பரைத் தன்மைதான். அப்பா, அம்மா இருவருக்கும் நீரிழிவு இருந்தால், அவர்களது நான்கு பிள்ளைகளுக்கும் வர வாய்ப்புள்ளது. பெற்றோரில் யாருக்காவது ஒருவருக்கு இருந்தால் அது பிள்ளைகள் நால்வரில் இருவரைப் பாதிக்கும். பெற்றோரின் தாய் அல்லது தந்தைக்கு இருந்தால், நால்வரில் மூவரைப் பாதிக்கும். அதிக உடல் எடை, கட்டுப்பாடு இல்லாத உணவுப் பழக்கம், மது பழக்கம், மித மிஞ்சிய தாம்பத்திய உறவு கொள்பவர்களுக்கும் நீரிழிவு நோய் தோன்றும்.



நீரிழிவில் நான்கு வகை இருக்கிறது.

- கைக் குழந்தை முதல் பதினைந்து வயது வரை பாதிக்கப்படும் இளம் வயதினர் நீரிழிவுக்கு, 'ஜுவைனல் டயாபெடிஸ்' என்று பெயர்.
- பதினைந்து வயது முதல் இருபது வயது வரை 'பாங்க்ரியாடிக் டயாபெடிஸ்' எனப்படும். இது பாங்க்ரியாஸ் சுரப்பி பாதிக்கப்படுவதால், ஏற்படும் பொதுவான நீரிழிவு நோய்.
- இருபத்தைந்து வயதில் தாக்குவது 'மோடி டயாபெடிஸ் அடல்ட்' வகை.

● இருபத்தைந்து வயதுக்கு மேலுள்ளவர்களைப் பாதிக்கக்கூடியது, டைப் டு டயாபெடிக்ஸ்.

இது வெப்ப நாடுகளான இந்தியா, இந்தோனேஷியா போன்றவற்றில் வசிப்பவர்களை எளிதில் தாக்குகிறது.

முதல் வகையான இளம் வயது நீரிழிவுக்கு உடலில் போதுமான அளவு இன்சுலின் சுரப்பதில்லை. இவர்களுக்கு யோகாசனப் பயிற்சியுடன் இன்சுலின் ஊசி வாழ்க்கை முழுவதும் அவசியம்.

இருபத்தைந்து வயதுக்கு மேல் ஏற்படும் இரண்டாவது வகைக்கு ஊசி தேவையில்லை. முறையான உணவு, யோகாசனப் பயிற்சி, ஆகியவற்றால் உடலைச் சீராக வைத்துக் கொள்ள முடியும்.

### நீரிழவு நோயின் தன்மைகளை எப்படி அறிவது:

1) சிறுநீர் அதிகமாக அடிக்கடி வெளியேறும்.
2) உடலில் காயம் பட்டால் எளிதில் ஆறாமல் இருப்பது.
3) பிறப்பு உறுப்புகளில் காரணமே இல்லாமல் புண்கள் ஏற்படும்.
4) திடீரென்று உடல் எடை குறையும்.
5) அளவுக்கு அதிகமாக பசி, தாகம், சோர்வு இருக்கும்.
6) சோம்பல் மிகுதியாகி, இரவும் பகலும் தூக்கக் கலக்கமாக இருக்கும்.
7) கண் பார்வை சிறிது மங்கலாகும்.
8) வாயில் எப்போதும் புளிப்புச் சுவை இருக்கும்.
9) பல் ஈறுகளில் அடிக்கடி ரத்தம் கசியும். பல் ஈறுகள் பலமிழந்து பற்கள் விழ ஆரம்பிக்கும்.
11) தோல் வியாதிகள், ஏற்படும்.

நீரிழிவு வியாதி வருடக்கணக்கில் கவனிக்கப்படாவிட்டால், கண்கள், இரத்தக்குழாய், இருதயம், சிறுநீரகம் பாதிக்கப்படும்.

ஆரம்பம் முதலே யோகாசனப் பயிற்சியாலும், உணவுக் கட்டுப்பாடாலும் சர்க்கரை வியாதியைக் கட்டுப்படுத்தி விட்டால், பிரச்னை எழ வாய்ப்பில்லை.




'வக்ராசனம்' என்னும் ஆசனத்தைத் தொடர்ந்து செய்து வந்தால், கணையம் பலப்படும்.

*செய்முறை:*

1) விரிப்பின் மீது கால்களை நீட்டி அமரவும்.
2) வலது காலை மடித்து, வலது கணுக்காலை இடது கால் முட்டியைத் தொடும்படி, பாதத்தை வைக்கவும்.
4) வலது கையை முதுகுக்குப் பின்னால் கொண்டு வந்து, கை விரல்களை வெளி நோக்கி இருக்கும்படி விரிப்பின் மீது வைக்கவும்.
4) இடது கையை வலது முட்டியின் வழியாகக் கொண்டு வந்து, வலது கால் கட்டை விரல் அல்லது கணுக்காலைப் பற்றி பிடிக்கவும்.
5) தலை, தோள்பட்டை ஆகியவற்றை வலது பக்கம் திருப்பி, வலது தோள்பட்டை வழியாகப் பார்க்கவும். சாதாரண மூச்சில் ஐம்பது எண்ணிக்கை இருக்கவும்.
6) தலையைத் திருப்பி, கட்டை விரலை விட்டு கையைப் பிரித்து, காலை நீட்டி அமரவும். பின்னால் வைத்த கையை எடுத்து இடுப்புக்குப் பக்கத்தில் வைத்து ஓய்வெடுக்கவும்.
7) மாற்று ஆசனமாக முன்பு கூறியது போல இடது காலை மடித்துச் செய்யவும். வலது, இடது என இரண்டு தடவை செய்தால் போதும்...

அடுத்த வாரம் நகரவாசிகளை நரகத்தில் ஆழ்த்திக் கொண்டிருக்கும் இடுப்பு, முதுகு, கழுத்து வலிகளை நீக்கும் திரிகோணாசனம் பற்றி விரிவாகக் காண்போம்.

அப்ப, அடுத்த வாரம்...

படம்: ஸ்ரீஹரி

எச்சரிக்கை: இங்கே தரப்பட்டுள்ள யோகாசன பயிற்சி முறைகள் தகவலுக்காக மட்டுமே. இவை வழிகாட்டி முறைகள் அல்ல. யோகாசன நிபுணரின் நேரடி கண்காணிப்பில்தான் பயிற்சி தொடங்க வேண்டும்.

அந்த ஆங்கில தினசரியின் ஞாயிறு மலரைப் புரட்டிக் கொண்டு வந்த மஞ்சுவுக்கு, ஐந்தாவது பக்கம் வந்ததும், கண்கள் குத்திட்டு நின்றன..

'ஒவ்வொரு பெண்ணின் முன்னேற்றத்தின் பின்னும் ஒரு ஆண்' என்ற தலைப்பில், ஒவ்வொரு வாரமும் ஒரு கட்டுரையைப் பிரசுரித்துக் கொண்டிருந்தார்கள் அந்தப் பக்கத்தில். மஞ்சு அதை ஒரு வரி விடாமல் படிப்பாள். தனக்கு வாய்க்காதது, வேறு ஒருத்திக்காவது வாய்க்கிறதே என்ற ஆதங்கம் தான்! கிடைக்காததை எண்ணி ஏங்குவதுதானே மனித இயல்பு?

இன்று அந்தப் பக்கத்தில் வெளியாகியிருந்த புகைப்படம் அவளைத் திணறச் செய்தது; டி.வி. சீரியல்களில் கொடிகட்டிப் பறக்கும் இளம் நடிகை ஷாம்லியுடன், அவளை உரசிக் கொண்டு நின்றிருந்தது...மாதவ்...மாதவனா? அவனேதான்! அவளுடைய முன்னாள் கணவன்!

பெண்ணின் இடம் வீடுதான் என்ற அசைக்க முடியாத கொள்கையைக் கொண்டிருந்தவன்; அதனால்தானே மஞ்சுவுக்கும் அவனுக்கும் தகராறு முற்றி விவாகரத்தில் கொண்டு விட்டது? இன்று அவனா இந்த ஷாம்லியின் முன்னேற்றத்துக்குத் தூண்டுகோலாய், பக்கபலமாய் இருக்கிறான்?

'ஸ்கௌண்ட்ரல்" என்று பற்களை நறநறத்தாள் மஞ்சு. ஒரு வெறியுடன் ஒவ்வொரு வரியையும் மனப்பாடம் ஆகும் வரை படித்துத் தீர்த்தாள்.



# முதலுக்கு மரியாதை

அந்தப் பெண் வார்த்தைக்கு வார்த்தை மாதல், மாது, மாது என்று உருகி வழிந்திருந்தது வேறு இவளைக் கொதிக்க வைத்தது.

அவன்தான் அவள் ஏற்கும் பாத்திரங்களைத் தேர்வு செய்வானாம்; அவன் ஸ்கிரிப்டை சரி பார்ப்பானாம்; அவன் உடுத்தும் உடையிலிருந்து அணியும் நகைவரை, கொடுக்கும் 'எக்ஸ்பிரஷனிலிருந்து அடிக்கும் ஸ்டைல்வரை, எல்லாமே அவன்தானாம்!

"ஓ..ஹீ இஸ் மை டைரக்டர், காஸ்ட்யூம் டிசைனர், மை ஹேர் ட்ரெஸ்ஸர், மை ஃப்ரெண்ட், ஃபிலாஸஃபர், கைட், மை...மை... எவ்ரிதிங்" என்று ஒரேயடியாகப் பிதற்றித் தள்ளியிருந்தாள் அந்தப் பெண்.

"யூ ஹிப்போக்ரிட்"... மாதவனின் ஃபோட்டோ மீது ஓங்கி ஒரு குத்து விட்டாள் மஞ்சு.

இவன்தானே காலேஜ் லெக்சரர் வேலையை விடச் சொல்லி வற்புறுத்தினான்? ஹெச்.ஓ.டி. ஆகப் பிரமோஷன் வந்தபோது "என் மேல உனக்கு அன்பிருந்தா, இந்த பிரமோஷனை ஏத்துக்காம வேலையை ராஜினாமா செய்; இல்லைன்னா என்னை விட உனக்கு வேலைதான் உசத்தின்னு அர்த்தம்" என்று ப்ளாக்மெயில் செய்தான்? சின்னச் சின்ன விஷயங்களுக்கெல்லாம் தகராறு செய்து, கடைசியில் "ம்யூச்சு



வல் டைவர்ஸ்'' வரை போனது? தவித்தாள் மஞ்சு...

அவசரமாக ஃப்ரிஜ்ஜைத் திறந்து 'ஜில்'லென்ற மினரல் வாட்டரைக் காலி செய்த பின்தான், தன்னிலைக்குத் திரும்பினாள்; 'சட்... எதற்காக இப்படிப் பதற்றப்பட வேண்டும்? இன்று அவன் யாரோ... நான் யாரோ... எவன் எக்கேடு கெட்டால் எனக்கென்ன?' மனத்தை ஆசுவாசப்படுத்திக் கொண்டாள்.

சற்று நிதானத்துக்கு வந்த பின்தான், கட்டுரையை எழுதியவரின் பெயர் கண்ணில் பட்டது... 'விபா கணேஷ்..' ''அட, அதே விபாவாக இருக்குமா?'' எண்ண அலைகள் ஓலமிட்டன; ''இன்னும் நீ விபா கணேஷ்தானா? அப்படியானால் நீ கல்யாணம் செய்து கொள்ளவே இல்லையா? லக்கி கேர்ள்.''

''ஹேய் விபா... எனக்கு உன்னோட நிறையப் பேசணுமே..''.... மனத்தின் ஓட்டத்துக்கு இத்தனை சக்தியா? தொலைபேசி அடுத்த நிமிடமே சிணுங்கியது.

''ஹலோ...மிஸஸ் மஞ்சு இருக்காங்களா?'' என்றது ரிஸீவர்.

''நான் மஞ்சுதான் பேசறேன்... நீங்க யாரு?''

''ஹாய்... நான் விபா... எனக்கு உன்னை உடனே பாக்கணும்..''

''கம் ஹோம், நம்பர் ஃபைவ், செகண்ட் அவென்யூ; இந்திரா நகர், திருவான்மியூர்..''

''ஐம் தேர் இன் ஃபிப்டீன் மினிட்ஸ்.''

லெமன் டீ போட்டு, ஃப்ளாஸ்க்கில் வைத்துவிட்டு காத்திருக்கும் நேரத்தில், விபாவைப் பற்றிய நினைவுகளை அசைபோட்டாள் மஞ்சு.

''ஏய்... எனக்கு ஏன் விபான்னு பேர் தெரியுமா? எங்க பாட்டி லக்ஷ்மி அஷ்டோத்திரம் படிச்சுக்கிட்டே ''ஓம் விபாய நமஹ''ன்னு பூப்போட்டுக்கிட்டிருந்தாங்களாம்; அப்ப எங்கப்பா ஓடி வந்து, நான் பொறந்ததைச் சொன்னாராம். பாட்டி பூஜையை அங்கேயே நிறுத்திட்டு, விபா பொறந்திருக்கான்னாங்களாம்..''

''எங்க வீட்ல எல்லாருக்கும் நான் டாக்டராகணும்னுதான் ஆசை; ஆனா நான் ஜர்னலிசம்தான் படிக்கப் போறேன்...

''எனக்கு கரியர்ல நன்னா ஷைன் பண்ணணும்; நான் கல்யாணம் இல்யாணமெல்லாம் செஞ்சுக்கிட்டு, வீடா வேலையான்னெல்லாம் தவிச்சுக்கிட்டிருக்க மாட்டேன்..''...

மத்தாப்பூச் சிதறல்களாய்ப் பேச்சு; முல்லையைக் கவிழ்த்துக் கொட்டியது போல் ஒரு சிரிப்பு. பளிச்சென்ற மின்னல் போல் எடுக்கும் முடிவு. விபாவைப் பற்றிய எல்லாமே பிரகாசமாய் ஒளிர்ந்தன. கல்லூரியில் முதுகலைப் படிப்பு வரை கூடவே

ஜெயஸ்ரீ ராஜ்

இருந்த விபா, மஞ்சுவுக்கும் மற்றவர்களுக்கும் ஒரு நம்பிக்கை நட்சத்திரமாகவே ஜொலித்தாள்.

இவளுக்காகக் காதல் தூது சென்றதிலிருந்து, சண்டைக் கோழிகளாய்ச் சிலிர்த்து நின்ற இரு பக்கத்துப் பெற்றோரையும் வழிக்குக் கொண்டு வந்து, மாதவனுடன் இனிதாகத் திருமணம் முடித்து வைத்தது வரையில், அவள் பங்கு ஏராளம். அதன் பிறகு, இருவருக்கும் ஒத்து வராமல் பிரிந்தபோது, மிகவும் துக்கப்பட்டவளும் விபாதான். அப்புறம் திடீரென்று கொல்கத்தா சென்று விட்டாள், ஏதோ ஒரு நாளேட்டின் ஆசிரியையாக!

ஏழெட்டு வருடங்கள் ஓடியபின்னும், ஏழெட்டு வயது குறைந்தது போல்தானிருந்தது விபாவுக்கு.

"ஹாய் ஸ்மார்ட்டி".... ஓடிவந்து கட்டிக் கொண்டாள் மஞ்சு. லெமன் டீயும் பிஸ்கட்டுமாய்ச் சில மணித்துளிகள் கரைந்தன.

"அந்த ஆக்ட்ரஸோட மாதவனைப் பார்த்ததும் நான் ஷாக் ஆயிட்டேன் யார்"... விபாதான் ஆரம்பித்தாள். "வார்த்தைக்கு வார்த்தை 'ஷாம்லி ஈஸ் ஸோ டாலண்டட்'னு இவர் அலட்டிக்கறதும், 'மாதவ் ஈஸ் ஸிம்ப்ளி க்ரேட்'னு அவ கொஞ்சறதும் ரொம்ப ஆர்ட்டிஃபிஷியலா இருந்தது....'' விபா நொடித்தாள்.

"எல்லாம் ஒரு "ஷோ" தானே? அது செயற்கையாயில்லாம வேற எப்படி இருக்கும்?" மஞ்சு பொறிந்து தள்ளினாள்.

''இண்டர்வியூ முடிஞ்சதும் அந்தப் பெண்ணை ஓரங்கட்டிட்டு மாதவன்கிட்ட 'இந்த ஷாம்லிகிட்ட எதைக் கண்டு மயங்கினீங்க?'ன்னேன்..."

"அதுக்கு என்ன பதில் வந்தது?" அடக்க மாட்டாத ஆவல், மஞ்சுவின் குரலிலேயே ஒலித்தது.

''ம்ம்.... நடிப்புங்கறது எல்லோருக்கும் வாய்க்க முடியாத ஒரு ஒப்புயர்வற்ற கலை; அது ஷாம்லிகிட்ட பிரவாகமெடுத்து ஓடுது; அந்த ஆற்றலுக்கு ஈடா உங்க மஞ்சுகிட்ட என்ன இருக்கு? சும்மா வராட் வராட்னு சுத்தி, 'புக்'ல இருக்கறதை அப்படியே வாமிட் பண்ற வேலை."ன்னாரு."

மஞ்சு மனசுக்குள் முறுவலித்துக் கொண்டாள். "பொம்பளைங்களைப் படி தாண்ட விடமாட்டாரே... இப்ப எப்படி பலபேர் முன்னாடி தன் மனைவியை நடிக்க வுடறாராம்?"

"கேக்காம விடுவேனா? உங்க கொள்கை எல்லாம் காத்துல பறந்துடுச்சா'ன்னேன்; அதுக்கு, 'ஷாம்லிக்கு அசாத்திய திறமை; அதை குடத்துள் விளக்கா மங்கச் செய்யிறது மகா பாவம்; அவ கலை, உலகுக்குச் சொந்தமானது'... அப்படி இப்படின்னு டயலாக் பேசிட்டு, 'இந்தக் காலத்துல டீச்சர் வேலைக்கு வர்றவங்க காசுக்கு மாரடிக்கறவங்கதான்; ஒரு மஞ்சு இல்லைன்னா ஆயிரம் சஞ்சு... பஞ்சு... ரஞ்சு..' அப்படீன்னு கேவலமாப் பேசவே, நான் 'டக்'குனு 'கட்' பண்ணிட்டு எழுந்துட்டேன்"... விபா படபடக்கையில் மஞ்சு அமைதியாகப் புன்னகை செய்தது ஆச்சர்யமாயிருந்தது. "உன்னால எப்படி இவ்ளோ கூலா இருக்க முடியுது மஞ்சு?"

"நான் ஜெயிச்சுட்டேன் விபா; அந்த மாதவன் மனசு முழுக்க நான்தான் ஆக்ரமிச்சிட்டிருக்கேன்; பாரேன்... நீ என்னைப் பத்திப் பிரஸ்தாபிக்கவே இல்லை; ஆனாலும், உன் கேள்விக்கான பதில்கள் என்னைச் சுத்தியே இருக்கு; அவளை என்னோட ஒப்பிடற மனோபாவமிருக்கு; அவரால என்னை மறக்க முடியல்ல..."...

"ப்ச... உனக்கு நீயே ஆறுதல் சொல்லிக்கறா மாதிரி, உன்னை நீயே ஏமாத்திக்கற மஞ்சு; அவளோடதான் ரொம்ப சந்தோஷமா வாழ்ந்துக்கிட்டு இருக்கறதா மாதவன் சொல்றாரே... உன்கிட்ட திரும்பி வர்ற எண்ணம் எதுவும் இல்லையே..."

"நான் சைக்காலஜியில எம்ஃபில் வாங்கினவ விபா; மனுஷ மனசைப் பத்தி நல்லாவே புரியும்; அவரால ஷாம்லியோட நிச்சயம் சந்தோஷமா இருக்க முடியாது; ஆனாலும் அப்படி இருக்கறதா காட்டிக்கணும்..."

"ஏன்?"

"முதல் திருமணத்துல தோல்வியுற்றவங்க, எப்படியாவது ரெண்டாவது திருமணத்தைக் காப்பாத்திக்கப் பாடுபடுவாங்க; அப்பதான் முதல் கல்யாணம் ஃபெயிலியரானது தன்னால இல்லைங்கறதை உலகுக்கு உணர்த்த முடியும்? இதுக்காக அவங்க செய்யிற தியாகங்கள் இருக்கே... அப்பப்பா... கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிக்கிட்டு முதல் கல்யாணத்தையே காப்பாத்தியிருக்கலாமோன்னு தோணும்"... மஞ்சு பேசப் பேச விபா ஆச்சர்யத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள். ○



''சொல்குற்றமுமில்லை; பொருள் குற்றமுமில்லை... அப்புறம் ஏன் உங்க பாடலுக்கு அரசர் பரிசு தரவில்லை புலவரே..!?''

''கஜானா காலியாம்!''

- கே.ஜி.எஸ். கோவிந்தன்

# மான்சூன் வெட்டிங்



'சாவி'யின் 'வாஷிங்டனில் திருமணம்', ஒரு தமிழ்க் குடும்பம் அமெரிக்காவில் நடத்தும் கல்யாணத்தை நாடக மேடையில் கொண்டுவந்து கலகலப்பை உண்டாக்கிற்று. 'மான்சூன் வெட்டிங்'கில் தில்லியில், மழைக்காலத்தில் நடக்கிற ஓர் இந்து-பஞ்சாபி குடும்பத்துக் கல்யாணத்திற்காக, உறவினர்கள் ஒன்று சேரும் சந்தர்ப்பத்தை வைத்து, சின்னச் சின்ன சம்பவங்களை இணைத்து திரைப்படமாக்கி இருக்கிறார்கள். இன்டர்நேஷனல் அவார்டுகளைக் குவித்து வரும் இயக்குநர் மீரா நாயரின் இந்தப் படத்திற்கும் வெனிஸ் திரைப்பட விழாக்களில் பரிசுகள் கிடைத்திருக்கின்றன.

ஒரு ஸ்டாம்ப்பின் பின்னால் எழுதிவிடலாம் என்பார்களே அத்தனைதான் கதை. ஸப்ரினா தவான் எழுதியது.

ஏற்கெனவே காதலித்தவரை விட்டுவிட்டு, நஸ்ருதின் ஷா (லலித் வர்மா)வின் பெண் வசுந்தரா தாஸ் (அதிதி), பெற்றோர் நிச்சயிக்கும் அமெரிக்க மாப்பிள்ளை பர்வீன் தபஸ்லை (ஹேமந்த்) திருமணம் செய்து கொள்ளுகிற சாதாரண பாலிவுட் கதைதான். இந்தச் சூடான காதல் கதைக்கு, தில்லியின் மழைக்காலப் பின்னணி மட்டுமல்ல, தில்லி பஜார்களின் பரபரப்பும் இரைச்சலும்கூடக் கைகொடுக்கின்றன.

ஆனால் இந்தக் காதல் கதைக்கு இணையாக, வீட்டு வேலைக்காரி அலைஸ் (திலோத்தமா ஷோம்)க்கும், பந்தல் காண்ட்ராக்டர் துபே (விஜய் ராஸ்)க்கும் இடையே மலரும் மென்மையான காதலை, முக்கிய கதைக்கு ஈடாகச் சித்திரிப்பதுதான் மீராவின் புதிய கோணம்.

நஸ்ருதின் ஷா உட்பட யாருமே 'நடித்தி'ருப்பதாகத் தோன்றவில்லை. அத்தனை இயல்பாக ஒரு குடும்பத் திருமணத்தில் நாமும் பங்கு கொள்ளுகிற மாதிரி யதார்த்தமான நிகழ்ச்சிகள், வசனங்கள்.

'நம் ஒரே பெண் கல்யாணம்தானே, செலவானால் என்ன?' என்று மனைவி பிம்மி வர்மா (லலித் துபே) கேட்கிறபோது, எக்கச்சக்கமான பில்களை வைத்துக்கொண்டு தலையைப் பிய்த்துக் கொள்ளும் நஸ்ருதின் ஷா. டீவியே கதியென்று கிடக்கும் பிள்ளையின் நன்மை கருதி ஹாஸ்டலில் சேர்த்துவிட வாதாடும் நஸ்ருதின் ஷா. குடும்பத்துச் சிறுபெண்ணிடம் மூத்தவர் (ரஜத் கபூர்) நடந்து கொள்ளும் முறை கண்டு சிறுத்துப் போய் இரவில் மனைவியிடம் குமுறி அழும் நஸ்ருதின் ஷா. அவரை மறு நாள் வைபவத்தில் கலந்து கொள்ள வேண்டாம் என்று நிர்த்தாட்சண்யமாக வெளியேற்றும் நஸ்ருதின் ஷா என்று எத்தனை பரிமாணங்கள்!

காமிராமேன் டெக்லான் க்வின்னை ஒளிக் கவிஞர் என்று மீரா நாயரே பாராட்டியிருப்பதை அப்படியே ஆமோதிக்கலாம். இசை என்று மெனக்கிட வில்லை என்றாலும் பொருத்தமான இடங்களில் பொருந்திவிடும் இசை.

எதையும் மிகைப்படுத்தாமல் திரைப்படமாக்கினால் போதும், சர்வதேசப் பரிசுகள் என்ன, ஆஸ்கரைக் கூடத் தட்டிக்கொண்டு வந்துவிடுவார் மீரா நாயர்!

- சித்தார்த்

# சிவகாமியின் சபதம்

முப்பத்து ஏழாம் அத்தியாயம்

**கண்ணபிரான்**

முன் அத்தியாயத்தில் கூறியபடி, இதயத்தில் பெரிய பாரத்துடனே மடத்தின் வாசற்பக்கம் வந்த ஆயனர், தம் உள்ள நிலையை வெளிக்குக் காட்டாமல் சமாளித்துக்கொண்டு, சிவகாமியைப் பார்த்து, "குழந்தாய்! இப்பொழுதே நாம் ஊருக்குத் திரும்பி விடலாமல்லவா?" என்று கேட்டார்.

"கமலியைப் பார்த்துவிட்டுக் காலையில் போகலாம் அப்பா!" என்று சிவகாமி மறுமொழி சொல்லிக் கொண்டிருக்கும்போதே, கட கடவென்ற சத்தத்துடன் இரட்டைக்குதிரை பூட்டிய ரதம் ஒன்று அங்கே வந்து நின்றது. அதை ஓட்டி வந்த சாரதி ரதத்தின் முன் தட்டிலிருந்து குதித்து வந்து, மடத்து வாசலில் ஆயனரும் சிவகாமியும் நின்று கொண்டிருந்த இடத்தை அடைந்தான். அவன் நல்ல திடகாத்திர தேகமுடையவன். பிராயம் இருபத்தைந்து இருக்கும்.

"ஐயா! இங்கே மாமல்லபுரத்திலிருந்து ஆயனச் சிற்பியாரும் அவருடைய மகள் சிவகாமி அம்மையும் வந்திருக்கிறார்களாமே, நீங்கள் கண்டதுண்டோ?" என்று அவன் கேட்டான்.

"ஓகோ! கண்ணபிரானா? எங்களை யார் என்று தெரியவில்லையா, உனக்கு?" என்றார் ஆயனர்.

"அதுதானே தெரியவில்லை? இந்தச் சப்பை மூக்கையும் இந்த அகலக் காதை

அமரர் கல்கி

யும் எங்கே பார்த்திருக்கிறேன்? நினைவு வரவில்லையே?'' என்று கண்ணபிரான் தன் தலையில் ஒரு குட்டுக் குட்டிக் கொண்டு யோசித்தான்.

''என் அப்பனே! மண்டையை உடைத்துக்கொண்டு எங்கள் மேல் பழியைப் போடாதே! கமலி அப்புறம் எங்களை இலேசில் விடமாட்டாள். நீ தேடி வந்த ஆயனச் சிற்பியும் சிவகாமியும் நாங்கள்தான்'' என்றார் ஆயனர்.

''அடாடாடா! இதை முன்னாலேயே சொல்லியிருக்கக்கூடாதா? எனக்கும் சந்தேகமாய்த்தானிருந்தது. ஆனால் 'கண்ணாற் கண்டதும் பொய். காதால் கேட்டதும் பொய், தீர விசாரிப்பதே மெய்' என்று கும்பகர்ணனுக்கு ஜாம்பவான் சொன்ன பிரகாரம்... இருக்கட்டும்; அப்படியென்றால், நீங்கள்தான் ஆயனச் சிற்பியாரும் அவருடைய மகள் சிவகாமியுமாக்கும்? ஆனால், உங்களில் ஆயனச் சிற்பி யார்? அவருடைய மகள் யார்?'' என்று விகடகவியான அந்த ரதசாரதி கேட்டுவிட்டு, அந்தி மாலையின் மங்கிய வெளிச்சத்தில் அவ்விருவர் முகங்களையும் மாறி மாறி உற்றுப் பார்த்தான்.

சிவகாமி கலகலவென்று நகைத்துவிட்டு, ''அண்ணா! நான்தான் சிவகாமி; இவர் என் அப்பா; நாம் நிற்பது பூலோகம்; மேலே இருப்பது ஆகாசம்; உங்கள் பெயர் கண்ணபிரான்; என் அக்கா கமலி. இப்போது எல்லாம் ஞாபகம் வந்ததா? அக்கா சௌக்கியமா? இன்று இராத்திரி உங்கள் வீட்டுக்கு வருவதாக எண்ணியிருந்தோம்'' என்றாள்.

''ஓஹோ! அப்படியா? கும்பிடப் போன தெய்வம் விழுந்தடித்துக் குறுக்கே ஓடிவந்த கதையாக அல்லவா இருக்கிறது? நீங்கள் எங்கள் வீட்டுக்கு வருவதாக இருந்தீர்களா?''

''ஆமாம்; வரலாமா? கூடாதா?''

''ஒருவிதமாக யோசித்தால், வரலாம்; இன்னொரு விதமாக யோசித்தால் வரக்கூடாது.''

''அப்பா! நாம் ஊருக்கே



போகலாம்; புறப்படுங்கள்!'' என்று கோபக் குரலில் சிவகாமி கூறினாள்.

''அம்மா! தாயே! அப்படிச் சொல்லக்கூடாது. கட்டாயம் வர வேண்டும். நான் இன்றைக்கு வீட்டை விட்டுக் கிளம்பியபோது கமலி என்ன சொன்னாள் தெரியுமா? 'இதோ பார்! இன்றைக்கு நாவுக்கரசர் மடலாயத்துக்கு ஆயனச் சிற்பியார் வருகிறாராம். அவருடன் என்னுடைய தோழி சிவகாமியும் வந்தாலும் வருவாள். இரண்டு பேரையும் அழைத்துக்கொண்டுதான் இராத்திரி நீ வீட்டுக்குத் திரும்பி வர வேண்டும்' என்றாள். நான் என்ன சொன்னேன் தெரியுமா? 'அவர்கள் பெரிய மனுஷாள், கமலி! நம்மைப் போன்ற ஏழைகள் வீட்டுக்கு வருவார்களா? வந்தால்தான் திரும்பிப் போவார்களா?' என்றேன். அதற்குக் கமலி 'நான் சாகக் கிடக்கிறேன் என்று சொல்லி அழைத்து வா!' என்றாள்...



''அடாடா! கமலிக்கு ஏதாவது உடம்பு அசௌக்கியமா, என்ன?'' என்று ஆயனர் கவலையுடன் கேட்டார்.

''ஆம், ஐயா! ஒரு வருஷமாகக் கமலி அவளுடைய தோழியைப் பார்க்காமல் கவலைப்பட்டுக் கொஞ்சம் கொஞ்சமாகப் பிராணனை விட்டுக்கொண்டிருக்கிறாள். முக்கால் பிராணன் ஏற்கெனவே போய்விட்டது. மீதியும் போவதற்குள் நீங்கள் வந்தால் நல்லது.''

''அப்படியானால், உடனே கிளம்பலாம். அதற்குள்ளே இங்கே ஜனக் கூட்டம் கூடிவிட்டது'' என்றாள் சிவகாமி.

உண்மையிலேயே அங்கே கூட்டம் கூடிவிட்டது. நகரத்தின் அந்த நெருக்கடியான பகுதியில் ஆயனரும் சிவகாமியும் அரண்மனை ரத சாரதியுடன் பேசிக்கொண்டிருக்கும் காட்சி ஜனக்கூட்டத்தைக் கவர்ந்து இழுத்ததில் ஆச்சரியம் என்ன?

ஆயனரையும் சிவகாமியையும் கண்ணபிரான் தான் கொண்டு வந்திருந்த ரதத்தில் ஏறிக் கொள்ளும்படிச் செய்தான். காஞ்சிமா நகரின் விசாலமான தேரோடும் வீதிகளில் இரண்டு குதிரை பூட்டிய அந்த அழகிய அரண்மனை ரதம் பல்லவ ராஜ்யத்தின் சிறந்த ரத சாரதியினால் ஓட்டப்பட்டு



விரைந்து சென்றது.

ரதம் போய்க்கொண்டிருக்கையில் சிவகாமி "அண்ணா! உங்கள் வீட்டுக்கு வருகிறோம் என்று நான் சொன்னதற்கு, 'இன்னொருவிதத்தில் யோசித்தால் வரக்கூடாது' என்று சொன்னீர்களே! அது என்ன?" என்று கேட்டாள்.

"தங்கச்சி! மடத்திலேயிருந்து குமார சக்கரவர்த்தியை அழைத்துப் போனேனல்லவா? அரண்மனை வாசலில் அவர் இறங்கியதும் என்னைப் பார்த்து, 'கண்ணா! ரதத்தை ஓட்டிக்கொண்டு மடத்துக்குப் போ! அங்கே ஆயனரும் அவர் மகளும் இருப்பார்கள். அவர்களை ரதத்தில் ஏற்றிக்கொண்டு போய் மாமல்லபுரத்தில் விட்டுவிட்டு வா! அவர்கள் வேண்டாம் என்று சொன்னாலும் கேட்காதே!' என்று கட்டளையிட்டார். குமார சக்கரவர்த்தி அவ்விதம் கட்டளையிட்டிருக்கும்போது, நம்முடைய வீட்டுக்கு அழைத்துப் போகலாமா என்று யோசித்தேன்" என்றான் கண்ணபிரான்.

"சுற்றி வளைத்துப் பீடிகை போடாமல் உங்களால் ஒன்றும் சொல்ல முடியாதோ?" என்று சிவகாமி கேட்டாள்.

"முடியாது தங்கச்சி, முடியாது! அதற்குக் காரணமும் உண்டு. முன்னொரு காலத்தில் நான் சின்னக் குழந்தையாயிருந்தபோது...!"

"நிறுத்துங்கள்! நான் அதைக்

கேட்கவில்லை. அவசரமாகக் குமார சக்கரவர்த்தி மடத்திலிருந்து போனாரே, ஏதாவது விசேஷமான செய்தி உண்டோ என்று கேட்டேன்."

''மதுரையிலிருந்து தூதர்கள் வந்திருக்கிறார்கள்."

மதுரையிலிருந்து தூதர்கள் என்றதும் சிவகாமிக்குத் தான் முன்னம் கேள்விப்பட்ட திருமணத் தூது விஷயம் ஞாபகம் வந்தது.

எனவே, "தூதர்கள் என்ன செய்தி கொண்டு வந்தார்கள்?'' என்று கவலை தொனித்த குரலில் கேட்டாள்.

"அந்த மாதிரி இராஜாங்க விஷயங்களையெல்லாம் நான் கவனிப்ப தில்லை, தங்கச்சி!'' என்றான் கண்ண பிரான்.

அதைக் கேட்ட ஆயனர், "ரொம்ப நல்ல காரியம், தம்பி! அரண்மனைச் சேவகத்தில் வெகு ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். நமக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களைக் காதிலேயே போட்டுக் கொள்ளக்கூடாது'' என்றார்.

அப்போது ரதம் தெற்கு ராஜவீதியில் அரண்மனையின் முன் வாசலைத் தாண்டிப் போய்க்கொண்டிருந்தது.

வீதியின் ஒரு பக்கத்தை முழுவதும் வியாபித்திருந்த அரண்மனையின் வெளிமதிலையும், முன் வாசற் கோபுரத்தையும், அதைக் காவல் புரிந்த வீரர்களையும் உள்ளே தெரிந்த நெடிய பெரிய தாவன்யமான சுவர்களையும், படிப்படியாகப் பின்னால் உயர்ந்து கொண்டு போன உப்பரிகை மாடங்களையும் சிவகாமி பார்த்தாள். தன்னையும் தன்னுடைய இதயத்தைக் கவர்ந்த சுகுமாரரையும் பிரித்துக் கொண்டு இத்தனை மதில் சுவர்களும் மாடகூடங்களும் தடையாக நிற்கின்றன என்பதை எண்ணி ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள்.

## முப்பத்து எட்டாம் அத்தியாயம்

## கமலி

காஞ்சிமாநகரில் சக்கரவர்த்தியின் பிரதான அரண்மனைக்குப் பின்புறத்தில் விஸ்தாரமான பூந்தோட்டம் இருந்தது.

பூந்தோட்டத்தின் பின்புற மதிற் சுவரையொட்டிச் சில சிறு கட்டடங்கள் இருந்தன. அவற்றில் சில குதிரை லாயங்கள்; சில ரதங்களை நிறுத்தும் கொட்டடிகள்; மற்றவை ரத சாரதிகளும் தோட்டக்காரர்களும் வசித்த வீடுகள்.

அந்த வீடுகளில் ஒன்றுக்கு முன்னால், கண்ணபிரான் ஓட்டிக் கொண்டு வந்த ரதம் நின்றது. ரதத்தின் சத்தத்தைக் கேட்டு, வீட்டுக்குள்ளேயிருந்து ஒரு பெண் குதூகலமாகக் குதித்துக் கொண்டு ஓடி வந்தாள்.

"கமலி! யாரை அழைத்து வந்திருக்கிறேன், பார்!'' என்று சொல்லிக் கொண்டே கண்ணபிரான் ரதத்திலிருந்து குதித்தான்.

அதேசமயத்தில் ரதத்திலிருந்து சிவகாமி இறங்குவதைப் பார்த்த கமலி, ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று சிவகாமியை ஆர்வத்துடன் கட்டிக் கொண்டாள்.

அப்போது வீட்டிற்குள்ளேயிருந்து ஒரு பெரியவர் வந்தார்.

''அப்பா! யார் வந்திருக்கிறார் பாருங்கள்!'' என்றான் கண்ணபிரான். அந்தப் பெரியவர் உற்றுப் பார்த்து விட்டு, ''வாருங்கள், ஐயா!'' என்று சொல்லிக்கொண்டு ஆயனரின் அருகில் சென்றார்.

பெரியவரும் ஆயனரும் பேசிக் கொண்டே வீட்டுத் திண்ணையில்

அமர்ந்தார்கள். கமலியும் சிவகாமியும் உள்ளே போனார்கள்.

சிவகாமியும் கமலியும் குழந்தைப்பிராயத்திலிருந்து தோழிகள். ஆயனர் காஞ்சியில் இருந்த காலத்தில் அவருடைய வீட்டுக்கு அடுத்த வீட்டில் கமலியின் பெற்றோர்கள் வசித்தார்கள். சிவகாமி குழந்தையாயிருந்தபோதே, அவளைக் காட்டிலும் ஒன்றரை வயது மூத்தவளான கமலி சிவகாமியைத் தன் மடியில் வைத்துக்கொண்டு, "தங்கச்சி!" என்று அருமையாக அழைத்துச் சீராட்டுவாள்.

குழந்தை சிவகாமியும், "அக்கா! அக்கா!" என்று மழலைச் சொல்லில் குழறுவாள்.

இவ்வாறு ஆரம்பித்த அக்குழந்தைகளின் சிநேகமும் நாளுக்கு நாள் வளர்ந்து முதிர்ந்து வந்தது. ஆயனர் காட்டுக்குள்ளே சென்று வீடு கட்டிக்கொண்டு வசிக்கத் தொடங்கிய பிறகு கமலி அடிக்கடி அங்கு வந்து மாதக் கணக்கில் தங்கியிருப்பாள்.

சிவகாமி ஆட்டம் பயிலும்போதெல்லாம் கமலி அவள் எதிரில் இருந்து இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருப்பாள். அவளுடைய ஆட்டத் திறமையைப் பாராட்டுவாள். "என் தங்கச்சிக்கு இணை ஈரேழு பதினாலு உலகத்திலும் கிடையாது!" என்பாள். ஆயனருக்கு அடுத்தபடியாகச் சிவகாமிக்கு ஆட்டக் கலையில் ஊக்கமளித்தவள் கமலி என்றுதான் சொல்ல வேண்டும்.

கமலியின் தகப்பனார் காஞ்சியில் பெயர் பெற்ற குதிரை வியாபாரி. அரேபியா முதலான வெளி தேசங்களிலிருந்து அவர் குதிரைகள் தருவிப்பார். மாமல்லபுரத்துத் துறைமுகத்தில் கப்பலில் வந்து குதிரைகள் இறங்கும். அவற்றைக் காஞ்சிக்குக் கொண்டு வருவார். முதலில் அரண்மனைக் குதிரை லாயத்தின் தலைவரும் பல்லவ சைனியத்தின் குதிரைப்படைத் தலைவரும் வந்து, புதிதாகத் தருவிக்கப்பட்ட குதிரைகளைப் பார்ப்பார்கள். அவர்கள் தங்களுக்கு வேண்டியவற்றை வாங்கிக்கொண்டது போக மற்றக் குதிரைகளைத்தான் பொது ஜனங்களுக்கு விற்கலாம்.

இதன் காரணமாக, அரண்மனைக் குதிரை லாயத்தின் தலைவர் அடிக்கடி கமலியின் தந்தையைச் சந்திப்பதற்காக அவருடைய வீட்டுக்கு வருவதுண்டு. சில சமயம் அவருடன் அவருடைய மகனும் வருவான். அந்த வாலிபன் பெயர்தான் கண்ணபிரான்.

தந்தைமார்கள் இருவரும் குதிரைப் பரிவர்த்தனை விஷயமாகப் பேசிக்கொண்டிருக்கையில், மகனுக்கும் மகளுக்கும் இடையே இருதய பரிவர்த்தனை நடந்துகொண்டிருந்தது.

இரு குடும்பத்தாருக்கும் விஷயம் தெரிந்தபோது, கண்ணபிரானுக்கும் கமலிக்கும் கல்யாணம் செய்து வைத்தார்கள்.

இது நடந்து வருஷம் ஒன்றரை ஆயிற்று. இந்த ஒன்றரை வருஷமும் சிவகாமியும் கமலியும் சந்திக்கவில்லை என்றாலும், அவர்கள் ஒருவரை ஒருவர் நினையாத நாள் கிடையாது.



ரவு உணவு அருந்திய பின்னர், ஆயனரும் அரண்மனையின் அசுவபாலரும் வாசல் திண்ணையில் காற்றோட்டமாகப் படுத்துக்கொண்டு யுத்த நிலைமையைப் பற்றிப் பேசத் தொடங்கினார்கள்.

வீட்டுக்குள்ளே அரண்மனைப் பூந்தோட்டத்தை அடுத்திருந்த அறையில் சிவகாமியும் கமலியும் படுத்துப் பேசிக்கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்கள் யுத்தத்தைப் பற்றிப் பேசவில்லை. கமலியின் இல்வாழ்க்கைதான் அவர்கள் சம்பாஷணையில் முக்கிய விஷயமாக இருந்தது. இடையிடையே 'களீர்' 'களீர்' என்று அவர்கள் குதூகலமாகச்

சிரிக்கும் சப்தம் கேட்டது.

இரவு ஒன்றரை ஜாமத்துக்குமேல் ஆனபோது, வாசல் திண்ணையிலிருந்து ஆயனர், "அம்மா! சிவகாமி! உதயத்திற்கு முன்னால் நாம் புறப்பட வேண்டும். பேசியது போதும்; தூங்கு!" என்றார்.

கமலியும் சிவகாமியும் உடனே கண்ணை மூடிக்கொண்டு தூங்குவதற்குப் பிரயத்தனம் செய்தார்கள்.



சிறிது நேரம் ஆனதும், சிவகாமி தூங்கி விட்டதாக எண்ணிக்கொண்டு கமலி சத்தம் செய்யாமல் எழுந்திருந்து அந்த அறையின் ஒரு பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு அடுத்த அறைக்குள் சென்றாள்.

சிவகாமி கண்களை மூடிக் கொண்டிருந்தாளே தவிர உண்மையில் தூங்கவில்லை. அவளுடைய உள்ளத்தில் எத்தனை எத்தனையோ எண்ணங்கள் அலைமேல் அலை எறிந்து தோன்றிக்கொண்டிருந்தன.

கமலிக்குக் கண்ணபிரான்மேல் காதல் உண்டான நாளிலிருந்து அவள் தன்னுடைய அந்தரங்கத்தையெல்லாம் சிவகாமியிடம் அடிக்கடி சொல்வதுண்டு.

ஆரம்பத்திலிருந்தே கமலியின் காதல் ஆனந்தமாயிருந்தது. எவ்விதத் துக்கமோ வேதனையோ அவள் மனத்தில் ஏற்பட்டதில்லை. அந்த நாட்களில் அவளுடைய பேச்சு ஒரே குதூகலமாகவும் எக்களிப்பாகவுமே இருந்து வந்தது.

கல்யாணத்திற்குப் பிறகு அந்தத் தம்பதியின் இல்வாழ்க்கையும் அவ்விதமே குதூகலமாயிருக்கிறதென்பதை இப்போது சிவகாமி தெரிந்துகொண்டாள்.

ஆனால், தன்னுடைய காதல் மட்டும் ஏன் இவ்வளவு வித்தியாசமாக இருக்க வேண்டும்? அதில் எத்தனை வேதனை? எத்தனை ஆத்திரம்? எத்தனை கோபதாபம்?

கமலியின் குதூகலமான காதலுக்கும், தன்னுடைய வேதனைமயமான காதலுக்கும் உள்ள வித்தியாசத்தை எண்ணிப் பார்க்கப் பார்க்க தனக்குத் தகுதியில்லாத இடத்தில் காதலைச் செலுத்தியது தான் தன்னுடைய துன்பங்களுக்கெல்லாம் காரணம் என்று சிவகாமிக்குத் தோன்றியது.

அவரோ பெரிய சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்துக்கு உரியவர்; நாமோ கல்லில் உளியினால் வேலை செய்யும் சிற்பியின் மகள். அவருடைய காதலுக்கு நாம் ஆசைப்படுவது பெரிய பிசகுதான். ஆனால் இந்தப் பிசகுக்குக் காரணம் யார்?

இந்த ஏழைச் சிற்பியின் மகளைத் தேடிக்கொண்டு அவர்தானே வந்தார்? ஒரு கவலையுமின்றிக் காட்டில் துள்ளி விளையாடும் மானைப் போல் குதூகலமாக ஆடிப் பாடிக் கொண்டிருந்த அபலைப் பெண்ணின் உள்ளத்தில் அவர்தானே ஆசைத் தீயை மூட்டினார்? ஆஹா அந்த ஆசையானது இப்போது இப்படிப் பெருநெருப்பாய் மூண்டுவிட்டதே? உடம்பையும் உள்ளத்தையும் இப்படித் தகிக்கின்றதே?

சற்றுநேரம் புரண்டு புரண்டு பார்த்தும் தூக்கம் வராமற் போகவே, சிவகாமி படுக்கையை விட்டு எழுந்தாள். அந்த அறையின் பின்புறச் சுவரிலிருந்த பலகணியின் மாடத்தில் உட்கார்ந்தாள். அவள் எதிர்பார்த்தபடியே பலகணியின் வழியாகப் பங்குனி மாதத்து இளந்தென்றல் ஜிலுஜிலுவென்று வந்து கொண்டிருந்தது. அது சும்மா வரவில்லை. அரண்மனைப் பூந்தோட்டத்திலிருந்த சண்பக மரங்களில் நுழைந்தும், மல்லிகைச் செடிகளின் மீது தவழ்ந்தும் அந்த மலர்களின் இன்ப நறுமணத்தை அளாவிக்கொண்டு வந்தது.

அவ்விதம் சண்பகமும் மல்லிகையும் கலந்து உண்டான ஸுகந்தமானது சிவகாமியின் உள்ளத்தில் ஏதோ தெளிவில்லாத பழைய ஞாபகங்களை உண்டாக்கிற்று. எத்தனை எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னால், ஜன்ம ஜன்மாந்தரங்களில் இதேவிதமான நறுமணத்தை அவள் நுகர்ந்தது போலவும், அந்தக் காலங்களிலும் இதே விதமான இன்ப வேதனை அவள் மனத்தில் குடிகொண்டிருந்தது போலவும், மங்கிய நினைவுகள் உண்டாயின. தனது அன்பைக் கவர்ந்து உள்ளத்தைக் கொள்ளை கொண்ட ஆருயிர்க் காதலன் தனக்கு வெகு சமீபத்தில் இருந்தும் அவனை அடைய முடியாதிருப்பது போலவும், இருவருக்கும் இடையில் இன்னதென்று தெரியாத இடையூறுகள் முளைத்துப் பெரிய கரிய நிழல் உருவங்கள் எடுத்து நிற்பது போலவும் மனத்தில் பிரமைகள் உண்டாயின,

(தொடரும்)



# ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவி ஸ்ரீ நீலசரஸ்வதி ஸ்ரீ விரஜா காலபைரவர் தேவஸ்தானம்

அபராஜிதபுரி, சோழிங்கநல்லூர், சென்னை - 600 119.
☏ : 4501404.

ஸ்ரீ சிருங்கேரி, ஸ்ரீ காஞ்சி மஹாஸ்வாமிகள் ஆசிகளுடன்
குலதேவதா ப்ரீதி பூஜையும் ஸ்ரீ ராகு, கேது, செவ்வாய், சனி தோஷ பரிகார பூஜை மற்றும் ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா, ஸ்ரீ வீர சரபேஸ்வரர் மஹாயாகம் 29.12.2001 சனி காலை 7 மணி முதல் மாலை 3 மணி வரை

## அழைப்பிதழ்

ஆயுள் காரகனான ஸ்ரீ சனீஸ்வர பகவான் எல்லோருடைய ஜாதக அமைப்பிலும், ராகு–18 வருஷம், கேது–7, சனி–19 வருஷம் என்று 44 வருஷங்கள் ஆட்சி செய்கிறார். அன்றாட வாழ்வில்ராகுகாலம், எமகண்டம் சனியின் காலமே ஆகும். சனியின் கோரைப் பற்களாக திகழ்வது ராகுவும், கேதுவும். சனியின் அம்சமாக விளங்குவது செவ்வாய் ஆகும். இந்த நான்கு கிரகங்களும் உக்ர குணமுடையவை என்பதால் இவர்களை ப்ரீதி செய்து உத்தம பலன்களை பெறுவது நன்மைகளைத் தரும்.

இந்துக்கள் அனைவருக்கும் வம்ச வம்சமாக ஒரு குல தெய்வம் உண்டு. வருஷத்துக்கு ஒருமுறையாவது குலதெய்வ பூஜை செய்ய வேண்டும். வேலை விஷயமாக வெளியூர்களிலும் வெளிநாடுகளிலும் வாழ்பவர்கள் குலதெய்வ பூஜைகளையும், பித்ருக்களுக்கு செய்ய வேண்டிய திதி, சிரார்த்தம், தர்ப்பணம் இவற்றையும் செய்ய முடியுமால் உள்ளனர். இதனால் – அகால விபத்து, அக்னி, மின்சாரம், நெருப்பு இவற்றினால் துன்பம் உண்டாகுதல் பயண காலத்தில் மரண பயம், குடும்பத்தில் கலகம், பிரிவு, பீதி, பைத்தியம் பிடித்தல், விஷ வ்யாதிகள் தோன்றுதல், மரணப்படுக்கையில் படுத்தல், கல்யாணத் தடை, புத்திரப் பேறு இன்மை, வேலை கிடைக்காமல் வருந்துதல், வழக்குகளில் மாட்டுதல், சிறைவாசம் அனுபவித்தல், கெட்ட எண்ணங்களை வளர்த்துக் கொள்ளுதல் போன்ற தீய செயல்களுக்கு ஆளாகி வருகின்றனர்.

கலிகாலமான இன்று யுத்த பயம், விஷக்கிருமி பயம், புதுப்புது வியாதிகளால் பயம் இப்படி எண்ணற்றக் கஷ்டங்கள் திகழ்ந்து வருகின்றன. மேலும் சுய முயற்சியினால் ஒருவன் முன்னேறும்போது அவன் எதிரிகள் செய்யும் ஏவல், பில்லி, சூன்யம் அபிசாரகர்மா துஷ்ட தேவதை ப்ரயோகம், சத்ருபயம், மரணபயம் என்று பலவஞ்சனைகளை அன்பர்கள் அனுபவித்து வருகின்றனர். இத்தகைய சங்கடங்களிலிருந்து விடுபட்டு சாந்தியாக வாழ்வதற்காக வேண்டி 29.12.2001 அன்று நடைபெறும் பரிகார பூஜையிலும், ஸ்ரீ ப்ரத்யங்கிரா, ஸ்ரீ வீரசரபேஸ்வரர் யாகத்திலும் அன்பர்கள் கலந்து கொண்டு பயன் பெறலாம்.

**உபயம்**

பரிகார பூஜை – ரூ.1200.00, யாக பூஜை – ரூ.10000.00, பித்ருக்கள் நினைவாக அன்னதானம் – ரூ. 2000, குலதெய்வம் நினைவாக புஷ்ப அலங்காரம் – ரூ. 2000.00. உபய தொகைக்கான A/c Payee Draft ஐ SRI PRATHYANGIRA ASHRAM TRUST என்ற பெயருக்கு எடுத்து உபயதாரர்களின் பெயர், குடும்பத்தினர் பெயர், நட்சத்திரம், கோத்திரம், குறைபாடுகள் இவற்றை எழுதி கோயில் முகவரிக்கு அனுப்பி ரசீது பெற்றுக் கொண்டு பூஜைகளில் நேரில் கலந்து கொள்ளலாம். வெளியூர் உபயதாரர்களுக்கு பதிவுத் தபாலில் பிரசாதம் அனுப்பப்படும்.

**குறிப்பு: மஹாலக்ஷ்மி, அன்னபூரணி, வராஹி, சரபேஸ்வரர், பஞ்சமுக ஆஞ்சநேயர், பாலமுருகன், ஐயப்பன் சந்நிதிகள் நிர்மாணிக்கும் பணியில் கைங்கர்யம் செய்ய விருப்பம் இருப்பவர்கள் தொடர்பு கொள்க.**



விருது பெறுவோர் பக்கம்

# வீடும் வெளியும்!

எடுத்தவுடனேயே ஒன்றைச் சொல்லி விடுகிறேன்: எந்தப் பெண்ணும் வீட்டிலும், வெளியிலும் ஒரேயடியாக வெற்றியைச் சம்பாதித்து விட முடியாது.

எந்தக் கலைஞரையும் அவர் மேடையில் எப்படிச் செய்கிறார் என்றுதான் பார்க்கிறார்கள். அவருடைய வெற்றிக்குக் காரணம் என்ன, அவருடைய மனநிலை எப்படி இருக்கிறது என்று யாரும் உள்ளே புகுந்து பார்ப்பதில்லை.

வீட்டையும் கவனித்துக் கொண்டு, வெளியிலும் போய் நல்ல பெயர் வாங்குவது சாதாரண விஷயமில்லை. வீட்டிலேயே எல்லோரும் புரிந்து கொள்ள வேண்டும். ஒத்துழைப்புத்தரவேண்டும். சிலவற்றைத் தியாகம் செய்ய வேண்டும். பிரமாதமாக இருந்தது 'என்று வெளியில் பேசிக் கொண்டாலும், 'இன்னும் நன்றாகச் செய்திருக்கலாமோ?' என்று தோன்றுவதும் உண்டு. வாழ்க்கையில் எல்லாமே நினைத்தபடி சாதித்துவிட முடிவதில்லை என்பதை மனசாட்சி உள்ளவர்கள் நிச்சயம் ஒப்புக் கொள்ளுவார்கள்.

எத்தனையோ எதிர்நீச்சல் போட்டு, மூழ்கி, மூழ்கி இப்போது எழுந்து நின்று, இந்தக் கச்சேரி வேகத்தைக் கொஞ்சம் குறைத்துக் கொள்ளலாமே என்று தீர்மானித்த போது தான், இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொசைடி, 'விருது வழங்குகிறோம், பிடியுங்கள்' என்று முன்வந்தது. ஒரு சந்தோஷம்_ என் அம்மாவும் இந்த மியூசிக் சீசனில் என்னுடன் இருப்பார்.

கடந்த சில வருடங்களாகவே நான் வெளியூர்க் கச்சேரிகளைத் தவிர்த்து வந்தேன். வீணையைத் தூக்கிக் கொண்டு ஊர் ஊராகப் போவது மகிழ்ச்சியைத் தருகிற விஷயமல்ல. நான் சின்னவளாக இருந்தபோது என் அம்மாதான், பாவம், வீணையைத் தூக்கிக் கொண்டு வருவாள். தந்திக் கம்பிகளை மாற்றுவதுகூட அவர்தான். நான் எதையும் கண்டு கொள்ளாமல், மேடை ஏறுவது, வாசிப்பது, என்று நிம்மதியாக இருப்பேன்! கேரளாவிலோ, கிராமத்துக் கோயில் கச்சேரிகளிலோ, இரவு



பன்னிரண்டு, ஒரு மணி வரை வாசித்து, ரசிகர்கள் கொட்டாவி விட, நான் கிட்டத்தட்ட தூக்கக் கலக்கத்தில் வீணைக் குடத்தில் தலையை மோதிக் கொள்கிற மாதிரி ஆனதுண்டு!

வீணை கனமானது. கல்யாணத்துக்கு அப்புறம் நானே வீணையைத் தூக்கிக் கொண்டு போக ஆரம்பித்தேன். எனக்கு நம்பகமான உறவினரும் இல்லை. சிஷ்யரும் இல்லை.

சென்ட்ரல் ஸ்டேஷனுக்குள் நுழைந்த உடனேயே கவலை தொற்றிக் கொள்ளும். பீடி குடிக்காத, தண்ணி போடாத போர்ட்டர் யாரேனும் இருக்கிறார்களா? என்று பார்ப்பேன். நேரம் ஓடும். கை வலிக்கும். இனியும் தூக்கிக் கொண்டு நடக்க முடியாது என்ற ஞானோதயம் பிறக்கும். போர்ட்டரின் கோத்திரம், நட்சத்திரம் எல்லாம் பார்த்துக் கொண்டிருந்தால் நடக்காது. பீடி குடிக்கிற போர்ட்டர் உட்பட எல்லாருக்கு உள்ளேயும் கடவுள் இருக்கிறார் என்று சமாதானம் செய்து கொண்டு, ஒருவரிடம் வீணையைத் தூக்கிக் கொடுப்பேன். கிருஷ்ணார்ப் பணமஸ்து!

''அந்த கிடாரை இப்படிக் குடும்மா!'' என்றுதான் எல்லா போர்ட்டர்களுமே கேட்கிறார்கள். ஐயோ, இது வீணை. வேத காலத்துது என்றெல்லாம் அவர்களிடம் லெக்சர் அடித்துக் கொண்டிருக்க முடியுமா? 'சரி, உனக்குக் கிடார்தான் தெரியுமென்றால் அப்படியே இருக்கட்டும்!' என்று விட்டு விட்டு, எப்படி எடுத்துக் கொண்டு போக வேண்டும் என்று ஆரம்பிப்பேன். இதயத்தைக் கையில் பிடித்துக் கொண்டு அவன் பின்னாலேயே ஓடி, கம்பார்ட்மென்டில் நுழைந்து, அவன் 'தடால்' என்று வீணையை வைக்கும் முன்னால் சடாரென்று பாய்ந்து பிடித்துக் கொண்டு வீணையை மிக மெதுவாகக் கீழே இறக்கி வைப்பேன். 'அப்பாடா' என்று இருக்கும். அடுத்த நொடியே, மறுநாள் இதே சென்ட்ரல் ஸ்டேஷனில் மறுபடி வந்து இறங்கும்போது 'எப்படிடாப்பா சமாளிக்கப் போகிறோம்?' என்று அடுத்த கவலை தொடங்கிவிடும்!

ஆனால், போகிற ஊரில் வரவேற்க வருகிற சபாக்காரர்கள் நல்ல வேளையாக வீணையை வாங்கிக் கொண்டு விடுவார்கள். ஆனால் ஒவ்வொரு தடவையும், 'ரெண்டே ரெண்டு பிரபல வித்துவான்கள் தங்கள் வீணையை யார் கிட்டயும் கொடுக்க மாட்டாங்க!' என்ற பல்லவியைக் கேட்டாக வேண்டும். அவர்களுக்குப் பாராட்டா, என்



## 'சங்கீத கலா சிகாமணி' வீணை காயத்ரி



தலைக்குக் குட்டா?... நான் பாட்டுக்கு அசட்டுச் சிரிப்புச் சிரித்து வைப்பேன். கூடவே, எப்போது கச்சேரி முடிந்து, எப்போது வீடு திரும்பிக் குழந்தைகளைப் பார்ப்போம் என்று தோன்றிவிடும்!

இந்த ஜூன் மாதம், சிதம்பரத்துக்குக் கச்சேரிக்குப் போக, ராமேசுவரம் எக்ஸ்பிரஸில் டிக்கட் புக் பண்ணிவிட்டு, தாம்பரத்தில் ரயில் ஏறப் புறப்பட்டேன். (எழும்பூர் அல்ல!) எப்போதும் ஸ்டேஷனில் இறங்கிக் கொண்டால், கார் டிரைவரை வீட்டுக்கு உடனே அனுப்பி விடுவேன். அன்றைக்கு என் நல்ல காலம்தான். ஸ்டேஷனுக்குள் ஒரே சப்தம். பரபரப்பு. கலவரம் போல இருந்தது. ம்ருதங்கம் வாசிக்கிற மாதிரி மங்கலம் ராமச்சந்திரனும், கஞ்சிரா புருஷோத்தமனும் என்னுடன் சேர்ந்து கொண்டனர். டிரைவரிடம் வீணையை எடுத்துக் கொண்டு போய்விடு என்று அனுப்பி விட்டேன்.

"வண்டிலே ஏறுங்க. சீக்கிரம் ஏறுங்க!" என்று யாரோ கூச்சல் போட்டார்கள். எந்த கம்பார்ட்மெண்ட் என்று கூடப் பார்க்காமல் ஏதோ ஒன்றில் ஏறி, ஜன்னல் கதவுகளை எல்லாம் மூடிக் கொண்டோம். எனக்கு வியர்த்துக் கொட்டியது; மூச்சு முட்டியது. பெரிய பெரிய கற்கள் வந்து தாக்கின. 'கம்பார்ட்மெண்டை எரிக்கப் போகிறோம்' என்று வெளியே சப்தம். ஏற்கெனவே பக்கத்து பிளாட்பாரத்தில் ஒரு வண்டி எரிந்து கொண்டிருந்தது! நான் கண்ணையும் காதையும் மூடிக் கொண்டு, துர்க்கா சப்தமும், ஹனுமான் சாலிஸாவும் சொல்ல ஆரம்பித்தேன். கூச்சல், குழப்பம் எல்லாம் ஓய்ந்து இரவு இரண்டு மணிக்குத்தான் கம்பார்ட்மென்டை விட்டு வெளியே வந்து வீட்டுக்குப் போக முடிந்தது. சிதம்பரம் கச்சேரி ரத்து!

பிளேனில் வீணையுடன் பயணம் செய்வது இன்னொரு வகை அவஸ்தை. ஹேன்ட் பாகேஜ் என்று கையோடு எடுத்துக் கொண்டு போனால், முதலில் அதைத் தூக்கிக் கொண்டு போக வேண்டும். பிறகு அதை வைக்கச் சரியான இடம் கிடைக்க வேண்டும். பெட்டியில் எடுத்துக் கொண்டு போனாலோ, நீண்ட பெரிய பெட்டி ஆகி விடும். எடுத்துச் செல்ல மிகப் பெரிய கார் அல்லது மினிபஸ் தான் வேண்டும்!

1985ல் அமெரிக்காவுக்குப் போனபோது, ஒரு கறுப்புப் பெட்டியில்தான் வீணையை எடுத்துக் கொண்டு போனேன். நியூயார்க் ஏர்போர்ட்டில், கன்வேயர் பெல்ட்டில் அந்தப் பெட்டி வந்தபோது எல்லோரும் கவனிக்க ஆரம்பித்தார்கள். நான் என் பலம் கொண்ட மட்டும் அதைக் கன்வேயர் பெல்ட்டிலிருந்து இழுத்தேன். கூட இருந்த பயணிகள் சிலரும் எனக்கு உதவினார்கள்.

பெட்டிக்குச் சக்கரம்தான் இருக்கிறதே, இழுத்துக் கொண்டு போய்விடலாம் என்று பார்த்தால், நான் ஒரு பக்கம் போனால், என் பெட்டி ஒரு பக்கம் போகிறது! ட்ராலி எதுவும் இருக்கவுமில்லை. நல்ல வேளையாக ஊழியர் ஒருவர் ஒரு ட்ராலி வைத்திருந்ததைப் பார்த்துவிட்டு அவரிடம் ஓடி, அதை வாங்கிக் கொண்டு வந்தால்_

என் வீணைப் பெட்டியைச் சுற்றி ஏர்போர்ட் அதிகாரிகள் சூழ்ந்து கொண்டு நிற்கிறார்கள்! அவர்கள் முகங்களில் ஷாக். நான் அதை நோக்கி வருவதைப் பார்த்ததும், "இந்த சவப்பெட்டி உங்களுடையதா?" என்று கேட்டார்கள்.

எனக்கு அதிர்ச்சியும் வருத்தமுமாக இருந்தது.

'இதில் தென்னிந்திய வகை இசைக் கருவி இருக்கிறது' என்று விளக்கிவிட்டு, பெட்டியைத் திறந்து காண்பித்தேன். அவர்கள் வீணையை அதிசயப் பொருள் போல் பார்த்து வியந்தார்கள். அந்தக் கூட்டத்தில் ஒருவர், "செவ்விந்தியர்களைப் போல் தென்னிந்தியர்களும் தலையில் இறகு சூடிக் கொண்டிருப்பார்களா?" என்று ஒரு விசித்திரமான கேள்வி கேட்டார். எல்லாரும் என்னைச் சூழ்ந்து கொண்டு விசித்திரமாகப் பார்ப்பதே என் தலையில் இறகு சூடிக் கொண்ட மாதிரிதானே என்று நினைத்துக் கொண்டேன்! ○

# 'கராத்தே'வுக்கு மறுப்பு!

கராத்தே தியாகராஜன் பேட்டி (2.12 கல்கி) படித்தேன். சென்னை மாநகரில் மேயர் மு.க.ஸ்டாலின் 1996ம் ஆண்டுக்குப் பிறகு கல்வி, சுகாதாரம், கட்டிடங்கள், பாலங்கள், மழைநீர் கால்வாய் ஆகிய துறைகளில் செய்த பல்வேறு பணிகளே இன்றைக்குச் சாட்சிகளாக காட்சியளித்துக் கொண்டிருப்பதை, கராத்தே தியாகராஜன் மூடி மறைப்பது அரசியலே தவிர, வேறு ஒன்றுமில்லை.

'ஆப்டிகல் பைபர்' கேபிள் புதைப்பது சம்பந்தமான விஷயம் அவரது பேட்டியில் விஷமத்தனமாக விமர்சிக்கப் பட்டுள்ளது. அகில இந்திய அளவில் தகவல் தொழில்நுட்பத்தில் இந்திய நாடு மேலும் வளர்ச்சிப் பெற வேண்டும் என்பதற்காக மத்திய அரசு 'ஆப்டிகல் பைபர்' கேபிள் புதைக்க, சில தனியார் நிறுவனங்களைத் தேர்ந்தெடுத்து, முக்கிய நகரங்களில் கேபிள் புதைக்கும் பணி மேற்கொள்ள ஆணை பிறப்பித்தது. அத்தகைய ஆணை தமிழக அரசு மூலமாக சென்னை மாநகராட்சி மன்றத்தில் ஒப்புதலைப் பெற்று, சம்பந்தப்பட்ட நிறுவனங்களே வெட்டுப்பட்ட சாலைகளைச் சீரமைப்புச் செய்வது, சாலை பயன்பாட்டுக்கு உரிய கட்டணத்தை மாநகராட்சிக்குச் செலுத்துவது ஆகிய ஒப்பந்தத்துடன் பணி மேற்கொள்ளப்பட்டது. மழைக் காலம் தொடங்கியிருப்பதால் தற்போது அப்பணி போக்குவரத்தைக் கருத்திற்கொண்டு நிறுத்தப்பட்டுள்ளது. ஒப்பந்தப்படி அப்பணி நிறைவு பெறும். சம்பந்தமில்லாதவர்களின் பெயரையெல்லாம் இதில் கராத்தே தியாகராஜன் இழுத்துப் போட்டு பேட்டியளித்திருப்பது சரியல்ல.

1996ம் ஆண்டு மாமன்றம் அமைந்த முதல் வருடமே மழைநீர் வடிகால்வாய்களைத் தூர்வாரும் பணிக்கு முக்கியத்துவம் அளிக்கப் பட்டு, அதன் காரணமாக 1997 மற்றும் 1998ம் வருட மழைக் காலங்களில் சாலைகளில் நீர் தேங்குவது தவிர்க்கப்பட்டுள்ளது. தொடர்ந்து 1999-2000 ஆண்டில் மழைநீர் வடிகால்வாய்கள் புதியதாக 255 பணிகள் ரூ.16.50 கோடி செலவில் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

மேலும், 10 மண்டலங்களில் தூர்வாரும் பணிக்கென மூன்று மாதத்துக்கு ஒருமுறை என்ற அளவில், பல இலட்சம் ரூபாய் செலவிடப் பட்டுள்ளது.

கூவம் ஆறு, அடையாறு ஆகியவற்றின் முகத்துவாரப் பகுதியானது தமிழக அரசின் பொதுப் பணித்துறை மற்றும் மத்திய அரசின் பொறுப்பில் மண் அகற்றும் பணி ஆய்வில் உள்ளது. தற்போது நடைபெறுவது அ.தி.மு.க. ஆட்சிதான். அந்தப் பணியை இன்னும் 6 மாத காலத்துக்குள் தியாகராஜன், அரசை அணுகி முடிப்பதற்கு முயற்சி செய்தால் எங்களுக்கும் மகிழ்ச்சிதான்.

1996ல் மேயர் மு.க.ஸ்டாலின் பொறுப்பேற்றபோது நாளொன்றுக்கு அகற்றப் பட்ட குப்பையின் அளவு 1900 டன். அது தற்போது 3,100 டன்னாக உயர்ந்திருக்கிறது என்றால், அப்பணியின் வேகம் எந்த அளவுக்கு முடுக்கிவிடப்பட்டிருக்கிறது என்ற உண்மை புலப்படும். உலக நாடுகள் பலவற்றிலும் துப்புரவுப் பணியை நிறைவேற்றி வருகிற சிங்கப்பூரில் உள்ள நிறுவனத்தின் கிளை நிறுவனமான 'ஓனிக்ஸ்' நிறுவனம் குறைந்தபட்சம் 7 ஆண்டுகள் பணி ஒப்பந்தம் வேண்டியது. மாமன்றத்தில் இதற்கு ஏகோபித்த ஒப்புதல் பெற்று மக்களின் பாராட்டுதலோடு, அப்பணி சிறப்பாக நடைபெற்று வருகிறது.

இதனால் மாநகராட்சிப் பணியாளர்கள் எவருக்கும் வேலை இழப்போ, பாதிப்போ ஏற்படவில்லை.

**— சி.வி. மலையன்**

*எதிர்க் கட்சித் தலைவர்,*
*சென்னை மாநகராட்சி.*

"அதிகாலையில், காஞ்சி வரதராஜப் பெருமாள் கோயிலைச் சுற்றி மார்கழி மாதம்தோறும் திருப்பாவைப் பாடல்களைப் பாடியபடி வீதி வலம் வருவேன். காஞ்சிப் பெரியவர் ஸ்நானத்துக்குப் போய்க்கொண்டிருந்தார். அருகே போய் நமஸ்காரம் பண்ணினேன். கூடவே ராமகிருஷ்ணன் என்பவர் அவருடன் இருந்தார். கொஞ்ச நேரம் கழித்து, என்னை மடத்துக்கு உடனே வருமாறு ராமகிருஷ்ணன் வந்து கூப்பிட்டார். நிறையப் பேர் காத்துக்கொண்டிருந்தார்கள். நான் போனதும் என்னை உள்ளே கூப்பிட்டு, 'வீர வைஷ்ணவனோ நீ?'' என்று கேட்டார். நான் பதில் ஒன்றும் பேசவில்லை. "காமாட்சி அம்மன் கோயில், ஏகாம்பரேசுவரர் கோயில் எல்லாம் போய்ப் பாடுவாயா?'' என்று கேட்டார்.

நான் தமிழ் கிருதிகள் தவிர, தியாகராஜர், தீட்சிதர், சியாமா சாஸ்திரி ஆகியோரின் கீர்த்தனைகளையும் முறையாகக் கற்றவன். எனவே, "ஆகா, பாடுகிறேனா!'' என்றேன். பெரியவர் உடனே ராமகிருஷ்ணனைப் பார்த்து, "நாளையிலிருந்து காலையில் இவர் வீட்டுக்கு மாட்டு வண்டியோ, குதிரை வண்டியோ அனுப்பி, இரண்டு கோயில்களிலும் இவர் பாடி முடித்த பிறகு, திரும்ப வீட்டுக்குக் கொண்டு போய்விட ஏற்பாடு செய்!'' என்றார். பிறகு என்னை மடத்துக்கு அழைத்து, 'திருப்பாவைச் செல்வன்' என்ற பட்டம் கொடுத்து, கௌரவப்படுத்தி மரியாதைகள் செய்தார்!''

- இந்த ஆண்டு தமிழிசைச் சங்கத்தில் 'இசைப் பேரறிஞர்' விருது பெறும் காஞ்சி எம்.என். வேங்கடவரதன், வேதம் சொல்லுவது போலப் பாடப்படும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தை, பண்முறையில் ராக, தாளத்தோடு சுமார் நாற்பது வருடங்களுக்கு மேலாகப் பாடி வருபவர்.

ஜேசுதாஸ், சுதா ரகுநாதன், மணி



கிருஷ்ணசுவாமி, என்.சி. சௌந்தரவல்லி போன்ற பாடகர்கள் - பாடகிகள் இவரிடம் திவ்யப் பிரபந்தத்தைப் பாடக் கற்றிருக்கிறார்கள்.

"நான் திருப்பாவையும், பிரபந்தமும் பாடி வருகிறபோது அறிஞர் அண்ணாவும் அவர் தாயாரும் வீட்டு வாசலில் நின்று கேட்பார்கள். அவர்கள் இருவரும் எனக்குத் தந்த தமிழ் நூல்கள் நிறைய!'' என்கிறார் வேங்கடவரதன், பழைய நினைவுகளில் ஆழ்ந்து போய்.

மகாவித்துவான் காஞ்சிபுரம் நயினாப்பிள்ளையிடமும், அவரது சீடர் கிருஷ்ணசாமி ஐயங்காரிடமும், நயினாப்பிள்ளையின் மூத்த மகன் இரத்தினசாமியிடமும் முறையாகக் கர்நாடக இசை பயின்றிருக்கிறார் பெரியவர் வேங்கடவரதன். காஞ்சிப்

பெரியவர் வழங்கிய வீணையையும் வாசிக்கிறார்!

வைணவப் பெரியார்கள் பற்றிச் சிறுசிறு வாழ்க்கைச் சித்திரங்களாகச் சொல்லும்போது, சில வேளைகளில் உணர்ச்சிவசப்படுகிறார். கண்கள் பனிக்கின்றன.

"நம்மாழ்வார்தான் திருவாய்மொழி, சாம வேத சாரம்பூரா பண்களாய்ப் பண்ணியிருக்கார். எந்த விதமாகப் பாடினார் என்று தெரியாது. ஆனால் நான் என்னுடைய ஆராய்ச்சியில் கண்டறிந்து பண்முறையில் பாடி வருகிறேன்!" என்றார்.

அந்த நாளிலேயே இவை எல்லாம் தமிழ் இசையாகப் பாடப்பட்டு வந்ததை எடுத்துக்காட்டுகிறார்.

"காலம் வலம்புரி, அன்னநற்காதல் அடியார்க்கு, தானம் வழங்கி, தமிழ் மறை இன்னிசை தந்த வள்ளல் என்று நாதமுனிகளைப் பற்றி வேதாந்த தேசிகர் பாடுகிறார். ஆரப்பொழில் தென்குருகைப் பிரான் அமுதத் திருவாய் சாரத்தமிழினிசை

# காஞ்சி தந்த தமிழிசைஞர்!

உணர்ந்தோர்கட்கு, இனியவர்தம் சீரைப் பயின்று உய்யும் சீலம் கொள் நாதமுனியை, நெஞ்சால் வாரிப் பருகும் ராமானுஜன் எந்தன் மாநிதியே!" என்று ராமானுஜர் காலத்தில் வாழ்ந்த அமுதனார் பாடியிருக்கிறார். அரையர்கள் முன்பு இந்த இசையோடுதான் பாடியிருக்கிறார்கள்!" என்று கூறுகிறார் வேங்கடவரதன்.

காஞ்சிபுரத்திலேயே சரஸ்வதி கான நிலையம் என்ற இசைப்பள்ளியைத் தொடங்கி மாணவ - மாணவிகளுக்குப் பண்ணிசையைக் கற்றுக் கொடுத்து வந்திருக்கிறார். 64 முதல் 66 வரை சென்னை கலாக்ஷேத்திராவில் இசை ஆசிரியராகப் பணி புரிந்திருக்கிறார். 67 முதல் 92 வரை, திருவல்லிக்கேணியில் உள்ள நெம்மேலி ஆளவந்தார் நாயக்கர் அறக்கட்டளையின் திவ்யப்பிரபந்த பண்ணிசைப் பாடசாலையில் முதல்வராக இருந்து இளையவர், முதியோர் எல்லோருக்கும் பிரபந்தத்தைப் பண்ணிசை முறையில் கற்பித்திருக்கிறார். தற்போது தமிழிசைக் கல்லூரியில் விரிவுரையாளராகச் சேவை புரிகிறார். பண் ஆராய்ச்சிக் குழு உறுப்பினர். தமிழில் அர்ச்சனை உருவாக்க அமைக்கப்பட்ட குழுவில் பணியாற்றி வருகிறார். பிரபந்த இசையை நாட்டின் பல மேடைகளில் பாடி வந்திருக்கிறார்.

கர்நாடக இசை மட்டுமல்ல, இந்துஸ்தானி இசை, மேற்கத்திய இசைகளிலும்கூட ஓரளவு பரிச்சயம் உள்ளவர் இவர்.

ஜி.வி. அய்யரின் 'ராமானுஜர்' திரைப்படத்தில் திருக்கச்சி நம்பியாக நடித்த அனுபவமும் இவருக்கு உண்டு.

இந்த 83 வயதிலும், மார்கழி காலையில் திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் கோயிலைச் சுற்றி வந்து, திருப்பாவை பாடுகிறார் வேங்கடவரதன்!

சென்ற ஆண்டு செப்டம்பர் 30 அன்று அண்ணாமலைச் செட்டியார் விருது இவருக்கு வழங்கப்பட்டது.

- எஸ்.வி.என்


விருது பெறுவோர் பக்கம்

## இனி திருடுவதில்லை!

சந்திர குப்த மன்னரின் தலைமை அமைச்சரான சாணக்கியரின் குடிசையில் நடந்தது கீழ்க்கண்ட நிகழ்ச்சி:

ஏழைகளுக்குக் கொடுப்பதற்காக மன்னர் அனுப்பி இருந்த கம்பளிகள் குடிசையின் ஒரு மூலையில் குவிந்து கிடந்தன. இதைத் தெரிந்துகொண்ட திருடர்கள் நடுராத்திரியில் அங்கே நுழைந்ததும், தரையில் பாய் விரித்து, பழைய கம்பளியைப் போர்த்திக் கொண்டு சாணக்கியரும், அவர் தாயாரும் தூங்கிக் கொண்டு இருந்ததைப் பார்த்தார்கள். போர்த்திக் கொண்டிருந்த கம்பளியோ ஒரே கிழிசல் மயம். அதனால் குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தார்கள். திருடர்களுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. சாணக்கியரை எழுப்பி, "ஐயா மன்னித்துக் கொள்ளுங்கள். நாங்கள் கம்பளிகளைத் திருட வந்தவர்கள்தான். ஒரு பக்கம் ஏராளமான நல்ல கம்பளிகள் குவிந்து கிடக்கின்றன. இருந்தும் குளிரில் ஏன் நடுங்கிக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். சாணக்கியரோ, புன்னகை புரிந்தபடியே, "இந்தக் கிழிசல் கம்பளிகள் கூட இல்லாத ஏழைகளுக்காக வந்தவை இவை. அவர்கள் இவற்றிற்குச் சொந்தக்காரர்கள். எடுத்துப் போர்த்திக் கொண்டால் என்னையும் திருடன் என்றுதான் சொல்ல வேண்டும்!" என்றார். இதைக் கேட்டதும் திருடர்கள் மன்னிப்புக் கேட்டு இனிமேல் திருடுவதே இல்லை என்று உறுதி எடுத்துக் கொண்டார்கள்.

- சித்ரம் சாமியப்பா, கோவை.

## 'உ' வந்ததெப்படி?

நாம் எண்களை ஒன்று முதல் நூறு வரை சொல்லிப் பார்க்கும்போது 'உ' என்ற ஒலியுடனேயே முடியக் காணலாம். நாம் எதையேனும் எழுத ஆரம்பிப்பதற்கு முன் ஏதேனும் பிழை நேர்ந்து விடாமல் எண்களைக் கையாள வேண்டும் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளும் நோக்கத்துடன், கணபதியை முதலில் நினைத்து எண்களில் முடியும் ஒலியாகிய 'உ' என்ற எழுத்தைப் பிள்ளையார் சுழியாகப் போட்டு வருகிறோம்!

– கே. சக்திஷா, சின்னமனூர்.



## சிரித்திருக்கிறேனா?

விஞ்ஞானி ஐன்ஸ்டைன் நன்றாக வயலின் வாசிப்பவர். ஒருநாள் வயலினை இசைத்துக் கொண்டிருந்தபோது, ஹங்கேரி நாட்டைச் சார்ந்த பிரபல நகைச்சுவை நடிகரான மோல்நார் வந்தார். வயலின் இசையைக் கேட்டு இடையிலேயே சிரித்தார்.

"நான் வயலின் வாசிக்கும்போது சிரிக்கிறீரே! நீங்கள் நகைச்சுவை வேடத்தில் நடிப்பதைப் பார்த்து நான் எப்போதாவது சிரித்திருக்கிறேனா?" என்று கேட்டார் ஐன்ஸ்டைன்!

– மஞ்சுதேவன்



# தேன் கூடு

## புத்திசாலி மாணவர்கள்!

''இக்கால மாணவர்கள் மிகவும் புத்திசாலிகள் என்பதற்கு உதாரணமான ஒரு சம்பவம்:

''குசேலருக்கு 27 பிள்ளைகள் என்று கூறி அவர் கதையை உருக்கமாக நான் சொல்லி முடித்ததும் ஒரு மாணவன் எழுந்து, ''ஏன் சார் அப்படியென்றால் மூத்த பிள்ளைகளுக்கு 26, 27 வயதாவது இருக்க வேண்டுமே, அவர்களும் சம்பாதித்து, தந்தைக்கு ஒத்தாசையாக இருந்திருக்கலாமல்லவா?' என்று கேட்டான். அவன் கேட்டதில் நியாயம் இருந்ததால், எனக்கு உடன் என்ன சொல்வது என்று தெரியவில்லை. வீட்டிற்கு வந்து மறுபடியும் குசேல புராணத்தைப் படித்ததும்தான், அவன் கேள்விக்குப் பதில் கிடைத்தது. குசேலர் மனைவிக்கு மொத்தம் ஒன்பது பிரசவம். ஒவ்வொன்றிலும் மூன்று குழந்தைகள் வீதம் பிறந்ததால், 27 குழந்தைகள்! கேள்வி கேட்டு என்னைச் சிந்திக்கத் தூண்டிய மாணவனின் அறிவுக்கூர்மையை மனதாரப் பாராட்டினேன்''



(ஆன்மிகச் சொற்பொழிவாளரும், ஆசிரியருமான சந்தர் பேசக் கேட்டது)

- ஆர்.எஸ். லக்ஷ்மி, கோவை-41.

## ஏங்கிய ... லா!

நஸ்ருதி ... ஒருமுறை வேலையில் ... இருந்தார். அங்கு குதி... து வந்த கனவான் ..., தமது குதிரையை நபரிடம் பார்த்துக் ெ... சொல்லி விட்டு மாளிகைகுள் நுழைய முற்பட்டார். அவரிடம் சென்ற முல்லா, ''நான் உங்கள் குதிரையைப் பார்த்துக் கொள்கிறேன்; என்ன கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறேன்'' என்றார். அந்த கனவான், ''அதற்குத்தான் அந்த ஆளை ஏற்கெனவே நியமித்து விட்டேனே'' என்றார்.

உடனே ''அப்ப சரி, நீங்கள் திரும்பி வரும்வரை அந்த ஆளை நான் பார்த்துக் கொள்கிறேன்!'' என்றார் வேலைக்காக ஏங்கிய முல்லா!

மஞ்சு

## பூட்டு!

திருநெல்வேலிப் பகுதியைச் சேர்ந்தவர்கள் ரஸ்தாளி வாழைப் பழத்தைக் 'கோழிக்கூடு' என்கிறார்கள்.

அதேபோல் வாழை இலை அடுக்கைப் 'பூட்டு' என்கிறார்கள். வாழை இலைக்காரரிடம் ஒரு பூட்டு கொடுங்கள் என்றால் ஐந்து இலைகளைக் கொண்ட ஓர் அடுக்கு இலையை நம்மிடம் தருவார்.

- ஜரிகா பானு



மேடைக்குப் பின் பக்கம் இருந்த பெரிய ஒப்பனை அறையில் ஒரு சிறு உலகமே குடியிருந்தது போல் தெரிந்தது. ஒவ்வொரு நாட்டு உடையிலும் சிறு சிறு குழுக்கள். தங்கள் முறைக்காகக் காத்திருந்தார்கள். மேடையில் நடக்கும் ஸ்பானிஷ் `டாங்கோ' நடனத்தின் சிறு சிறு இசையும் கேட்டது. சைகைக்கு ஏற்ப அனுகாவின் உடல் தானாகவே அசைந்தது.

"ப்ச்ச்... கொஞ்சம் ஆடாம இருக்கியா, அனுகா!" அனுகாவின் தாவணிக்குச் சுருக்கு வைத்துக் கொண்டிருந்த அம்மா தன்னையறியாமல் தமிழில் பேசினாள். அம்மாவுக்கும் கொஞ்சம் பயமோ. அனுகா ஆடாமல் நின்றாள். ரவிக்கைத் தோளிலும், இடுப்பிலுமாக இரண்டு மூன்று இடங்களில் ஊக்குக் குத்தி, தாவணியைக் கட்டி விட்டாள் அம்மா. அமெரிக்க உடையில் இன்றைய நாகரீகப்படி இடுப்பைக் காட்டக்கூடாது என்று கண்டிக்கும் இதே அம்மா, தாவணியில் இடுப்புப் பகுதியைக் காண்பிக்க விடுவது ஏன்...? அம்மாவை வழக்கம்போல் சீண்டினாள் அனுகா. அம்மா அவள் கன்னத்தைச் செல்லமாகத் தட்டி, "தாவணியில் அழகாய் இருக்கலாம். குறும்பாய் இருக்கக்கூடாது" என்று சிரித்தாள். பட்டுப்புடைவை சரசரக்க, அப்பாவையும் கேமராவையும் தேடிக்கொண்டு போனாள்.

இன்னும் மின்னியையும் ராஜி ஆண்ட்டியையும் காணவில்லை. வீட்டிலேயே அலங்கரித்துக் கொண்டு வருவதாகச் சொல்லியிருந்தாள் மின்னி. உலக அழகிப் போட்டிக்கே அலங்கரிக்கத் தொடங்கி விட்டாளோ என்னமோ.

ஆலனின் பள்ளிக்கூடத்து உலகக் கலாசார விழா நிச்சயம் வெற்றிதான் என்று அனுகா நினைத்துக்கொண்டாள். கிறிஸ்துமஸ் விடுமுறைக்கு முந்தைய நாளில் வழக்கமாகக் கிறிஸ்துமஸ் விழாவாக நடப்பதை உலக கலாசார விழாவாக மாற்றியிருந்தது இந்த வருடத்துக்குப் பொருத்தம்தான். ஆனால், அவளும் மின்னியும் பவனும் ஆலனும் எவ்வளவு வேலை செய்ய வேண்டியிருந்தது. அம்மாக்களும்தான், அப்பாக்களும்கூட. நடுவில் அரையாண்டுப் பரீட்சைகள் வேறு. யாருமே வேலைகள் பற்றி முணுமுணுக்கவில்லை. உற்சாகமாகத் தாங்களே இழுத்துப் போட்டுச் செய்தார்கள்.

'அஞ்சலி, புஷ்பாஞ்சலி' பாட்டைக் கேட்டதும், "இசை தெரிந்த இந்திய நண்பர்கள் அவளுக்கு உண்டா?" என்று ஆலன் கேட்டான். "மின்னியைத் தெரியும்" என்றாள் அனுகா. மின்னிக்கு அவள்கூடப் படிக்கும் பவனைத் தெரிந்திருந்தது. பவனுக்குப் பாடவும் கீபோர்ட் வாசிக்கவும் தெரிந்திருந்தது.

தினம் பள்ளிக்கூடம் முடிந்ததும் ஆலனின் வீட்டில் சந்திப்புகள். தன் வீட்டுக் கீழ்த்தளத்தில், வாத்தியங்கள் நிரம்பிய ஒரு பெரிய இசை அறையே வைத்திருந்தான் ஆலன். "அங்கே நான் என்ன சப்தம் போட்டாலும் அப்பா, அம்மாவுக்குக் கேட்காது" என்று சிரித்து விளக்கினான். 'அஞ்சலி, புஷ்பாஞ்சலி' பாட்டு பின்னணியில் ஓடிக்

# இக்கரையில்

கொண்டேயிருக்கும். ஏதாவது கொறித்துக் கொண்டே அவர்கள் நால்வரும் நோட்ஸ் எழுதுவது, பாடுவது, இசை வாசிப்பது, அரட்டை அடிப்பது என்று எவ்வளவு இனிமையான நாட்கள்.

# 11

பாட்டின் 'நோட்ஸ்' உள்ள ஷீட் மியூசிக்' கிடைக்கவில்லை. ''நமக்குத் தெரிந்த அரைகுறை ஞானத்தை வைத்துக்கொண்டு நோட்ஸ் எழுத முடியுமா?''

''நோட்ஸ் எல்லாம் எழுத வேண்டாம். அப்படியே வாத்திய இசையைத் தனியாய்ப் பிரித்துப் பதிவு செய்யலாம். பவனும் மின்னியும் பாடலாம், அனுகா 'லாலலா' மட்டும்?''

''பாடுவதா? ஆலன், வார்த்தைகள் தேவைதானா? வாத்திய இசையோடு நிறுத்திக்கொண்டால் என்ன?''

''அனுகா, லத்தின் இறந்து போன மொழி, இன்னும் உயிரோடு இருக்கும் ஒரு சில பழைய மொழிகளில் தமிழ் முக்கியமானது என்று சொன்னது நீதானே. தமிழ் ஒலியை, இசையோடு சேர்த்துக்

காஞ்சனா தாமோதரன்

கேட்பது நம் நண்பர்களுக்கு ஒரு முக்கியமான அனுபவம்."

"அதுவும் சரிதான். இது ஒரு மென்மையான காதல் கவிதை."

"எனக்குத் தமிழ் தெரியாதே? எஸ்.பி.பி குரல் மாதிரி நிச்சயமாக எனக்கு வராது."

"கவலைப்படாதே, பவன். பாட்டில் சில இடங்களில் சித்ரா தொடும் உச்சஸ்தாயியைத் தலைகீழாக நின்றாலும் என்னால் தொட முடியாது. நீயும் நானும் பாடுவதைக் கூடச் சிலர் கேட்க வேண்டியிருக்கிறது, பாவம்?" மின்னி சிரித்தாள். "வார்த்தைகளை ஆங்கிலத்தில் அல்லது கன்னடத்தில் எழுதிக் கொள், பவன். நான் உச்சரிக்கச் சொல்லித் தருகிறேன். தமிழ் உச்சரிப்புக்கு நம் அனுகாவை நம்பி மோசம் போகாதே..." அனுகா முழங்கையால் அவளை இடித்துச் சிரித்தாள்.

"வாத்திய இசையைப் பதிவு செய்ய வேண்டாம். நாமாகச் செய்வதில்தான் உற்சாகம். நோட்ஸ் புரிந்ததும் சில வாத்தியங்களைக் கீ போர்டில் போட்டு விடலாம். அனுகா கீபோர்ட், நான் சாக்ஸ், மிச்சத்தைப் பள்ளிக்கூடத்து 'பேண்ட்' சேர்ந்து வாசிக்கட்டும். மின்னி, பவன் பாட்டு."

"அது சரி, ஆலன். சாக்ஸஃபோனில் இந்த அளவு கமகம் வருவது கஷ்டம்" என்றான் பவன். கமகம் என்றால் என்ன என்று ஆலனுக்கு விளக்கிச் சொன்னாள் மின்னி. பத்து வகை கமகங்கள் உண்டு என்று அவள் தீவிர 'வாத்தியார் குரலில்' நீளமாக வியாக்யானம் செய்யத் தொடங்கவும், எல்லாரும் கைக்கு அகப்பட்ட சிறு சிறு பொருட்களை அவள் மேல் எறிந்தார்கள். "ஹேய், தெரிந்தது. சொல்கிறேன். கேட்கா விட்டால் உங்களுக்குத்தான் நஷ்டம்" என்று தோளைக் குலுக்கிச் சிரித்தாள் மின்னி.

"ஓ, சரிதான். என் இசை வாத்தியார் பாட்டைக் கேட்டதும், 'ரெசோனன்ஸ்', 'நோட்ஸ் ஆசில்லேஷன்' என்றெல்லாம் சொல்லிப் பயமுறுத்தினார். சாக்ஸில் சில திருகாணிகளைக் கழற்றிப் பார் என்று யோசனைகள் சொன்னார்" என்றான் ஆலன்.

"அடக் கடவுளே! திருகாணி கழலப் போகிறதா?"

அனுகா கலகலத்தாள். ஆலனின் நட்பான குட்டைத் தலையைச் சாய்த்து வாங்கிக் கொண்டான்.

இப்படி விளையாட்டாகத் தொடங்கியது இன்று எவ்வளவு பெரிதாக வளர்ந்திருக்கிறது. அனுகாவுக்கு மலைப்பாக இருந்தது. வைரமுத்துவின் கவிதை வரிகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தது ராஜி ஆண்ட்டியும் அம்மாவும். டீ.வி திரையில் ஆங்கில வரிகள் ஒவ்வொன்றாய் வரும்படி, விசேஷமான டீ.வி.யைச் செய்து தந்தது மார்ஜியும் ப்ரையனும் _ பார்வையாளர்களுக்குப் பாட்டுப் புரிய வேண்டுமே. அவர்கள் மேடையில் பாடும்போது, அவர்களுக்குப் பின்னால் உள்ள பெரிய திரையில் ஓடப் போகும் இந்தியக் காட்சிகளைத் திரட்டியது அம்மாவும் ராஜி ஆண்ட்டியும் விது ஆண்ட்டியும்...

விது ஆண்ட்டி... முன்பு அம்மா, ராஜி ஆண்ட்டி என்று இருந்தது இப்போது அம்மா, ராஜி ஆண்ட்டி, விது ஆண்ட்டி என்று ஆகிக்கொண்டிருந்தது. ஒருநாள் அவர்கள் பேசிக் கொண்டிருந்த போது அனுகா உள்ளே நுழையவும் 'டக்' என்று பேச்சை நிறுத்தி, மூவரும் 'திரு திரு'வென்று விழித்தது அவளுக்கு வினோதமாக இருந்தது. விது ஆண்ட்டி அதிகம் பேசுவதில்லை. ஆனால், நிறைய படங்கள், விடியோ துண்டுகள் எல்லாம் குறித்துக் கொடுத்தாள்.

படங்களையும், அவற்றின் ஆங்கில விளக்கங்களையும் விடியோ பதிவு செய்து, பிறகு அவ்வளவு விடியோ துண்டுகளையும் கோர்வையாகத் தொகுத்தது அப்பா.



• சுதா ரகுநாதன்

## கீத சுதா!

"நான் பாடுவதைக் கேட்டுவிட்டு, எங்கள் வீட்டுக்கு வந்த ஒரு ரிடயர்டு தாசில்தார், 'நீ சங்கீதம் கற்றுக் கொள். விஜயநகரத்துக்குப் போ' என்றார். மகாராஜா மியூசிக் காலேஜில் த்வாரம் வெங்கடசாமி நாயுடு பிரின்சிபால். 13 வயதில் அங்கே சேர்ந்தேன். அவருடைய சகோதரர் த்வாரம் நரசிங்கராவிடம் வாய்ப்பாட்டு கற்றுக் கொள்ள ஆரம்பித்தேன். ஆனால் த்வாரம் வெங்கடசாமி நாயுடு வயலின் இசையைக் கேட்டு, நிறைய மாணவர்கள் வயலின் வகுப்பில் சேர்ந்து பிராக்டிஸ் பண்ணுகிற போது, எனக்கும் அவரிடமே

அதுவும், பாட்டின் வேகத்துக்கும் தொனிக்கும் பொருந்தும் வகையில், ஆறேழு நிமிடங்களுக்காக, நான்கு குடும்பங்களுக்கு எவ்வளவு வேலை. ஒரு விதத்தில் பெருமையாகவும் இருந்தது - எவ்வளவு நல்ல அப்பா, அம்மாக்கள்...

"ஹாய், அனுகா!" பட்டுப் பாவாடை தாவணியில் மின்னி அழகாய் இருந்தாள். தலைமயிரை உச்சியிலிருந்து சிறு சிறு கால்களாகப் பிரித்து இறுக்கப் பின்னிய நீள ஜடையின் அடியில் தங்கக் குஞ்சம். ராஜி ஆண்ட்டியும் குமார் அங்கிளும் காரை நிறுத்தப் போயிருப்பதாய்ச் சொன்னாள்.

"மின்னி, இங்கே வாயேன்!" அனுகா மின்னியின் கையைப் பிடித்து இழுத்துக் கண்ணாடி முன் நிறுத்தினாள். அவள் பின்னலை எடுத்துத் தன் தோள் மேல் போட்டு அழகு பார்த்தாள். தோள் வரை உள்ள தன் தலை முடியையும் இடுப்பு வரை வளர்க்க ஆசை வந்தது.

"வாவ்" கண்ணாடியில் அவர்கள் பின்னால் ஆலன், மின்னியின் பின்னலை மின்னியிடமே அவசரமாகத் திருப்பி ஒப்படைத்தாள் அனுகா. "ஹாய், ஆலன்!"

"அழகாய் இருக்கிறாய், அனுகா!" அவசரமாகத் திருத்தினான். "மின்னி, அனுகா, அழகாய் இருக்கிறீர்கள். அழகிய உடைகள்!"

மின்னி குறும்புச் சிரிப்புச் சிரித்தாள். ராஜி ஆண்ட்டியைத் தேடிக்கொண்டு போனாள்.

ஆலன் பெட்டியிலிருந்து சாக்ஸஃபோனை வெளியில் எடுத்தான். சாக்ஸ் அடையாளம் தெரியாமல் மாறியிருந்தது. அங்கங்கே 'ரப்பர் பேன்டுகள்' வேறு. ஒரு மூலையில் நின்று அதைக் குடைய ஆரம்பித்தான்.

அனுகா தன் கையிலுள்ள அறிமுகக் குறிப்பை மீண்டும் படித்துப் பார்த்தாள். தமிழ்மொழி, பல்வேறு இசை வகைகள், இன்றைய இசை, இந்தக் குறிப்பிட்ட பாட்டு, வைரமுத்து, ரஹ்மான், கதிரி, எஸ்.பி.பி. சித்ரா - முன்னுரை கச்சிதமாக இருந்தது.

'ஃப்ளாஷ்' மின்னல், அனுகா தலையை உயர்த்திப் பார்த்தாள். அப்பா, அம்மா, ராஜி ஆண்ட்டி, குமார் அங்கிள், ப்ரையன், மார்ஜி, அருணா - அம்பிகா சகிதம் விது ஆண்ட்டி, மின்னி, பவன், பவனின் அப்பா- அம்மா. ஒரு பெரிய படையே கேமராக்களுடன் நின்றது. எல்லாரும் எல்லாருடனும், தனியாகவும் நின்று படப்பிடிப்பு. அவை அழகாக வந்திருப்பது டிஜிட்டல் கேமராக்களின் சிறு

---

வயலின் கற்றுக் கொண்டால் என்ன என்ற ஆசை உண்டாயிற்று. 'உனக்கு நல்ல குரல்வளம் இருக்கிறது. நீ வாய்ப்பாட்டே கற்றுக் கொள்!' என்றார் லெக்சரர் த்வாரம் நரசிங்கராவ். நான் பாட, அவரே வயலின்கூட வாசித்திருக்கிறார்!

- சங்கீத கலாநிதி நேதநூரி கிருஷ்ணமூர்த்தி

புதுக்கோட்டையில் தியாகராஜ உற்சவம் நடந்துகொண்டிருந்தது. 6 முதல் 9 வரை பல்லடம் சஞ்சீவராவ் புல்லாங்குழல் கச்சேரி. 9 முதல் அரியக்குடி பாட வேண்டும். வயலின் வாசிக்க வேண்டிய பாப்பா வெங்கடராமையா கடைசி நிமிஷத்தில் வர இயலவில்லை என்று தந்தி கொடுத்துவிட்டார். அரியக்குடி சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, 'மதுரை கந்தசாமி பாகவதரின் மருமான் ஜெயராமன் இங்கே இருக்கிறாரா? அவர் வாசிக்கட்டும் எனக்கு!' என்று அறிவித்தார். அதுதான் அரியக்குடி அவர்களுக்கு நான் வாசித்த முதல் கச்சேரி.

-லால்குடி ஜெயராமன்

பெங்களூரில் குமார பார்க்கில் நாங்கள் குடியிருந்த வீட்டின் மாடியில் ஸ்ரீ சத்ய சாய்பாபா வந்து தங்குவார். பிறகுதான் ஒயிட்ஃபீல்டுக்குப் போனார். அவர்தான் எனக்கு நாமகரணம் அட்சராப்பியாசம், ஏன் காது குத்துகூட செய்துவைத்தார். அவர் எனக்கு வைத்த பெயர் கீதசுதா. ஆனால், 'என்னைப் பொறுத்தவரை அவள் கீதாவானாலும், வெளியுலகுக்கு அவள் சுதாதான்'' என்றார். அங்கே அவர் வந்து தங்கும்போதெல்லாம் நிறைய பஜனைப் பாட்டுக்கள் பாடியிருக்கிறேன்.

- சுதா ரகுநாதன்

**- 'தி ஹிண்டு ஸ்பீக்ஸ் ஆன் மியூசிக்' - 656 பக்கங்களில் கர்நாடக இசை, இந்துஸ்தானி இசை வித்துவான்கள் பற்றிய செய்திகள், பேட்டிகளின் அருமையான தொகுப்பிலிருந்து. கஸ்தூரி அன்ட் சன்ஸ், சென்னை 600 002 விலை ரூ. 120-**




ஒலிப்பேழையில் தாலாட்டு,
தூக்கத்தில் அம்மா,
அருகில்
விளையாடும் குழந்தை.

- ஏக்நாத்

திரைகளில் தெரிந்தது. அப்பா அம்மாக்கள் அவர்களை வாழ்த்திவிட்டு, தங்கள் இருக்கைகளுக்குத் திரும்பவும், அவர்கள் நிகழ்ச்சி ஆரம்பிக்கும் என்று மேடையில் அறிவிப்புக் கேட்கவும் சரியாக இருந்தது.

நிகழ்ச்சி எதிர்பார்ப்புகளுக்கு மேல் வெற்றியாக முடிந்தது. மேடைக்குக் கீழ் இரு புறமும் இருந்த அகலத் திரைகளில் கவிதை வரிகள் மெல்ல நகர, மேடையின் நீள அகலத்தில் இருந்த பெரிய திரையில் இந்தியக் காட்சிகள் மாறிக்கொண்டேயிருக்க, அவர்கள் எல்லாரும் சேர்ந்து பாடியதும் வாசித்ததும் வாழ்க்கையில் மறக்க முடியாத அனுபவம் என்று நினைத்துக்கொண்டாள் அனுகா. மீண்டும் பாடச் சொல்லி எல்லாரும் கேட்டு, அவர்கள் இரண்டாவது தரம் பாடியது; பள்ளிப்பிள்ளைகளும் பெரியவர்களுமாய் எழுந்து நின்று, உயர்த்திய கரங்களைப் பாட்டுக்கு ஏற்றபடி மெல்ல அசைத்துச் செய்த 'அலைகள்'; பாட்டு முடிந்ததும், ஒன்றாம் வகுப்புக் குழந்தைகள் மேடையேறிக் கொடுத்துச் சென்ற பூச்செண்டுகளின் மணம்-ஒன்றையுமே மறக்க முடியாது.

விடுமுறை வழியனுப்புகள் முடிந்து முக்கால்வாசிப் பேர் கிளம்பிப் போயாயிற்று. வழக்கமான 'விடுமுறை வெறிச்' பள்ளிக் கட்டடங்களில் ஏற்கெனவே தெரிந்தது. தூரத்தில் கூட்டமாய்ச் சிரித்துப் பேசிக் கொண்டிருக்கும் அப்பா - அம்மாக்களை நோக்கி நடக்கும்போது அனுகாவின் மனத்திலும் ஒரு விதமான சோகம். பக்கத்தில் ஆலனும், பின்னால் தொடர்ந்த மின்னியும் பவனும் கூட அமைதியாக நடந்தார்கள். குளிர்ந்த சிமெண்டுத் தரை மீது பட்டுப் பாவாடைகளின் மென்முத்தச் சப்தம் மட்டும்.

இனிமேல் தினந்தோறும் சந்திக்கவும், அடிக்கடி ஃபோனில் கூப்பிடவும் காரணம் இல்லை. சேர்ந்து சிரித்ததும் சண்டை பிடித்ததும் பாடியதும் வெறும் ஞாபகங்களாகவே நின்று விடலாம்.

ஆலன் திடீரென்று நின்றதும் மற்ற மூவரும் நின்றார்கள். "அனுகா, விடுமுறைக்கு பஹாமா தீவுகளுக்கு நாளை கிளம்புகிறேன்."

தெரியும் என்ற அனுகா மௌனமாய்த் தலையசைத்தாள். தலைக்கு மேலே சில பறவைகளின் சிறகடிப்பு மென்மையாய்க் கேட்டது.

"அனுகா..." ஆலன் நிறுத்தினான். "ஜனவரியில் நான் திரும்பி வந்ததும் உன்னைப் பார்க்க முடியுமா?" 'டேட்டிங்' முறைப்படி அவளைச் சந்திப்பதற்கும், சேர்ந்து வெளியே போவதற்கும் அனுமதி கேட்கிறான் முதல் தடவையாக. அவனுக்கும் அவளைப் பிடிக்கிறது - மனம் துள்ளலாய்த் துள்ளியது. நிறையப் பேச வேண்டும் போலவும், இனி பேசுவதற்கு ஒன்றுமே இல்லாதது போலவும் இருந்தது. ஒருகணம்தான், துள்ளல் அடங்கியது. அம்மாவிடம் கேட்காமல் அவளால் சரியான பதில் சொல்ல முடியாது. மௌனித்தாள்.

பவனையும் மின்னியையும் திரும்பிப் பார்த்தாள். அவர்களுமே தங்கள் அப்பா - அம்மாக்களிடம் பேச வேண்டிய நேரம் வந்துவிட்டது புரிந்தது.

சேர்ந்து நிற்கும் அப்பா - அம்மாக்களைப் பார்த்தாள். விது ஆன்ட்டியின் கையைப் பிடித்துக் கொண்டு நின்ற அம்பிகாவின் மேல் இறுதியாகப் பார்வை நிலைத்தது. என்ன அழகான வயது அது. அப்பாவின் கைவட்ட அணைப்புக்குள் நின்று பட்டம் விட்டு, உள்ளங்கைக்குள் படபடக்கும் காற்றின் சுதந்திரத்தை உணரலாம். பூக்களுடன் பேசிக்கொண்டே செடிகளுக்கு அம்மா நீருற்றும்போது, அவளுடன் ஒட்டிக் கொண்டு, தானும் எதையோ முணுமுணுத்த படி உலக வனங்களுக்கு நீருற்றுவது போல் நடிக்கலாம். பயமாக இருந்தால், ஓடிப் போய் அப்பா - அம்மா கைகளைப் பிடித்துக் கொண்டு அவர்களுக்கு நடுவில் பதுங்கிக் கொள்ளலாம். வெட்கமில்லாமல்.

அந்தக் கணத்தில், அனுகாவுக்கு அம்பிகாக் குட்டி மேல் பொறாமையாய் இருந்தது.

(தொடரும்)

# "பெரிய வீட்டுப் பொண்ணுமா நீ!"



விருது பெறுவோர் பக்கம்

**'சங்கீத கலா ரத்னா' மணி கிருஷ்ணஸ்வாமி**

"என் வீட்டில் ஐந்து வயதிலேயே என்னைப் பாட வைத்துவிட்டார்கள். வாத்தியார் வருகிறார் என்று தெரிந்தாலே நான் ஓடிப் போய்விடுவேன். அவர் தலையைப் பார்த்தவுடன், எடு ஓட்டம்! அப்புறம் யாரையாவது அனுப்பி, கூட்டி வந்து, வாழைப் பழம் தந்து உட்காரச் செய்வார்கள். எல்லய்யாதான் பாட்டு வாத்தியார். வயலின் வாசிப்பார். எனக்கோ பாட்டு என்றாலே வேப்பங்காயாக இருந்தது. 'பாட்டு வேணாம்மா, பாட்டு வேணாம்மா' என்பேன் அம்மாவிடம்!

அந்தக் காலத்துப் பாட்டெல்லாம் கேட்டுவிட்டு ரொம்பக் கிண்டல் பண்ணுவேன். கோயமுத்தூர் தாயி பாட்டைப் போடுவார்கள்; ஓடிவிடலாம்னு தோணும். விளையாடவே போக முடியாது. பாட்டு வாத்தியார் வந்துவிடுவார். எப்படியெல்லாம் அவருக்கு டிமிக்கி கொடுக்க முடியுமோ அப்படி எல்லாம் கொடுப்பேன்!

அப்புறம்தான் பாட்டில் கொஞ்சம் இண்டரஸ்ட் வந்தது. பிறகு எல்லா இடங்களிலும் பிரேயர் பாடக் கூப்பிட்டார்கள். சொன்னால் நம்ப மாட்டீர்கள், 'வண்ணான் வந்தானே, வண்ணாரச் சின்னான் வந்தானே' எல்லாம்கூடப் பாடியிருக்கிறேன். பிரேயரில் என்ன பாட்டுப் பாடணும்










- வ. ராஜி

என்றெல்லாம்கூடத் தெரிந்து கொள்ள வில்லை!

★ மூன்று மணி நேரம் நாலு மணி நேரம் கச்சேரி நடக்கும். களைத்துப் போய்த் தூங்கிவிடுவேன். அம்மா சோடா பாட்டிலைத் திறந்து, சோடாவை எடுத்துக் கண்களைத் துடைத்துவிடுவார்.

★ சின்ன வயதில் ஷார்ட்ஸ் - சட்டைதான் எனக்குப் போட்டிருந்தார்கள். கலைஞர்கள் வந்தால், வேலூரில் ராம்பத்ரனின் தகப்பனார் வீட்டில் தங்கி இருப்பார்கள். அன்று மாலி கச்சேரி. தம்புரா போட யாரும் இல்லை. 'மணி, இங்கே வா!' என்றார் ராமபத்ரனின் அப்பா கோபாலாச்சாரி. நீ தம்புரா போடு!' என்றார். மேடை ஏறினேன். ஷார்ட்ஸும் ஷர்ட்டுமாக இருந்த என்னைப் பார்த்து கொல்லென்று சிரித்துவிட்டார்கள்!

★ வேலூரில், எங்கள் வீட்டுக்கு ஒரு கிழவர் பிக்ஷைக்கு வருவார். கரகரப்ரியாவில் 'பக்கல நிலபடி' எல்லாம் அற்புதமாகப் பாடுவார். அம்மா மோர் தீர்த்தம் கொடுப்பார் அவருக்கு. பாடவும் சொல்லுவார். இன்னொருவர் அமர்க்களமாக ஹிந்துஸ்தானி சங்கீதம் பாடும் பக்கீர். 'விதுர கர்ஜாவோ, சலோதும்' என்ற பாட்டு இன்னும் எனக்கு நினைவு இருக்கிறது. 'நான் வரட்டுமா தாத்தா உங்ககூட. நிறையப் பாட்டு கத்துக் கொடுங்களேன்!' என்பேன் அவரிடம். 'ஐயோ பெரிய வூட்டுப் பொண்ணுமா நீ!' என்று ஓடுவார்.

★ காலையில் சற்று அதிகம் தூங்கிப் போனால், அப்பா அருகே வந்து 'மணியே, மணியே, எழுந்திரு மணியே!' என்று காதில் வந்து பாடுவார். அதுவே கோபமாக வந்தால், தோடி ராகத்தில் உச்ச ஸ்தாயியில் பாடுவார்!

★ எல்லாரும் மாமியாரை வசைபாடுவார்கள். நான் நேர் எதிர். மாமியாரைப் பாராட்டுவேன். ஏனென்றால் நான் பாடகியாவதற்கு என் மாமியார்தான் காரணம்!

★ 'இப்படி தரனன்னன்னா...ன்னு பாடியே அமெரிக்கா லண்டன் எல்லாம் போகிறாயே! நானும் இதைக் கத்துக்காம போயிட்டேனே!' என்று கிண்டல் பண்ணுவான் என் சகோதரன் வேங்கடவரதன்.

★ 'அங்க வாசிச்ச மாதிரி இல்லியே உங்க வாசிப்பு? என்ன ஆச்சு?' என்று ஒரு தனவந்தர் நாதஸ்வர வித்துவானிடம் கேட்டாராம். 'அந்தக் கொளாய அங்கயே வச்சிட்டு வந்துட்டீங்களா?' என்று கேட்டாராம். அது மாதிரியே என் குரு, சில வெளியூர் கச்சேரிகளின்போது, 'என்ன, குரலை மெட்ராஸ்லயே வச்சுட்டு வந்துட்டியோ?'ன்னு கேட்பார்.

★ என் கணவர், நவக்கிரக கீர்த்தனைகளில், அந்தந்த நாளுக்கு ஏற்ற கீர்த்தனையை அன்றன்றைக்குப் பாடச் சொல்லுவார். பாடினால்தான் காபி கிடைக்கும் என்பார். என் மாமியார் 'அந்தக் காப்பிப் பாட்டு பாடிடும்மா' என்பார், காப்பியைத் தயாராக வைத்துக் கொண்டு!

# கண்ணே 'கலை' மானே!

'கைபுல் லாம்ஜோ' மணிப்பூரில் உள்ள மான்கள் சரணாலயம். மணிப்பூர் கலைஞர்கள் சென்னைக்கு வந்து அளித்த நாட்டிய நாடகத்தின் பெயரும்கூட. அழிந்து வரும் சங்காய் என்ற மானினத்தைப் பற்றிய கலை நிகழ்ச்சி.

கிளைக் கொம்புகள் கொண்ட இந்த மானினத்திற்கு முக்கிய எதிரியாக இப்போது விளங்குபவன் மனிதன்தான்.



சங்காய் மானைக் கொன்றால் அவனது காதலி (அல்லது மனைவி) அவனை விட்டுப் பிரிந்து விடுவாளாம். மணிப்பூரில் நிலவும் இந்த நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு நெய்யப்பட்டிருக்கிறது கதை. வேட்டையாடும் குழு ஒன்றிற்குத் தலைமை ஏற்கும்படி பணிக்கப்படுகிறான் ஒரு தளபதி. கூடவே தன் காதலியையும் அழைத்துக் கொண்டு வேட்டைக்குக் கிளம்புகிறான். அங்கே மலைப் பகுதியில் உல்லாசமாகத் திரியும் எண்ணற்ற சங்காய் மான்களைப் பார்த்துப் பரவசப்பட்டு ஒன்றை உயிரோடு பிடித்து தனக்களிக்க வேண்டும் என்று வற்புறுத்து கிறாள் காதலி. அவனும் ரொம்பப் பாடுபட்டு ஒரு மானைப் பிடித்து தன் ஆரண்ய வீட்டிற்கு வரும் போதுதான் அந்த அதிர்ச்சிகரமான சம்பவம் நடக்கிறது. அவனது காதலியின் அழகைப் பற்றிக் கேள்விப்பட்ட ராஜா அவளை அரண்மனைக்குப் பலவந்தமாக அழைத்து வரச் செய்து தன் மனைவியாக்கிக் கொண்டு விடுகிறான். மன தொடிந்து போகும் தளபதி தான் சிறைப்படுத்திய மானை விடுவிக்கிறான்.

நடனத்தை ரசிப்பதில் மொழிப் பிரச்னையே குறுக்கிடவில்லை. காரணம் எந்த சாகித்தியமும் இல்லாமல் வெறும் ஒலிகளையே பின்னணியாக்கியிருந்தார்கள். சிறிதும் தொய்வில்லாத இசைக் கலப்பு.

ஒற்றை மானாக தளபதியிடம் மாட்டிக் கொண்டு, அவனால் கயிற்றால் கட்டப்படும் போது உடல் உதற துள்ளித் திமிறிப் பின் அடங்கும் கட்டத்தை அற்புதமாகச் செய்திருந்தார் அந்தப் பெண் கலைஞர். தன் துணை மானைப் பறிகொடுத்துவிட்டு சோகத்துடன் திரும்பும் மானுக்குப் பிற மான்கள் வருத்தத்துடன் ஆறுதலளிக்கும் கட்டமும் உலுக்குகிறது.

நிகழ்ச்சியின் சிறப்புக்கு மற்றொரு காரணமும் உண்டு - 1985லிலேயே அரங்கேற்றப்பட்டுத் தொடர்ந்து மேடையேறி வருவதால் உண்டான அனுபவச் செறிவு. லண்டன் தியேட்டர் விழாவில் 'சிறந்த க்ரியேட்டிவ் கொரியாக்ரபி' பிரிவில் விருது பெற்ற நிகழ்ச்சி இது.

நாட்டிய நாடகத்தின் பிரம்மா செளதோம்பி சிங். ஜவஹர்லால் நேரு நடன அகாடமியில் பயின்று தங்கப் பதக்கத்துடன் பயிற்சியை முடித்தவர். "மொத்தம் பதினைந்து நாட்டிய நாடகங்களை மேடையேற்றியிருக்கிறேன். இதுதான் எனக்கு மிகப் பெரிய அளவில் பெயர் வாங்கிக் கொடுத்திருக்கிறது. லோகேந்திரஜித் சிங் (தளபதி), நோயன்ஷோகி தேவி (காதலி), லக்ஷ்மிதேவி, அமுசனா தேவி (சில சங்காய் மான்கள்) ஆகியோரின் நடனத் திறமையும் நிகழ்ச்சி யின் வெற்றிக்கு முக்கியக் காரணம் ஒரு கலை நிகழ்ச்சியாக இது வெற்றி பெற்றிருந்தாலும் நடைமுறையில் சங்காய் மானினம் அழிந்து வருவதைத் தடுத்து நிறுத்த முடியவில்லை என்பதுதான் வருத்தமான உண்மை" என்கிறார் செளதோம்பி சிங், நிஜமான கலை உள்ளத்துடன்.

— ஜி.எஸ்.எஸ்.

படம் : ஸ்ரீனிவாசன்

# 20

வீரையன் உள்ளே நுழைந்ததும் லீலாவுக்கு எரிச்சலூட்டியது. வாசலில் ஒரு வினாடி தயங்கி, தலைநீட்டிப் பார்த்து உள்ளே நுழையாமல் அவன் பாட்டுக்கு உள்ளே நுழைந்து சிரித்தபடியே, "அப்புறம்!" என்று கேட்டபடி உட்கார்ந்தான்..



லீலாவின் முகத்தில் எந்த நட்புணர்வுமில்லை. அழகு தான் புன்னகைத்தபடி "என்னாங்க வீரையன் சார்?" என்றான்.

"என்ன விஷயம்?" என்றாள் லீலா, முகத்தில் ஒரு இறுக்கத்துடன்.

"ஒண்ணுமில்லை சும்மாதான்" என்றான் வீரையன்.

"சும்மால்லாம் இங்கே வரக்கூடாது" என்றாள் லீலா தீர்மானமான குரலில். வீரையன் முகம் மாறியது. "என்னங்க முகத்தாட்சணியம் இல்லாமப் பேசறீங்க" என்றான் சற்றே தடுமாறி.

அழகு 'சட்'டென்று தர்மசங்கடமாக உணர்ந்தான். ஆனால் இப்படிப்பட்ட சமயங்களில் லீலாவின் போக்கில் தலையிட்டால் அவளது கோபம் இன்னும் கூடும் என்பது அவனது அனுபவத்தில் உணர்ந்த விஷயம். எனவே அவன் அமைதியாக இருந்தான். லீலா கடுமை மாறாமல் தொடர்ந்தாள். "தாட்சண்யம் பாத்தா எங்களுக்குத் தானப்பா அசிங்கம் வந்து சேரும். மூணு பொட்டைப் புள்ளைகளை வச்சிருக்கேன். இப்படி நீங்க எல்லாம் நினைச்ச நேரத்துக்கு வீட்டுக்குள்ள வந்தீங்கன்னா ஊருல என்ன பேசுவாங்க? உங்க வீட்ல வயசுப் பொண்ணுக இருந்தா இப்படி வெளியாளுகளை நீ உள்ள நுழைய விடுவியா?" என்றாள்.



வீரையன் முகம் இருண்டு போனது. சமாளிக்க முயன்றான். "என்னாங்க நீங்க என்னென்னமோ பேசறீங்க. நான் அப்படி ஆளு இல்லை."

"இருக்கட்டும். நீ நல்லவனாவே இருந்துட்டுப் போ... ஆனா நான் பொம்பளைப் புள்ளைய வீட்ல வச்சிருக்கன்ல. ஜாக்கிரதையாத்தான் இருக்கணும்" என்றாள் லீலா.

"என்னப்பா அழகு... நீ 'கம்'முனு இருக்க... உங்கம்மா பாட்டுக்கு வாயில வந்தபடி பேசுறாங்க."

"சரி, விடுங்க சார்...!" என்ற அழகு... "அம்மா, சாரு டீஸன்டான ஆளு. நீ

# பூரசம்

பாஸ்கர் சக்தி



ஏதாவது பேசிடாத... வாங்க சார் நாம வெளில போகலாம்" என்று எழுந்தான்.

வீரையன் மனம் யோசித்தது. அவன் வீட்டுக்குள் நுழைந்தது ஒன்றும் நல்ல நோக்கத்துடன் இல்லை. அந்த வீட்டின் பெண்களை, லீலாவை பார்க்கிற எண்ணத்துடன்தான் இப்போது வந்தான். இப்படி ஒரு வரவேற்பைப் பற்றி அவன் கனவிலும் நினைக்கவில்லை. எழுந்து நின்றான்.

"உங்ககிட்ட பணம் வாங்கியிருக்கேன்."

"ஆமா... கொண்டாந்திருக்கீங்களா?"

"இல்லை... ரெண்டு நாள்ல அதைக் குடுத்திர்றேன்னு சொல்லத்தான் வந்தேன். நீங்க என்னன்னா?..."

"அதென்ன! சொல்றது ஒருக்க...குடுக்கறது ஒருக்க...ஒரேயிதா வந்து குடுத்திருங்க."

"நான் வர்றேன் அழகு" என்று கிளம்பிய வீரையனின் முகத்தில் தெரிந்த கோபத்தை அழகு கவனித்தான். கூடவே வெளியே வந்தான்.

விடுவிடுவென்று நடந்து போன வீரையனின் கூடவே போனான் அழகு... "சார்... கோவிச்சக்காதீங்க."

வீரையன் சிலுப்பியபடி பேசினான், "ஆனாலும் அழகு, உங்க அம்மாவுக்கு ஆளுகளோட தராதரம் தெரியலைப்பா... என்னைப் பத்தி என்ன தெரியும்னு இப்படியெல்லாம் பேசுறாங்க. பம்பாய்ல... எத்தனை ஃபேமிலியோட நான் பழகி இருக்கேன் தெரியுமா? வீரையாண்ணே, வீரையாண்ணேன்னு அங்க இருக்கற பொம்பளைங்க எல்லாம் அவ்வளவு நம்பிக்கையா இருப்பாங்க. சோறு பொங்கற அடுப்பு வரைக்கும் போய் வருவேன்."

"அதுக்கில்லண்ணே. கிராமம். நாலு பேரு நாலு விதமாப் பேசுவாங்க. அதுனாலதான் அம்மா கொஞ்சம் கண்டிப்பா இருக்காங்க."

"இந்தக் கண்டிப்பை சரவணங்கிட்டயும் காமிக்க வேண்டியதுதானே... அவன் வந்தா மட்டும் பிரியமா பேசுறாங்க. பெரிய வீட்டுப் பையன்னுட்டா?"

அழகுவுக்குச் 'சுருக்'கென்றது.

"இதென்ன அண்ணே அர்த்தமில்லாத பேச்சு. பேசாமப் போய்ட்டு வாங்க."

சற்று எரிச்சலோடு இதனைச் சொல்லிவிட்டு வீட்டுக்குள் அழகு போய்விட்டான்.



# வீடு

வீரையன் மிகவும் அவமானமாக உணர்ந்து சற்று நேரம் அங்கேயே நின்று கொண்டிருந்தான்.

'எவ்வளவு ஈஸியா நம்மளைக் கேவலப் படுத்திட்டா அந்தப் பொம்பளை. சரவணன் பேச்சை எடுத்ததும் இந்தக் குள்ளனுக்கு எவ்வளவு கோவம் வந்துச்சு...ம்... வச்சிக் கிறேன்' என்று கறுவிக் கொண்டான்.

கிருஷ்ணவேணியும் அவளது சகோதரி களும் கோவிலுக்குப் போகையில் கிருஷ்ண வேணியின் கண்கள் அங்கங்கே அலைந்து சரவணனைத் தேடின.

கோவிலுக்குச் செல்லும் வழியில் சரவ ணன் எதிர்த்தாற்போல் சைக்கிளில் வந்தான். மூன்று வேணிகளை எதிர்பாராததால் சற்றுக் குழம்பினாலும் அவன் சைக்கிளிலிருந்து இறங்கி அதனைத் தள்ளியபடியே அவர் களை எதிர்கொண்டான்.

"என்ன மூணு பேருமா கோயிலுக்குக் கிளம்பியாச்சா?"

மூவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். கிருஷ்ணவேணி, சகோதரிகள் மத்தியில் சரவணன் மீது கவனம் கொள் வதைத் தவிர்க்க விரும்பினாள். எனவே அவள் தென்மேற்குத் திசையில் பறந்த ஏதோ ஒரு பறவையைப் பார்த்தபடி இருந்தாள்.

சரவணன் போன்ற ஆம்பளைப் பசங் களுக்கு, கிருஷ்ணவேணி போன்ற பெண் களின் தர்மசங்கடம் எங்கே புரிகிறது? அவன் அவளையே பார்த்தபடி மறுபடியும் அந்தக் கேள்வியைக் கேட்டான்.

அம்சவேணி சரவணனின் பார்வை கிருஷ்ணவேணியின் பக்கமே இருப்பதை உணர்ந்தாள். அவனுக்குப் பதில் சொல்லி அனுப்புவது இப்போது தனது கடமை என்று அவளுக்குத் தோன்றியது.

"கோயிலுக்குத்தான் போறோம்" என் றாள். சரவணன், அம்சவேணியின் பக்கம் திரும்பி சிரிப்பு ஒன்றை உதிர்த்தான்.

''எதுக்குச் சாமிகும்பிடவா?'' என்று கேட்ட பின்புதான் சரவணனுக்கு தான் எவ் வளவு கிறுக்குத்தனமாகக் கேட்டோம் என்பது உறைத்தது.

சகோதரிகள் இருவர் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். கிருஷ்ணவேணி பொங்கிய சிரிப்பை விழுங்கிக் கொண்டு இல்லாத பறவையை இன்னும் தேடிக் கொண்டிருந்தாள். அம்சவேணி சரவண னைக் குறும்பாகப் பார்த்தாள்.

"ம்..வேண்டிக்கப் போறோம்.. சாமிகிட்ட."

"என்னன்னு வேண்டிக்கப் போறீங்க?"

"மூணு பேருக்கும் நல்ல புருஷங் கிடைக் கணுமின்னு."

இந்தப் பதிலும், இதனை அம்சவேணி சொன்ன விதமும் சரவணனை வெகுவாக கிளர்ச்சியடையச் செய்தது. அந்த நொடியில் அவன் அம்சவேணி ஆணையிட்டால் மூவரையுமே கல்யாணம் செய்து கொள்ள சம்மதித்து விடுவான்.

சிரித்தபடியே அவர்களுக்கு வழிவிடுவது போல் ஒதுங்கிய சரவணனின் கண்கள் கிருஷ்ணவேணியின் கண்கள் தன்னைச் சந்திக்கிற விநாடிக்காக ஏங்கி அவள் விழி களைத் தொடர்ந்தன.

சிறிது தூரம் கடந்த பின்பு எதேச்சையாக காலில் ஏதோ குத்திய பாவனையில் குனிந்த கிருஷ்ணவேணி, சகோதரிகள் அறியா வண் ணம் சரவணனைப் பார்த்து ஒரு சிரிப்பை அனுப்பி வைத்துவிட்டு நடந்தாள். அவர் களைப் பின்தொடர்ந்து கோயிலுக்குச் செல்லலாமா? என்று யோசித்த சரவணன் அடுத்த நொடியிலேயே அந்த எண்ணத்தை உதறினான்.

சற்றுத் தொலைவில் சுந்தர், மணி, பாலா மூவருடன் வீரையனும் அவனை நோக்கி வந்தனர்.

"என்னா சரவணா, வர வர இப்பல்லாம் நீ எங்களைக் கண்டுக்கிறதேயில்லை" என் றான் சுந்தர்.

"யாரு சொன்னா? நீங்கதான் தோப்புக் குப் போறோம், டவுனுக்குப் போறோம்னு அப்பப்ப கௌம்பிப் போயிர்றீங்க."

"லேய்... பொய் சொல்லாத. கூப்பிடும் போது எல்லாம் வேலையிருக்குன்னு நீதானடா சொல்லிட்டுத் தப்பிச்சுப் போன."

"சரி... அதை விடுங்கப்பா... இப்ப எங் கேயாவது போலாம்" என்றான் மணி.

சுந்தர் சொன்னான், "மூணு சகோதரி

கும்பகோணத்தில் ஒரு நிகழ்ச்சியில் பக்திப்பாடல்கள் மட்டும் பாடிக் கொண்டிருந் தார்கள். அதில் நான் பாடினேன். ராஜமாணிக்கம் பிள்ளை தலைமை வகித்தார்.

'நீ நன்றாகப் பாடுகிறாய். என்ன பாடுகிறாய் என்பதே தெரியாமல் உன்னை மறந்து பாடு கிறாய். கானடா ரொம்ப இயற்கையாக இருந் தது. ஹார்மோனியத்தில் உன் விரல்கள் விளை யாடின' என்று என்னிடம் சொல்லிவிட்டு, ரசி கர்களைப் பார்த்து, 'இந்தப் பையனை யாராவது நல்ல வித்துவானிடம் சேர்ப்பிக்க வேண்டும்.

இவனுடைய சங்கீதத் திறமையைக் கவனமாக வளர்த்துப் பாதுகாக்கச் செய்ய வேண்டும்!" என்றார்.

நான் நகுமோமு பாடி, நிரவல் செய்து, சுவரம் பாடி முடித்ததும், குரு சங்கரசிவம் அவர்களிடம் என்னை ஒப்படைக்கலாம் என்றதும் எனக்கு மகிழ்ச்சி!

— மதுரை டி.என். சேஷகோபாலன்



களும் எங்கே போறாங்க... கோயிலுக்கா?"

"ஆமா."

"நீ மறிச்சுப் பேசிக்கிட்டிருந்ததைப் பார்த்தோம். என்ன விசாரிச்ச!"

"கோயிலுக்கான்னு கேட்டேன்." சுந்தர் சிரிக்க ஆரம்பித்தான். "எவ்வளவு அறிவான கேள்வி பாரு... ஏன்டா சரவணா இப்படி ஆயிட்ட! ச்சச்ச..நம்ம குரூப்பிலயே நீதான் கொஞ்சம் விவரமானவன்னு நினைச்சேன்."

"இப்பயும் அவன் விவரமானவந்தான்டா. பஞ்சபாண்டவர் மாதிரி ஒண்ணா சுத்திக்கிட்டு இருந்தோம். இவன் தனிக்கட்சி ஆரம்பிச்ச மாதிரி நம்மட்டருந்து பிரிஞ்சு போயி அந்தப் பொண்ணை டாவடிக்கிறான்டா" என்றான் பாலா.

வீரையன் மனத்திலிருந்த பொறாமைத் தீ வெளித்தெரிய சொன்னான்.

"நான் அந்த வீட்டுக்குப் போனதுக்கு அந்தப் பொம்பளை என்னை அவமானப் படுத்துறாடா. ஆனா, இவன் அப்பப்ப போறான். ஹவுஸ் ஓனர் பையனாம். போய் அரட்டை அடிச்சுட்டு வர்றான்."

"அப்படியாடா?"

சரவணன் இவர்களைச் சமாளிக்கத் திணறினான். "ஏய் அதெல்லாமில்லைடா... நானே உங்களைப் பாக்கணும்னுதான்டா நினைச்சுக்கிட்டிருந்தேன்" என்றான்.

"யேய்...பொய்யெல்லாம் சொல்லாத... எங்களையெல்லாம் பாக்குற 'மூட்'லயா நீ இப்ப இருக்க..."

"நிஜமாதாண்டா."

வீரையன் கேட்டான், "எப்ப நீ எங்களைத் தேடின. என்னைப் பாத்தாக்கூட ஒதுங்கிப் போயிரலை நீ!'' என்றான் அபாண்டமாக.

"வீரையண்ணே ரொம்ப ஓவரா சொல்றாருடா. இந்த ஊர்ல உங்களை விட்டா எனக்கு வேற எந்த ஃப்ரெண்ட்ஸ் இருக்காங்க... நானே ரெண்டு மூணு விஷயத்தை உங்ககிட்ட சொல்லி யோசனை கேக்கலாம்னு இருந்தேன்" என்றான் சரவணன். சற்று சீரியஸான முகத்துடன்.

மற்றவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். பயல் நிஜமாகவே ஏதோ சொல்கிறான் என்று அவர்களுக்குத் தோன்றியது.

"சரி...வாங்க பாலத்துக்குப் போவோம்" என்றான் சரவணன்.

வழியில் கடையில் டீ குடிக்கையில் மூன்று சகோதரிகளும் கோவிலிலிருந்து திரும்பி வந்தனர். நெற்றியில் குங்குமக் கீற்றுடன், சற்றுப் பளிச்சிட்ட தாவணியுடன் அவர்களைப் பார்க்கையில் அந்த மாலைப் பொழுதுக்கே சற்றுப் பொலிவு கூடியது. மணி சொன்னான், "சரவணன் நம்மளை ஒதுக்கிறதுல தப்பே இல்லைடா... அவனுக்குச் சான்ஸ். நமக்கு கிடைக்கலை. அம்புட்டுத்தான்" என்றான்.

"இன்னிக்குத்தான்டா மணி கொஞ்சம் விவரமா பேசியிருக்க" என்றான் சுந்தர்.

ஐவரும் பாலத்தை நோக்கி நடந்தனர். வீரையன் சற்று சிந்தனையுடன் நடந்தான். அவனது மனது சரவணன் என்ன சொல்லப் போகிறான் என்கிற குழப்பத்திலிருந்தது.

பாலத்தில் போய் அமர்ந்தனர். சரவணன் அமைதியாக சற்று நேரம் இருந்தான். பிறகு பேசினான். "பூவரசவீடு பற்றி எங்க பாட்டிகிட்டே கேட்டன்டா... அவங்க சொன்ன கதை ரொம்ப பயங்கரமா இருந்தது."

"என்னடா என்ன?"

என்றார்கள் நண்பர்கள் ஆர்வத்துடன்.

கதையை இவர்களிடம் சொல்வதா! வேண்டாமா? என்கிற குழப்பத்துடனிருந்தான் சரவணன். பிறகு தீர்மானித்தான். கிழவி சொன்ன கதையில் பாதி கற்பனை மாதிரிதா-ிருக்கிறது. அதனை நண்பர்களிடம் சொல்வதில் தப்பில்லை என்று தீர்மானித்தான்.

கிழவி சொன்ன எஃபெக்ட்டில் சொல்ல முடியாவிட்டாலும் தன்னாலியன்ற அளவுக்கு அந்தக் கதையை சுவாரஸ்யமாகச் சொன்னான் சரவணன். நண்பர்கள் வாய் பிளந்து கேட்டுக் கொண்டிருந்தனர்.

முழுக்கதையையும் சரவணன் சொல்லி முடித்தான். மற்ற மூவரும் சுவாரஸ்யத்திலும் ஆச்சர்யத்திலும் மூழ்கியிருந்தனர்.

வீரையன் மட்டும் முகத்தில் தீவிரமான சிந்தனையோடிருந்தான்.

(தொடரும்)

# ஷாஜகான்

மாறுபட்ட கதைகளோடு வந்து கதவைத் தட்டுகிற புதியவர்களுக்கு வாய்ப்புக் கொடுக்கும் ஆர்.பி. சௌத்ரியைப் போன்ற தயாரிப்பாளர்கள்தான் தற்போதைய தேவை!

லேட்டஸ்ட்டாய் அவர் அங்கீகரித்திருக்கும் புத்தம் புதிய கதை ஷாஜகானுடையது. வணக்கம் போடுவதற்கு முன்பு கதாநாயகி கழுத்தில் கதாநாயகன் தாலிகட்டி விட வேண்டும் என்ற தமிழ் சினிமாவின் எழுதாத சட்டத்தைத் தூக்கித் துணிச்சலாய் உடைப்பில் போட்டிருக்கிறார், அறிமுக இயக்குனர் ரவி!

கழுத்தில் கிடக்கும் தங்கச்சங்கிலியை அடிக்கடி அடமானம் வைத்துவிட்டு, காதலர்களுக்குப் பதிவுத் திருமணம் செய்து வைக்கும் துடிப்பான இளைஞன், ஒரு பெண்ணின் மீது காதல் கொள்கிறான். ஆனால் அவள் தனது நண்பனின் காதலி என்ற நிஜம் உணர்ந்ததும், ஒரு சராசரி இளைஞனாக, தனிமையில் கண்ணீர் சிந்திவிட்டு, காதலர்களைச் சேர்த்து வைப்பதுதான் இந்த இளம் ஷாஜகானின் கதை!

இதை எரிச்சலூட்டாத காட்சிகள் மூலம் காட்ட முயன்றிருப்பதைப் பாராட்டலாம் என்றாலும், படத்தின் தொடக்கத்திலேயே சண்டை, பிறகு இரண்டாவது க்ளைமாக்ஸ் போல படத்தின் முடிவில் சண்டை, செருகப்பட்ட பாடல்கள் என்று தயாரிப்பாளர் தரப்பிற்காகப் பச்சையாக உடன்பாடுகள் கொண்டிருப்பது படத்தின் நேர்த்தியைக் குறைத்துவிட்டது.

தொடக்கத்தில் துறுதுறுவென்று வரும் விஜய் க்ளைமாக்ஸ் காட்சியில் பொங்கிவரும் அழுகையை அடக்க முடியாமல், கண்களைத் துடைத்துக்கொண்டு திருமணப் பதிவேட்டில் கையெழுத்திடும் அந்தக் காட்சியில் நல்ல நடிப்பை நல்கியிருக்கிறார்.'

அறிமுக நாயகி ரிச்சா பாலோட்டுக்கு நன்றாக நடிக்க வருகிறது. ஆனால் முகத்தில் இத்தனை முதிர்ச்சியோடு வரும் அவரை ஒரு கல்லூரி மாணவியாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

பிச்சைக்காரிக்கும் விவேக்கிற்குமான

அதிரடி ஆக்ஷன் பின்னணியில் தமது தமிழ்ப் பற்றையும் தேசியப் பற்றையும் வெளிப்படுத்துகிறேன் பேர்வழி என்று படமெடுத்துக் கொண்டிருந்த விஜய்காந்துக்கு என்ன நேர்ந்ததோ தெரியவில்லை! அரை நூற்றாண்டு பின்னோக்கிச் சென்று ஒரு படம் எடுத்திருக்கிறார்கள் என்று சொல்வதைவிட, ரத்தம் வழிய வழிய ரசிகனுக்குக் காது குத்திக் கொண்டேயிருக்கிறார்கள் என்பதுதான் சரி!

ஊரே தெய்வமாக வழிபடும் பண்ணையார் தவசி, ஊர்ச் சலவைத் தொழிலாளியை அடித்துவிடும் வில்லனின் மகனுக்குக் கொடுக்கும் தண்டனையைக் கேட்டால் நாள் முழுக்க நினைத்து நினைத்துச் சிரிக்கத் தோன்றும்! ''வீடு வீடாகச் சென்று அழுக்குத் துணிகளை வாங்கி துவைத்துக் கொடுக்க வேண்டும்'' - இது மாதிரி உடோப்பியா தீர்ப்புகளை வழங்கும் பண்ணையாரும், (இவர் ∴பேக்ஸ் பற்றி பேசுவது மட்டும்தான் புதுமை!) அதற்குக் கண்ணை மூடிக் கொண்டு கட்டுப்படும் கிராம மக்களும், தமிழகத்தின் எந்த மூலையில் இருக்கிறார்கள் என்பதை இயக்குனர் குறிப்பிட்டால் புண்ணிய





மாய்ப் போகும்!

மனுநீதிச் சோழனைத் தவறாகப் புரிந்துகொண்டு அவரை மாதிரி ஒரு பாத்திரத்தை உருவாக்க முயற்சி செய்திருக்கும் 'தவசி'யின் மையக் கதையைக் கேட்டால் உங்களுக்கு மறுபடியும் மயக்கம் வரும்!

தமது தவறான தீர்ப்பொன்றால் மகனை இழந்துவிடும் குடும்பத்திற்கு, இழப்பை ஈடு செய்யும் விதமாக தனது மகனை தாரை வார்த்துக் கொடுக்கிறார் தி கிரேட் தவசி. மகனும் கூலாக அந்த வீட்டிற்குப்

# தவசி

போய் அவமானங்களைச் சகித்துக்கொண்டு, கடைசியில் அப்பா நிரபராதி என்று நிரூபிக்கிறார்.

தவசிக்கு எதிராக சதி செய்யும் அந்த வில்லனாவது கொஞ்சம் யதார்த்தமான ஆளா? என்றால் அரையடி நீளமுள்ள கொல்கத்தா காரச் சுருட்டை வாயில் கடித்துக்கொண்டு, செய்த வேலைக்குக் கூலி கேட்கும் பண்ணைத் தொழிலாளியை, தமது அல்சேஷன் நாயை விட்டு கடிக்கவிடும், தமிழ்ச் சினிமா இதற்கு முன் கண்டிராத வில்லன்! (வேறு யார், நம்ம நாசர்தான்!)

பாதியில் நின்று போன கல்யாணத்திற்கு விடியோ கேஸட்டும், புகைப்பட ஆல்பமும் கொண்டு வந்து தரும் நல்ல மனிதர்களையெல்லாம் இயக்குனர் தமது வாழ்நாளில் சந்தித்திருக்கிறார் போலும்! ஆஹா! ஃபைட் சீன் வரப் போகுது! அய்யோ பாட்டுக்கு 'வீட்' வந்துடுச்சி என்று முன் வரிசை ரசிகனே ஒப்பிக்கிறமாதிரி வியாபார அம்சங்கள் திணிக்கபட்டிருப்பது, யாதார்த்தத்தின் குரல் வளையைக் கூடிய மட்டும் கடித்துக் குதற உதவியிருக்கிறது!

இப்படியொரு படத்தைப் பொறுமையாய் உட்கார்ந்து பார்க்க வைக்கும் அம்சங்களில் முதலிடம் பிடிப்பது உதயசங்கரின் ஓட்டைகள் இல்லாத திரைக்கதை! பிறகு வித்யாசாகரின் இனிமையான இசை! அப்புறம் அப்பா, மகனாக நடிப்பில் வேறுபாடு காட்டியிருக்கும் விஜய்காந்தின் உழைப்பு! அம்மா ஜெயசுதா, கல்யாணம் நின்று போன சௌந்தர்யா, வரதட்சணை கேட்டு மனைவியைத் துன்புறுத்தும் இளவரசு ஆகியோரும் கவனிக்க வைக்கிறார்கள். விரசமில்லாத நகைச்சுவை மூலம் அடிக்கடி நம்மை சந்தோஷப்படுத்துகிறார் வடிவேலு!

ரசிகர்களுக்கு மாறுபட்ட தீனி போடுகிறேன் என்று தமிழ் ரசனையை மேலும் கெடுப்பவர் என்று பெயரெடுக்க வேண்டாம் என கேப்டனைக் கேட்டுக் கொள்கிறோம்! வணக்கம்!

● ஆவரெஜ்

தொடர்புகளை வியாபாரமாக்கியிருப்பதையும் வன்மையாக கண்டிக்க வேண்டியது நமது கடமை. (குமட்டுகிற அளவுக்குப் போய்விடுகிறது இந்த நகைச்சுவை)

மணிசர்மாவின் இசையில் 'அச்சச்சோ புன்னகை' உள்ளத்தில் மென்மையாய் கிச்கிச் மூட்டும் நல்ல மெட்டு. ஷாஜகான், விஜய்க்காக கட்டப்பட்டிருக்கும் ஒரு குட்டி தாஜ் மஹால்.

● அபவ் ஆவரெஜ்

- விஷுவல்தாசன்

# அந்த நாள் ஞாபகம்...

## ஒரு மியூசிக் டூர்!

சஞ்சய் சுப்பிரமணியம் தொடங்கிய வெப்சைட் சங்கீதம்.காம், கர்நாடக இசையோடு சம்பந்தப்பட்ட இடங்களை வட சென்னையிலும், மயிலாப்பூரிலும் ஆராய்ச்சி செய்து அடையாளம் கண்டது.

இந்த இசைத் தலங்களுக்கு ரசிகர்களை டிசம்பர் கச்சேரி சீஸனில், சார்ஸூர் என்ற நிறுவனம் ஒரு ரவுண்டு அழைத்துச் செல்லத் திட்டமிட்டிருக்கிறது. (சார்ஸூர் ஸிடிக்களும் ஆடியோ காஸட்டுகளுமாக வெளியிட்டுப் பிரபலமாகி வரும் நிறுவனம்.)

• பாபனாசம் சிவன் பஜனை கோஷ்டி



முதலில் வட சென்னையின் 'ஜார்ஜ் டவுன் வாக்' (ஆமா, நடந்து தான் பார்க்கணும்!):

*நெ.41, பந்தர் தெரு.* கோவூர் சுந்தரேச முதலியாரின் மிகப் பெரிய வீடு இது. இவர் ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் துபாஷாக இருந்தவர். தியாகராஜரின் சீடர் வீணை குப்பையர் என்ற பாடலாசிரியரை சுந்தரேச முதலியார் ஆதரித்தார். தியாகராஜரின் பெருமையைக் கேள்விப்பட்ட முதலியார், வீணை குப்பையரிடம், 'எப்படியாவது தியாகராஜரைச் சென்னைக்கு அழைத்து வாருங்கள்' என்றாராம். தியாகராஜரோ மறுத்து வந்தார். ஆனால் அப்போது காஞ்சி மடாதிபதியாக இருந்த உபநிஷத் பிரம்மம், தியாகராஜரை வருமாறு அழைப்பு விடுத்தார். அப்போது (1837-39) இங்கே வந்து முதலியாரின் வீட்டில் ஆறு நாட்கள் தங்கியிருந்தார் தியாகராஜர். கோவூர் சுந்தரேசுவரர் ஆலயத்தை வைத்து ஐந்து கீர்த்தனைகள் இயற்றினார் தியாகராஜர்.

*ஒய்எம்ஐஏ, ஆர்மேனியன் தெரு* - இங்கே இருக்கிற கோகலே ஹாலின் சுவர்களைத் தட்டினால் ஒரு வேளை 'சரிகமபதநி' என்று கூடக் கேட்கும். அத்தனை கச்சேரிகள்! செம்பை வைத்தியநாத பாகவதர் (1918ல்) சென்னையில் செய்த முதல் கச்சேரி இங்குதான். தமிழிசை வளர்ச்சிக்காக எம்.எஸ். இங்கே நிறைய நிதியுதவிக் கச்சேரிகள் செய்திருக்கிறார்.

*89, ராமசாமி தெரு* - வீணை குப்பையரின் மகன் திருவொற்றியூர் தியாகய்யர் இங்கேதான் வசித்தார். பல்லவி ஸ்வரகல்பவல்லி, சங்கீர்த்தன ரத்னாவளி என்ற இரண்டு நூல்களை 1980லும், 1907லும் பதிப்பித்தார். பல அபூர்வ ராகங்களில் வேணுகோபாலசுவாமி மீது 108 கிருதிகள் இயற்றியிருக்கிறார்.

இன்னும் நிறைய இடம் பார்க்கணும். வேகமா நடங்க...

*கிருஷ்ணசுவாமி கோயில், பவழக்காரத் தெரு* - 1787ல் கட்டப்பட்ட இந்தக் கோயிலில் கிருஷ்ணன், குப்பன் என்ற இரண்டு பிபல நாதசுவர வித்துவான்களின் போட்டி நடந்ததாம். திருவொற்றியூர் தியாகய்யர்தான் நடுவர்!

*சென்னை கேசவர் கோயில், சென்னை மல்லீசுவரர் கோயில்* - தேவராஜ முதலித் தெருவும் தங்கசாலை தெருவும் சந்திக்குமிடம் : இந்த இரண்டு கோயில்களும், இப்போது உயர்நீதி மன்றம் இருக்கிறதே, அங்கேதான் இருந்தனவாம். 1757ல் பிரிட்டிஷ்காரர்கள் (பாப்ரி மஸ்ஜித்துக்கு முன்னோடியாக) இவற்றை இடித்து இடிபாடுகளை வைத்து செயன்ட் ஜார்ஜ் கோட்டையின் வடக்கு மதில் சுவரைக் கட்டினார்களாம்! ஆனால் 5 வருடம் கழித்து, இப்போது இந்தக் கோயில்கள் இருக்கிற இடத்தைக் கொடுத்து, கொஞ்சம் பணமும் கொடுத்து, கோயில்களைக் கட்டிக் கொள்ளுங்கள் என்றார்கள். மணலி முத்து கிருஷ்ண முதலியார் முயற்சி எடுத்துக் கொண்டு மக்களிடமிருந்து நிதி திரட்டி 1766ல் கோயில்களைக் கட்டி முடித்தார்களாம். இந்தக் கோயில்களில் என்ன விசேஷம்? பெரியாழ்வார் சந்நிதியில் வருடா வருடம் நாதசுவரக் கச்சேரிகள் நடத்த, ஜூட்டூர் சுப்பிரமணிய செட்டி 10,000 தங்க நாணயங்கள் அளித்தாராம். செம்பனார் கோயில் ராமசாமிப் பிள்ளை, டி.என்.ராஜரத்தினம் பிள்ளை என்று பிரபல வித்துவான்கள் இங்கே வாசித்திருக்கிறார்கள்.

*3, தம்பு நாயக்கர் லேன்* - தாச்சூர் பெத்தா, சின்ன சிங்காராச்சர்லு என்ற வாக்கேயகாரர்கள் இங்கேதான் வசித்து வந்தார்கள். புத்தகங்கள் வெளியிட்டிருக்கிறார்கள். சிங்காராச்சர்லு பச்சையப்பன் கல்லூரியில் பண்டிதர். இளையவர் வீணை தனம்மாள்

வீணை வாசிக்கக் காரணமாயிருந்தவர்.

இதோ வந்தாச்சு, கோவிந்தப்பநாயக்கர் தெரு : இங்கே நிறைய சபாக்களும், ஹால்களும் இருந்ததாம். முக்கியமாக சௌந்தர்ய மகால். இங்கே கச்சேரிகள் எல்லாம் நிறைய நடக்குமாம்.

*6, ராமகிருஷ்ண செட்டித் தெரு* - ஜலதரங்கம் ரமணய்யா செட்டி, இந்த வீட்டை வீணை தனம்மாளுக்குப் பரிசாகக் கொடுத்தாராம். ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் இங்கே தனம்மாள் கச்சேரி செய்வார். பேரன் பேத்தியான சங்கரன் பாலசரஸ்வதி, பிருந்தாமுக்தா-ஃப்ளூட் விசுவநாதன் எல்லோரும் இங்கேதான் இளமைக் காலத்தைக் கழித்தார்களாம்.

*நாட்டுப் பிள்ளையார் கோயில் தெரு* - வீணை தனமாள் பிறந்த வீடு இங்கே இருக்கிறது. *1910* வரை இங்கேதான் வாழ்ந்திருக்கிறார்.

இப்போது ஒரு டிரான்ஸ்போர்ட் கோடவுனாக இருக்கும் *108 அண்ணாபிள்ளை தெரு*, எம்.எல்.வசந்தகுமாரியின் பெற்றோர் லலிதாங்கியும் கூத்தனூர் அய்யாசாமி அய்யரும் வசித்த வீடு. 'புரந்தர மணி மாலை'யை இங்கேதான் தொகுத்தார்கள்.

அடுத்தது 'மைலாப்பூர் வாக்'! (கால் வலிக்குதா? கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்கலாம்!) ஆச்சா, புறப்படுங்க...

*18, ஆலிவர் ரோடில்* இருந்தார் முசிறி சுப்பிரமணிய ஐயர். இப்போது *71 முசிறி சுப்பிரமணியம் சாலை*யாகிவிட்டது!

*கற்பகாம்பாள் நகரில்*, ஐம்பதுகளில், தனது வீட்டை இங்கே கட்டினார் மதுரை மணி ஐயர். இப்போது அவரது மருமான் டிவி சங்கரநாராயணன் இங்கே வசிக்கிறார்.

*நாலு மாட வீதிகளிலும்* அதிகாலையில் மார்கழி பஜனை செய்தவர் பாபநாசம் சிவன். 25-ஏ வடக்கு மாட வீதியில் தலைமை நீதிபதி ராமச்சந்திரய்யர் வீடு. இங்கே ஒரு மோடாவில் உட்கார்ந்து ஒரு வாய் காபி பருகுவார்! அடுத்த வீட்டில் மியூசிக் அகடமி தலைவர் கே.வி. கிருஷ்ணசாமி அய்யர் வசித்தார். இந்தத் தெருவில்தான் பெரிய பந்தல் போட்டு, மதுரை மணியின் முதல் சென்னைக் கச்சேரி நடந்தது!

இப்போ நடுவீதிக்கு வாங்க. (தெருவுக்குப் பெயர் நடுவீதிங்க!) *41*ஆம் நெம்பர். பாடகர், ஓவியர் எஸ்.ராஜம் இங்கேதான் இருக்கிறார்.

சாலைத் தெருவில் வன்னியர் சங்கம் பள்ளிக்கூடம்தான் மயிலாப்பூர் சங்கீத சபா, கச்சேரிகள் நடத்திய இடம்! ரசிக ரஞ்சனி சபா 1929ல் தொடங்கப்பட்டதும் இங்கேதான்.

தாண்டிக் கொஞ்ச தூரம் போனால் அரியக்குடி வசித்த வீடு. 'ஹிந்து' குடும்பம் கொடுத்ததாம். எதிர்சாரியில் சில வீடுகள் தள்ளி ஜிஎன்.பி. வசித்தார்.

பார்த்தாச்சா? வாங்க சந்நிதி தெருவுக்கு.

ரத்னா ஸ்டோர்ஸ், கோயிலுக்குப் பக்கத்தில் இருக்கிறதல்லவா? இங்கேதான் ஒரு வீடு இருந்தது. சங்கீத கலாநிதி டி.எல்.வெங்கட்ராமய்யரும், சங்கீத கலாநிதி ஹரிகேசநல்லூர் முத்தையா பாகவதரும் வசித்தார்களாம்.

அடுத்தது கபாலி கோயில். இங்கேதான் ஜிஎன்பி 1920களில் முதல் கச்சேரி செய்தார்.

கடைசி வந்தாச்சு. ஆர்.ஆர்.சபா. சுந்தரேசுவரர் தெரு. மியூசிக் அகடமி தொடங்கி, இங்கேதான் கொஞ்சம் வருஷம் இயங்கியது.

இந்தத் தகவல்களை எல்லாம் எஸ்.முத்தையா, எல்லார்வி (பழைய எழுத்தாளர்), பி. சாம்பமூர்த்தி, 'சுருதி' மாத இதழ், அகடமி ஜர்னல் என்று பல இடங்களிலிருந்து தொகுத்து எடுத்திருக்கிறார்கள்!

-சித்தார்த்


• தனம்மாள்



குருஜி ஏ.எஸ். ராகவன்

# விராலி மலை அமர்ந்த பெருமான்

தான் வழிபடும் முருகனின் முழுமையான உருவத்தை அப்படியே மனத்தில் எழுதி வைத்து நிரந்தரப்படுத்திக் கொள்ள விழைந்தவர் அருணகிரிநாதர். அந்த ஆசையினால் முதலில் அவ்வுருவ எழிலைத் தமிழில் எழுதினார்; பின்னர் அத்தமிழையும் அழகையும் ஒருசேர மனத்தில் எழுதிக்கொண்டார். அவர் தரிசித்து உள்ளத்திலே நிறைத்துக் கொண்ட முருகனின் தோற்றம் எப்படியிருந்தது...?

*சீரான கோல கால நவமணி*
*மாலாபி ஷேக பார வெகுவித*
*தேவாதி தேவர் சேவை செயுமுக*
*மலராறும்*

*சீராடு வீர மாது மருவிய*
*ஈராறு தோளு நீளும் வரியளி*
*சீராக மோது நீப பரிமள*
*இருதாளும்*

*ஆராத காதல் வேடர் மடமகள்*
*ஜீமூத மூர்வ லாரி மடமகள்*
*ஆதார பூத மாக வலமிட*
*முறைவாழ்வும்*

*ஆராயு நீதி வேலு மயிலுமெய்ஞ்*
*ஞானாபி ராம தாப வடிவமும்*
*ஆபாத னேனு நாளு நினைவது*
*பெறவேணும்*
*(திருப்புகழ்)*

அவனுக்கு ஆறு முகங்கள் என்பதால் தலைக்கு ஒரு வகையான கிரீடம் வைத்து விடவில்லை யாரும்! ஒரே சீராக நவரத்தினங்கள் இழைத்த ஆறு கிரீடங்கள் அவனை அலங்கரிக்கின்றன. கிரீடத்தின் நவரத்தினங்கள்தான் சீராக - ஒத்தாற் போல் இருக்கின்றன. ஆனால், முருகனை வணங்கவரும் தேவாதி தேவர்கள் வெகு விதமானவர்கள்! வீரம் பொருந்திய அவன் பன்னிரண்டு தோள்களையும் மாலைகள் அலங்கரிக்கின்றன. அத்தனை மாலைகளிலும் வண்டுகள் வந்து வந்து சீராக - வரிசையாக - மொய்த்தபடியிருக்கின்றன. மணம் வீசுகின்ற அந்த கடப்ப மலர் மாலைகள் முருகனின் இரண்டு திருவடிகளிலும் தொட்டுத் தொட்டு வணங்குகின்றன! ஆராத காதலுடன் வேடர் மடமகளான வள்ளி வலப்புறமும் மேகத்தை வாகனமாகக் கொண்ட இந்திரன் மகள் தேவயானை இடப்புறமும் நிற்கிறார்கள். ஆராய்ந்து நீதி சொல்கிற வேல் ஒரு கையில்; பெருமிதத்துடன் அவனைத் தாங்கி நிற்கும் கோல மயில்... - "இப்படிப் பட்டப் பேரழகுத் தோற்றமுடன் உன்னை நான் தினமும் தியானிக்கும் படியான நிலையை அருள்வாயே!'' என்று அருணாகிரியார் முருகனை வர்ணித்துவிட்டு, அவனிடமே ஞானத்தை அருளும்படி வேண்டுகிறார்.

அருணகிரிநாதர் வர்ணித்த அதே எழில் தோற்றத்துடன் முருகன் காணப்படுவது விராலி மலையில். மேற்சொன்ன விவரணை அவனுடைய தோற்றத்துக்கு முற்றிலும் பொருந்துவது.

திருச்சியிலிருந்து மதுரை செல்லும் வழியில் 26 கி.மீ தொலைவில்

இருக்கிறது விராலி மலை. மலைக்கும் தலத்துக்கும் ஒரே பெயர். சோலை களும் மயில்களும் நிறை இருத்தலம்.



ஆறுமுகனாக இங்கே காட்சி தரும் முரு கன் பேரில் பதினாறு திருப்புகழ் பாக்களைப் பாடிச் சென்றுள்ளார் அருண கிரிநாதர். மிகப் பிரசித்தமா னது:

*'நிராமய புராதன பராபர வராம்ருத*
*நிராகுல சிராதிகப் ப்ரபையாகி''*

என்று தொடங்கும் பா.

*'விராவிய குராவகில் பராரைமு*
*திராவளர்*

*விராலி மலை ராஜதப்*
*பெருமானே''*

என்று முடிகிறது இந்தத் திருப்புகழ்.

முனிவர்கள் எல்லாம் இம்மலையிலே குரா மரங்கள் வடிவில் விராவியிருந்து முருகப் பெருமானை வழிபடுகிறார்களாம். அதனால்தான் இம்மலை விராலி மலை

என்று அழைக்கப்பட்டு வந்து, பின்னர் விராலிமலை ஆயிற்று. இங்குள்ள மரங்களை யாரும் வெட்டுவதில்லை என்றும் சொல்லப்படுகிறது.

விராலிச் செடி (மூலிகைச் செடி) இவ்விடத்தின் தல விருக்ஷம் என்பதால் விராலி மலை என்ற பெயரமைந்ததாகவும் கூறலாம்.

அருணகிரிநாதர் ஆரம்பக் காலத்தில் முருகனடியாராக இருக்கவில்லை என்பதும் சிற்றின்பம் நாடிச் சென்று பின்னர் முருகனால் ஆட்கொள்ளப்பட்டு மகாஞானியானார் என்பதும் அவரே தமது பாடல்களில் பதிவு செய்துள்ள வரலாறுகள்.

ஞானமே வடிவான வயலூர்ப் பெருமான் அருணகிரிநாதரின் கனவில் தோன்றி, "இனி நீ தினமும் திருப்புகழ் பாட வேண்டும்; விராலிமலைக்கு வருவாயாக!" என்று உத்தரவிட்டிருக்கிறான். மெய்ஞானம் என்பது என்ன என்பதையும் எடுத்துச் சொல்லியிருக்கிறான். இனி உன் மாசுகள் அகலும் என்று அபயம் கூறி அவன் அழைக்கவே, விழித்தெழுந்த அருணகிரியார் விதிர் விதிர்த்துப் போயிருக்கிறார். இச்சம்பவத்தை அவர் வயலூர் திருப்புகழில் புகுத்திப் பாடியிருப்பதைக் கவனிக்க வேண்டும்.

*.... ... ... விராலி*
*மாமலையி னிற்ப நீ கருதி யுற்று*
*வாவென அழைத்துஎன்*
*மனதாசை*
*மாசினை அறுத்து ஞானமுதளித்த*
*வரம் இனி நித்தம் மறவேனே*

நகரின் நடுவிலே உள்ள மலையின் உச்சியில் இருக்கிற கோவிலை அடைய 207 படிகள் ஏற வேண்டும். ஏறும் வழியில் இளைப்பாற மண்டபங்கள் கட்டி விடப்பட்டுள்ளன. மலையடிவாரத்தின் தென் பகுதியில் சரவணப்பொய்கை இருக்கிறது. கீழே மெய்க்கண்ணுடையாள் என்கிற அம்மன் ஆலயமும் இருக்கிறது. மிகவும் வரப்பிரசாதி இந்த அம்மன். இவளை வணங்கிவிட்டே எல்லா பக்தர்களும் மலை ஏற ஆரம்பிக்கிறார்கள். மலை ஏறுகிறபோது இடும்பன் சந்நிதியும் பாறையைக் குடைந்து அமைத்துள்ள மீனாக்ஷி -சுந்தரேசுவரர் ஆலயமும் இருக்கின்றன. இவற்றுக்கு மேலே, உச்சியில் சந்தான கோட்டம் மண்டபம். அதை அடுத்து நவராத்திரி மண்டபம்; ஷண்முக மூர்த்தி மண்டபம். நவராத்திரி மண்டபத்தையொட்டித்தான் ராஜகோபுரம் இருக்கிறது. கம்பீரமாகக் காட்சியளிக்கிறது.

ராஜகோபுர வாசலுக்குள் நுழைந்து முருகன் சந்நிதியை அடையும்முன் சந்தான கோட்டம் அல்லது சந்தன கோட்டம் என்ற இடைவழி மண்டபத்தைச் சற்று நின்று கவனிப்போம். இங்கே அருணகிரியாருக்கு ஆறுமுகன் காட்சி தந்து ஆட்கொள்வது போன்ற சிற்ப வடிவம் காணப்படுகிறது. அருணகிரிநாதர் இத்தலத்துக்கு வந்தபோது, அவர் முன் தோன்றி அஷ்டமாசித்திகளை உபதேசித்தருளினாராம் முருகன். இதையும் திருப்புகழில் பாடி வைத்திருக்கிறார் அருணகிரியார்:

*மதியணையுஞ் சோலை யார்த்து*
*மதிவள சந்தான கோட்டின்*
*வழியருளின் பேறுகாட்டிய விராலி*
*மலைமருவும் பாதி யேற்றி*
*கடிகமழ் சந்தான கோட்டில்*
*வழியருளின்பேறு*
*காட்டும் பெருமாளே*

உள்ளே நுழைந்தால் ஒற்றைப்



பிராகாரத்துடன் கருவறை. பிராகாரத்திலும் உள்ளேயும் ஒரு மண்டபம் - ஷண்முக மூர்த்தி மண்டபம் என்று அழகான பெயருடன். இங்கேதான் இரு தேவியருடன் உத்ஸவ மூர்த்தி அழகான கோலத்தில் காணப்படுகிறார் - மூலவரும் உத்ஸவரும் ஒரே தோற்றத்தில் காணக் கிடைக்கும் ஸ்தலம் இது.

பிராகாரத்தின் மேற்குப் பக்கத்தில் விநாயகர், தக்ஷிணாமூர்த்தி, அகஸ்தியர், அருணாகிரிநாதர் ஆகியோரின் சந்நிதிகள் இருக்கின்றன.

வடக்குப் பக்கத்தில் உள்ள சண்டிகேஸ்வரர், பைரவர்; பிரதான சந்நிதிக்கு மேற்புறம் வசிஷ்டர், காஷ்யபர், நாரதர், அகஸ்தியர் என்று முனிக்கூட்டம் மொய்க்கிறது. மகா மண்டபத்தில் உத்ஸவ மூர்த்தங்களிடையே நடராஜர் - சிவகாமியும் இருக்கிறார்கள்.

மகா மண்டபத்தைக் கடந்து கர்பக்கிருஹத்துக்கு நாம் செல்லும் முன் நம் மனம் அங்கு ஓடி விடுகிறது. அங்கே காணக் கிடைக்கும் ஆறுமுகப் பெருமானின் எழிலுருவம் உள்ளத்தை நெகிழ்த்தி உட்புதைந்து கொள்கிறது.

கமல முகங்களும், கோமளத்து இலங்கும் நகையும், நெடுங் கண்ணும், காதினில் துலங்கு கனக குண்டலமும் தோடும், வஜ்ர அங்கதமும் அடர்சுடர் வேலும் உல கெங்கும் ஒரு நொடியில் ஆடிச்சுற்றி வந்து விடும் மயிலுமாகக் காட்சி தருகிறான். மனம் லயிக்க, லயிக்க, பொற்சதங்கையும், தண்டையும் ஒலிப்பதாகக் கூட நம் செவிகளுக்குக் கேட்கிறது.

இருபுறமும் வள்ளி, தெய்வானையுடன் கூடி, ஜோதிமயமாகக் காட்சி தரும் விராலி மலை முருகனை விட்டுப் பிரிய மனமே வராமல், அங்கேயே இருந்து விடலாம் என்று தோன்றுகிறது.

தரிசனம் முடித்து வந்து வெளியே அமர்ந்து தலவரலாறுகளை அசை போடுகிறோம்.

சரவணப் பொய்கையில் முருகன் குழந்தையாகத் தோன்றியபோது, வசிஷ்டரின் மனைவி அருந்ததி பாலூட்ட மறுத்து, வசிஷ்டரின் சாபத்துக்கு ஆளானதாக புராணம் சொல்கிறது. கற்புக்கரசியான அருந்ததியை வீணே தண்டித்ததற்காக வசிஷ்டரை முருகன் சபித்து விட்டாராம்! பின்னர் வசிஷ்டர், அருந்ததி இருவருமே விராலிமலை வந்து முருகனை வழிபட்டு, சாப விமோசனம் பெற்றனர்.

மாயையின் சேர்க்கையினால் சூரபத்மன் முதலான அசுரர்களைப் பெற்ற பாவத்தைப் போக்கிக் கொள்ள காஷ்யப முனிவர் இந்த முருகனை நாடியிருக்கிறார்.

சிவ நிந்தனை செய்த பாவத்தைப் போக்கிக் கொள்ள, நாரத முனிவர்கூட விராலி மலையை நாடி வந்திருக்கிறார். இந்த வரலாறுகளுக்குச் சான்றாக வசிஷ்டர், காஷ்யபர், நாரதர் திருவுருவங்கள் இங்கே சிலை வடிவில் காணக் கிடைக்கின்றன.

ஞானவரோதயன் என்பவர் இத்தலத்தில் வாழ்ந்து வந்தாராம். குழந்தையாயிருக்கும் போது பள்ளிக்குச் செல்லாமல் இவர் போக்குக் காட்ட, பெற்றோர்களால் தண்டிக்கப் பெற்றிருக்கிறார். மனம் வெதும்பிப் போன குழந்தை, விராலிமலை ஆலயத்துக்கு வந்து ஒண்டிக் கொண்டதாம். ஊரெல்லாம் குழந்தையைக் காணோமே என்று தேடியிருக்கிறார்கள். இரவில் முருகன் குழந்தை முன் தோன்றி அருள்புரிந்து, கல்விக் கூடத்தைப் புறக்கணித்த இவரையே பெரிய்ய புலவராக்கியதாகச் சொல்லப் படுகிறது.

அண்டி வந்தவர்களை, ஒண்டிக் கொண்டவர்களை, காப்பதில் கந்தனுக்கு நிகரானவரில்லை.

# அருள்வாக்கு

சப்த விசேஷத்தோடு அர்த்த கௌரவமும் வேதத்துக்கு அளவிட முடியாததாக இருக்கிறது. வேதக் கருத்துக்களைப் பார்த்துப் பார்த்து இதர மதஸ்தர்களும், வெளிநாட்டு அறிவாளிகளும்கூட ஆச்சர்யப் படுகிறார்கள். காவிய ரீதியில் இருக்கிற அழகு, சமூக வாழ்வு முறைகளை நுட்பமாகச் சொல்லியிருக்கிற அழகு, அத்யாத்ம தத்துவங்கள், நன்னெறி உபதேசங்கள் (moral instruction) ஸயன்ஸ் கருத்துகளும்கூட வேதங்களில் கொட்டிக் கிடக்கிறது என்று ஆச்சர்யப்படுகிறார்கள்.



சப்த சலனமான மந்திரங்களுக்கெல்லாம் அர்த்தம் இருக்க வேண்டும் என்பதே இல்லை. பிரகிருதத்தில் (நடைமுறை வாழ்க்கையில்) பார்த்தாலும், வார்த்தையோ அர்த்தமோ இல்லாமலே ஒரு ராகத்தை ஆலாபனம் பண்ணிக் கேட்கிறபோது, அதன் வெறும் சப்தம் மட்டுமே நமக்கு ஆனந்தம், துக்கம் முதலான உணர்ச்சிகளைத் தருகிறது. வாத்திய ஸங்கீதத்தினால் ஏற்பட்ட vibrationகளிலேயே கறிகாய்ச் செடிகளைத் தூண்டி யதேஷ்டமாகக் காய்க்க வைத்திருக்கிறோம் என்று ஸமீபத்தில்கூட ஒரு யுனிவர்ஸிடியில் பரிசோதனைகள் பண்ணித் தெரிவித்திருக்கிறார்கள். சப்தத்துக்கு சிருஷ்டி சக்தி உண்டு என்பதற்கு இது ஒரு proof, அது ஒரு பக்கம் இருக்கட்டும். இங்கேயும் வாத்ய ஸங்கீதம் என்பதாலேயே வார்த்தையோ, அர்த்தமோ முக்கியமில்லை என்று தெரிகிறது.

வேதத்தில் என்ன விசேஷம் என்றால் அதன் சப்தத்துக்கே தனியாகச் சக்தி இருப்பது மட்டுமின்றி, வார்த்தைகளாகவும் அதற்கு மிக உயர்ந்த அர்த்தம் இருக்கிறது.

- ஜகத்குரு காஞ்சிகாமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சாரிய சுவாமிகள்

கல்கி 16.12.2001

சிவானந்த லஹரி ஸ்தோத்திரத்தில் ஆதிசங்கரர் ஓர் அழகான உதாரணம் தருகிறார். பக்தி எப்படி இருக்க வேண்டும் என்பதற்கான உதாரணம் அது.

அழிஞ்சில் (செம்மரம்) விதை எப்படி தாய் மரத்துடன் ஒட்டிக் கொள்கிறதோ, ஊசி எப்படி காந்தத்தால் கவரப்படுகிறதோ, பதிவிரதை எவ்வாறு தன் கணவனின் நினைவிலேயே ஆழ்ந்திருக்கிறாளோ, கொடிகள் எப்படி மரங்களைத் தழுவி வளர்கின்றனவோ... அப்படியெல்லாம் இறைவனின் பாதாரவிந்தத்தில் அமிழ்ந்திருப்பதே பக்தி.

இந்த உதாரணங்களுள் 'அழிஞ்சில் மரத்தின் விதைகள்' என்கிற உவமை மட்டும் விளக்கத்துக்குரியது.

ஏறு அழிஞ்சில் என்று ஒரு மரம் உண்டு. அதன் காய் முற்றியதும் பூமியில் விழுந்து உடையும். உடனே அதனுள்ளிருக்கும் விதைகள் ஒருவித ஆகர்ஷண சக்தியினால் நகர்ந்து நகர்ந்து வந்து மறுபடியும் தாய் மரத்துடனேயே ஒட்டிக் கொள்ளும். அவ்வாறு ஒட்டிக் கொண்டு மரத்தினுள்ளேயே மறைந்து விடும் என்றும் சொல்கிறார்கள்.

இறைவனிடமிருந்து பிரிந்து வந்து விடும் நாமும் இப்படியே அழிஞ்சில் விதைகள் போல் மீண்டும் மீண்டும் அவனையே அண்டிச் சென்று, ஒண்டிக் கொள்ள வேண்டும்! அவ்வாறு ஒண்டிக்கொண்ட ஞானவரோதயன் விராலிமலை முருகனின் குறைவற்ற கருணைக்குப் பாத்திரமானார். நமக்கு மட்டும் குறை வைத்துவிடுவானா குமரன்?

(அடுத்த வாரம்:
தேனிசை துய்க்கும்
தணிகைப் பெருமான்)

✉ அநாதைப் பிணங்களை அடக்கம் செய்யும் மகாதேவன் என்ற மனிதன் மெகா பாராட்டுக் குரியவர்.
சென்னை, கே.விராமன்

✉ சாலை மராமத்து முதல் சகல பிரச்னைகளுக்கும் தீர்வு காண வழி சொல்வதைவிட மு.க.ஸ்டாலினையும் முந்தைய தி.மு.க. ஆட்சியையும் குறை சொல்ல வழி காண்பதிலேயே குறியாய் உள்ளார் கராத்தே தியாகராஜன். அவரின் பேட்டி முழுக்க இதையே பிரதிபலித்தது.
கபிஸ்தலம், ஆர். இரவிகுலரகுவர்மன்

✉ 'களிப்பு, கண்ணியம், கட்டுப்பாடு!' தலைப்பிலான தலையங்கம் படித்தேன். சச்சின் உள்பட நமது கிரிக்கெட் வீரர்கள்மீது களங்கம் கற்பிக்கப்பட்டிருப்பது நம்மால் ஜீரணித்துக் கொள்ள முடியாமல் இருக்கிறது. சர்வதேச கிரிக்கெட் கவுன்சிலின் நடுவர்கள் எப்போதும் பாரபட்சமற்ற தீர்ப்பை வழங்கியதில்லை. இந்நிலையில் உங்களின் தலையங்கம் நடுநிலைமையோடு எழுதப்பட்டிருந்தாலும், நாட்டின் ஒட்டு மொத்த கிரிக்கெட் ரசிகர்களின் எண்ண ஓட்டத்தைப் பிரதிபலிக்கவில்லை. உண்மையை ஜீரணிப்பது சில வேளைகளில் கஷ்டமாக இருக்கிறது.
மொரட்டுப்பாளையம்,
விஜய ஸ்ரீ இராஜேஸ்வரன்

✉ படப்பிடிப்பிற்காக வாடகைக்கு விடப்படும் காரைக்குடி நகரத்தார்களின் கலைநயமிக்க மாளிகைகளின் எழில் தோற்றம் கண்களுக்கு நல்ல விருந்தாக அமைந்திருந்தது.
சென்னை,
வீ.பா.கிருஷ்ணன்

✉ 'தனிமையில் டிக், டிக்,' அவசியமான ஆராய்ச்சி. வெளிச்சம், சத்தம், இல்லாத இடத்தில் மனிதனின் வெப்ப நிலை, எப்படி மாறுபடும் என்ற ஆராய்ச்சியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட மதுரை காமராஜ் பல்கலைக் கழக ஆராய்ச்சியாளர் மாரிமுத்துவின் பணி, மிகச் சிறந்தது.
பெங்களூர், அ.தாசன்

✉ செல்வச் செருக்குக் கொண்டிருப்பவர் முன்னே மிடில் கிளாஸ் வர்க்கத்தினர் அடிமைப்பட்டு மனித நேயத்தை மறப்பதைச் சபரி கண்ணனின் 'தூண்டில்' சிறுகதை தெளிவாகப் புலப்படுத்தியிருந்தது!
நெய்வேலி, சாந்தி சுந்தர்

✉ ஆப்கானில் மட்டுமல்ல. தீவிரவாதம் என்ற ஆயுதத்தை எந்த நாடு கையில் எடுத்தாலும் ஒடுக்கப்பட வேண்டும். ஆப்கானைப் பொறுத்தவரை வடக்குக் கூட்டணி ஆட்சி அமைப்பதை எந்த நாடும் தடுக்கவோ விதிமுறைகள் போடவோ கூடாது.
நாகூர், எஸ்.அப்துல்லா அஹமது




ஆட்டைக் கடித்து மாட்டைக் கடித்து!!!

✉ குடு பிடிக்கும் வீரப்பன் விவகாரம் படித்தேன். தற்போது அதிரடிப்படை மற்றும் போலீஸ் நடவடிக்கை ஆட்டைக் கடித்து, மாட்டைக் கடித்து, மனிதனைக் கடிக்கும் போல இருக்கிறதே!
கோயமுத்தூர்,
பி. தங்கவேல்

# நடக்குமென்பார்;



**மேஷம் :** கிடுகிடு பஸ் கட்டண உயர்வால், ரயிலுக்குக் கூடியிருக்கும் மவுசு போல, உங்களுக்கும் திடீர் முக்கியத்துவம் கிடைக்கும். சிவப்புப் பொருள் சிறப்பு தரும். சொத்துக்கள் சேரும். பயணம் பலன் தரும். கூட்டுத் தொழில் லாபம் தரும். சூரியன் 9ம் இடத்துக்கு தாவுவதால், அரசு விவகாரங்களில் அதிர்ஷ்டம் அள்ளிக் கொட்டும். ஆனால் ஒரு விஷயம். 9ல் சூரியன் கேதுவுடன் உலவுவதால், தந்தை நலன் பாதிக்கப்படலாம். உஷார்!



**ரிஷபம் :** 'கடவுளின் கருணையால் விடுதலை ஆனேன்!' என்று மகா அடக்கத்தோடு மகிழ்ந்திருக்கும் ஜெ... போல, நீங்களும் சந்தோஷப்படுவீர்கள். 10ல் செவ்வாய், படுகுஷியாக போஸ் தருவதால், எடுத்த காரியங்களில் எல்லாமே வெற்றிக் கொடி பட்டொளி வீசிப் பறக்கும். உடன் பிறந்தவர்களால் நன்மை, கிடைக்கும். மனை, நிலம், வீடு, ரியல் எஸ்டேட் இனம் ஆதாயம் கொண்டு வரும். கணவன் மனைவி உறவு 'டாம் அண்ட் ஜெர்ரி' போல இருக்கும். கிரக வழி பாடு மூலம் மன அமைதி கிடைக்கும்.



**மிதுனம் :** இந்த ராசி அன்பர்கள், புது செருப்பு வாங்க வேண்டியிருக்கும் அல்லது வண்டிக்குப் புது டயர் மாற்ற வேண்டியிருக்கும். அந்த அளவுக்கு அலைச்சல் உங்களை அரை ஆளாகப் பண்ணிவிடும். சனி 12ல் ,என்றாலும் வக்ரம் என்பதால் நலமே புரிவார் என நம்பலாம். வார பிற்பகுதியில் நன்மைகள் தென்படும். நல்லவர்கள், முக்கியஸ்தர்கள் தொடர்பு ஏற்படும். எதிர்ப்புகள் குறையும். பெண்களுக்குச் சாதா வாரம். உற்சாகமில்லாத சோதா வாரம்.



**கடகம் :** அ.தி.மு.க. - பா.ஜ.க. இடையே துளிர்விட்டிருக்கும் புதிய உறவு போல, உங்களுக்கும் புதிய நட்புகள் கிடைக்கும். அதனால் முக்கியமான எண்ணங்கள், திட்டங்கள் நிறைவேறும். கலைத் துறையைச் சேர்ந்தவர்களுக்குச் சுபிட்சமான வாரம். வியாபாரிகள் வளர்ச்சி காண்பார்கள். மாணவர்களுக்கு உழைப்புக்கேற்ற பலன் நிச்சயம் கிடைக்கும். 12ல் ராகு, 8ல் செவ்வாய் 'தர்ணா' செய்வதால், சிறு விபத்து ஏற்படலாம். எச்சரிக்கை!



**சிம்மம் :** ராகு, புதன், சுக்ரன் ஆகியோரது சஞ்சாரம், ப்ரைம் டைமில் இடம் பிடித்துவிட்ட, டீ.வி. ஸ்லாட் போல சந்தோஷமாக இருப்பதால், சர்வம் சௌக்கியம்! நண்பர்கள் உதவி புரிவார்கள். மாணவர்கள் திறமை வெளிப்படும். பெண்கள் நோக்கம் நிறைவேறும். கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ் துறைக்காரர்களுக்கு நல்ல நேரம் கூடி வரும். 5ல் கேதுவும், 11-ல் குருவும் வக்கிரமாக இருப்பதால், மக்கள் நலன் பாதிக்கப்படலாம். உஷாராக இருக்கவும். ஸ்ரீசத்ய சாயிபாபாவின் அருள் நன்மை தரும்.



**கன்னி :** சபரிமலையின் பதினெட்டாம் படியில் தேங்காய் உடைக்க பக்தர்களுக்கு ஏற்பட்டிருக்கும் தடை போல, உங்கள் முன்னேற்றத்திலும் சிறு சிறு தடைகள் ஏற்படும். அரசியல்வாதிகளுக்கு அளவோடு வெற்றி கிடைக்கும். வார பிற்பகுதியில் துணிச்சலோடு வெற்றியும் அலைச்சலோடு அனுகூலமும் சேர்ந்தே வரும். கேது, சனி, புதன் சஞ்சாரம் ரொம்ப சுமாராக இருப்பதால், உடல் நலம் பாதிக்கப்படும். தாய் வழி உறவினர்களால் சங்கடம் ஏற்படும். கவனமாக இருங்கள்.

## கஜானா காலி ஆனபோது...

### பொங்கல் பரிசுப் போட்டி!

'கஜானா காலி' என்று அறிவித்துள்ள தமிழக அரசு, நிதி நிலையைச் சீர்ப்படுத்துவதில் மும்முரமாக உள்ளது. உங்கள் வீட்டில் நிதி நெருக்கடி ஏற்பட்டு தவித்து, பின் சமாளித்த அனுபவம் உண்டா? சுருக்கமாக, சுவையாக எழுதி அனுப்புங்கள். ஐடியாவுக்கு ஏற்ற பரிசு நிச்சயம்!

*போட்டி என்றால் விதிமுறைகள் இல்லாமலா?*

- அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதவும்.
- 24.12.2001க்குள் வந்து சேர வேண்டும்.
- 'கஜானா காலியானபோது...' என்று முகவரியில் குறிப்பிடவும்.
- ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

# நடக்கும்!



எழுத்தாளர் ஷங்கர நாராயணனுக்கு (சிம்மம்) நண்பர்கள் உதவி எக்கச்சக்கமாய்க் கிட்டுமாம்!



**துலாம் :** நண்பர்களும், உறவினர்களும் ரொம்ப உதவிகரமாக இயங்குவதால், கூடுதலாக இரண்டு கை, கால் முளைத்த உணர்வுடன் திகழ்வீர்கள். பண நடமாட்டத்துக்குக் குறைச்சலே இல்லை. பெனாசீர் பூட்டோவின் திடீர் இந்திய விஜயம் போல, உங்களுக்கும் திடீர் பயணங்கள் வாய்க்கும். பெயர், புகழ், அந்தஸ்து எல்லாமே ஜோதிகாவின் மார்க்கெட் போல ஸ்டெடியாக டாப்கியரிலேயே இருக்கும். தான தருமம், பக்தி, ஞான மார்க்கம் என உயர்ந்த சிந்தனைகள் ஆக்ரமிக்கும். பெரியவர்களின் ஆசிர்வாதம் பரிபூரணமாகக் கிடைக்கும்.



**விருச்சிகம் :** சனிபகவான்ஜி 7ல் வக்கிரம் அடைந்தால், குரு பகவான்ஜி 8ல் வக்கிரம் அடைந்திருக்கிறார். இது போதாதா யதேஷ்டம்! நாயுடு காருவைக் கலக்கிக் கொண்டிருக்கும் நக்ஸலைட் பிரச்னை போல உங்களைச் சங்கடப்படுத்திக் கொண்டிருந்த பிரச்னைகள் காணாமல் போகும். கணவன்-மனைவி உறவு நிலை சீராக இருக்கும். தொழிலாளர்கள், வல்லவர்கள் சகவாசத்தைப் பலப்படுத்திக் கொள்வீர்கள். டயட்டில் இருந்து சிக்கென ஆகியிருக்கும் நடிகை மீனா போல ஆளே புதுசா ஆயிடுவீங்க.



**தனுசு :** ஏழைகளுக்கு பச்சை நிற ரேஷன் அட்டை, மற்றவர்களுக்கு நிலம் நிற ரேஷன் அட்டை என்ற புதிய திட்டம் பயன் தருமோ இல்லையோ, உங்களுக்குச் சிவப்பு நிற பொருள்கள் நிச்சயம் நன்மை தரும் சுக்கிர பலத்தால் கலைத் துறையினர் சாதனை செய்வீர்கள். செவ்வாய் 3ல் உலவுவதால், உங்களுடைய பராக்கிரமம், பளிச்சிடும். இந்த ராசிக்காரப் பெண்களுக்கு உற்சாகம் ததும்பி வழியும். சுதந்திரக் காற்று சுவாசிக்கும் ஆப்கானிஸ்தான் பெண்கள் போல ஏகத்துக்கு மகிழ்வீர்கள். ஸ்ரீ காஞ்சி காமாட்சியைப் பிரார்த்தியுங்கள். கணக்கில்லாத நன்மை கிடைக்கும்.



**மகரம் :** நடுக்கமும், டென்ஷனும் குறைந்து கொஞ்சம் ரிலாக்ஸ்டாகி இருக்கும் முதலமைச்சர் பன்னீர் செல்வம் போல, உங்களுக்கும் பதற்றமில்லாத சூழ்நிலை அமையும். இதனால் தொழில் நுட்பத் திறமை அதிகரிக்கும். எண்ணங்கள் நிறைவேறும். திட்டங்கள் 'ஹால்மார்க்' முத்திரை பெற்ற தங்கம் போல தகதகக்கும். மக்களால் அளவான நன்மை ஏற்படும். ஸ்பெகுலேஷன் சுமாரான லாபம் தரும். கொடுக்கல் - வாங்கலில் அப்படியொன்னும், புரளாது. வீண் வம்பு சண்டை, தலைப்பாகை கட்டிக் கொண்டு வரும். கவனம் தேவை.



**கும்பம் :** கிரக சஞ்சாரத்தைப் பொறுத்தவரை, பிரச்னை ஏதுமில்லை என்பது ஆறுதலான விஷயம்தான். அரசு விவகாரங்கள் அனுகூலமாக இருக்கும். வியாபாரிகள் வளர்ச்சி அடைவார்கள். கணிதம், எழுத்து, விஞ்ஞானம் போன்ற துறைக்காரர்களின் நிலை, மேட்டூர் அணை நீர்வரத்து போல உயரும். புனித காரியங்களில் மனம் லயிக்கும். வியாபாரிகள் வளர்ச்சி காண்பார்கள். மக்களின் போக்கு மனச்சஞ்சலத்தை ஏற்படுத்தும். வயிறு சம்பந்தமான உடல் உபாதை ஏற்படும். ஜாக்கிரதை.



**மீனம் :** கிரக சஞ்சாரம், அனுகூலமில்லை என்பதால், பூரணமான பலன்கள் காண முடியாத நிலை ஏற்படும். குடும்பத்தில் அமைதி குறையும். உடன் பிறந்தவர்களால் குழப்பம் ஏற்படும். பொருளாதார நிலை மந்தமாக இருக்கும். ஆந்த்ராக்ஸ் பீதி போல மனத்தில் ஏதேனும் பயம், சஞ்சலம் ஏற்படும். 16ம் தேதி முதல் சூரியன் 10ல் சஞ்சாரித்ததும், தமிழக அரசு நிதி நெருக்கடி நிலைமை போல், இலேசாக மாறி, புதிய திருப்பம் ஏற்படும். சுபிட்சமான போக்கு தென்படும். தான, தருமம் தெய்வ பிரார்த்தனை நலம் தரும்.

**அக்னிசர்மா பக்கம்**

**டிசம்பர் 12 முதல் 18 வரை**

# வெளிச்சம்

அருண் சரண்யா

சுந்தர்ராஜன் காலை ஐந்து மணிக்கு எழுந்து கொண்டார். படுக்கையிலிருந்து எழுந்தது அப்போதுதான் என்றாலும் பத்து நிமிடங்களுக்கு முன்பே விழிப்பு வந்து விட்டது.

வாசலில் பிரகதி தண்ணீர் தெளிக்கும் ஒலி கேட்டது. மார்கழி என்றில்லை, மற்ற பதினொன்றிலும் கூட இந்த ஐந்து மணிக்கு எழுந்து கோலம் போடுவது அவளுக்குப் பழக்கமானதுதான். இருவருக்கும் உள்ள ஒரு ஒற்றுமை இந்தக் காலை வேளை எழுந்திருத்தல். இன்னொன்று இசை. அவர் மிருதங்க வித்வானென்றால் பிரகதி கடம் வாசிக்கிறாள்.

பல்லைத் தேய்த்துக் கொண்டு வாக்கிங் போகத் தொடங்கினார். ரத்த அழுத்தம் எகிறி இருக்கிறது. நடக்காவிட்டால் சர்க்கரை அதிகமாகிவிடுமாம். எனவே கட்டாய நடை.

அதே தெருவின் எட்டாம் எண் வீட்டில் இருக்கும் சாந்தா 'நமஸ்காரம் மாமா' என்றாள். இருபது வயதிருக்கும். கல்யாணமாகாத பெண்களுக்கே இருக்கும் ஒருவித அழகு உண்டு. ஆனால் அவள் போடும் கோலத்தைப் போலவே அவள் குரலும் கோணல்மாணல்தான். போன வருடம் கொலுவுக்கு வந்து அவள் பாடியபோது 'எதற்காக இந்தப் பெண் இந்தப் பெரிய கீர்த்தனையைப் பாடணும்? சின்னதாக ஏதாவது நாமாவளியைப் பாடக் கூடாதா?' என்று மனத்திற்குள் கோபப்பட்டார்.

பிரகதி விஷயத்தில் வேறுமாதிரி விமரிசனங்கள். 'பொம்மனாட்டிக்குக் கடமா?' என்றவர்கள் உண்டு. 'பானை பிடித்தவள் பாக்கியசாலி'ன்றது உங்க விஷயத்திலே நிஜமாயிடுத்து' என்று பரிகசித்தவர்கள் உண்டு. கச்சேரி செய்து விட்டு வந்தால் கைகளெல்லாம் கன்றிப் போய்விடும் அவளுக்கு. 'தேவையா உனக்கு?' என்பார். ஆனால் அவளது வருமானமும் வேண்டியிருக்கிறது.

வேண்டியிருக்காதது அவளுக்குக் கிடைக்கும் புகழ். இப்போதுதான் திவ்ய வைணவத் தலங்களைவிட எண்ணிக்கையில் அதிகமாக சானல்கள் இருக்கிறதே. ஒவ்வொன்றிலிருந்தும் வந்து அவளைப் பேட்டியெடுத்தார்கள். கடம் வாசிக்கும் பெண்கள் குறைவென்பதால் அந்த வியப்பும், மீடியா வெளிச்சமும். போதாக்குறைக்கு பிரகதிக்கு முகக்களை வேறு. அவளைப் பேட்டியெடுத்துவிட்டு சம்பிரதாயமாக அவரிடமும் மைக்கை நீட்டுவார்கள். அல்லது 'பின்'மைக்கை அவரது சட்டையில் செருகிக் கொள்ளச் சொல்வார்

கள்.

நீங்க கூட ஒரு மிருதங்க வித்வான்னு மிஸஸ் பிரகதி சொன்னாங்க' என்றபடி அவர்கள் தொடங்கும் ஒவ்வொரு முறையும் தன் குருகுலம், தன் வித்வத் எல்லாம் அடுக்கடுக்காக நினைவில் எழும். தொண்டையைச் செருமிக் கொள்ளும்போது அவர் பயந்தமாதிரிக் கேள்விகளே வரும். 'உங்க மனைவி கடம் வாசிப்பது பத்தி நீங்க என்ன நினைக்கிறீங்க?', 'உங்களுக்கிடையே எந்த காம்ப்ளெக்ஸும் ஏற்பட்டதில்லையா?'

'பெருமையாகத்தான் இருக்கு. இசைன்றது எந்த வடிவத்திலே வந்தாலும் வணங்கப்பட வேண்டியதுதானே. இசை ரூபமான கடவுளே ஒரு பெண்ணான சரஸ்வதிதேவிதானே' என்றும் 'ஏன் ஏற்படணும்? அவளும் இசைத் துறையிலே மின்னுவது சந்தோஷமான சங்கதிதானே' என்றும் ஆயத்த பதில்களைத் தந்துவிடுகிறார். அதற்கும் முன்பே 'என் கணவரின் ஒத்துழைப்பு மட்டும் இல்லேன்னா நான் இந்த அளவு முன்னேறியிருக்க முடியாது. அவரும் இசைக் கலைஞராக இருப்பது என் பாக்கியம்' என்பதுபோன்ற பதிலை பிரகதி சொல்லியிருப்பாள் என்பது அவருக்குத் தெரியும்.

பிரகதிக்கு வேறுமாதிரி ஏக்கங்கள். 'அது ஏன்னே தெரியல்ல!' என்றாள் ஒரு நாள் நலிந்த குரலில்.

சுந்தர்ராஜன் கேள்வியாக அவளைப் பார்க்க, 'அதென்னங்க சம்பிரதாயம் வயலின், மிருதங்கம் அப்புறமாதான் கடம்னுட்டு? இன்னிக்குக் கச்சேரியிலே வயலின் வாசிச்சது ரொம்பச் சின்னப் பையன். அப்ப கூட அவனுக்கு மாலைமரியாதை செய்துட்டு அப்புறம்தான் எனக்கு.'

சுந்தர்ராஜன் பதில் பேசவில்லை.

'வெளிநாடு போற ட்ருப்பிலே கூட கடம்னாத்தான் சிக்கனம் பாக்கறாங்க. கேட்டா ஸ்பான்ஸர்கள் மிருதங்கமும் வயலினும் போதும்கறாங்களாம்.'

இதற்கும் விடை வராமல் போக, பிரகதி பாட்டுக்கு மௌனமாகத் தன் கைவிரல்களுக்கு ஆயின்ட்மெண்ட் போட்டுக் கொள்ளத் தொடங்கினாள்.

வெளிநாடு செல்லும் பாக்கியம் கிடைக்கட்டும் மேடையேறும் அதிர்ஷ்டமே கூட சுந்தர்ராஜனுக்கு அரிதாகத்தான் வாய்க்கிறது. முசுடு என்ற பெயர் இசை உலகில் எப்படியோ பரவிவிட்டது. எப்படிப் போக்க?

ஒருமுறை பிரபல திரைப்பட இசை



யமைப்பாளர் கூப்பிட்டதாக அவரது உதவியாளர் தகவல் அனுப்பினார். ஆனால் அவர் சென்று ஒலிப்பதிவிற்காக அரை மணி நேரம் காத்துக் கொண்டிருக்கும்போது பழைய பிரபல மிருதங்க வித்வான் மைசூர் கச்சேரியை முடித்துக் கொண்டு எதிர்பாராத வகையில் அங்கு வேகமாக வந்து சேர்ந்துவிட, 'சாரி' என்று சொல்லிவிட்டு சுந்தர்ராஜனை வழியனுப்பிவிட்டார்கள். கையில் பணமும் கொடுத்தனுப்பினார்கள். ஒரு கச்சேரிக்குப் பாடகர்கள் அவருக்கு வழக்கமாகக் கொடுக்கும் தொகை அது. அதாவது சொற்பப் பணம்!

கச்சேரிகளும் அதற்களிக்கப்படும் சன்மானமும் குறைந்துவிட, ட்யூஷனில் கிடைக்கும் வருமானத்தை அதிகம் நம்பவேண்டிய நிலை. பிரகதிக்கும் புகழ் கிடைத்ததே தவிர பணம் அல்ல.

வீட்டுச் சொந்தக்காரர் 'அடுத்த மாசத்திலிருந்தாவது இருநூறு ரூபாய் உசத்தி தரணும்' என்று ஐந்து மாதங்களாகச் சொல்லி வருகிறார். ஒவ்வொரு முறையும் தொனியில் வன்மை கூடி வருகிறது. போனமுறை, கூடவே 'உங்களாலே முடியல்லேன்னா...' என்று இழுத்தார். அவர் தொண்டையில் நின்ற மீதி வாக்கியம் 'கொடுக்க வேண்டாம்' என்பதாக நிச்சயம் இருந்திருக்காது.

போதாக்குறைக்கு அரசின் கஜானா வேறு இப்போது பார்த்து காலி! தன்னால் முடிந்த ஒரே விஷயமான விலையேற்றத்தை அது செய்துவிட்டது. என்ன செய்ய? ஒரு பாக்கெட் ஆவினைக் குறைக்கலாம், தினமும் அரைமணிநேரம் மின்சார விசிறி இல்லாமல் வெளியிலும் புழுங்கலாம், இரு கவளம் சாதம் குறைவாகச் சாப்பிடலாம், ரெண்டு பஸ் நிறுத்த தூரத்தை நடந்தே கடக்கலாம். ஆனால் பற்றாக்குறை அதிகமாவதை அப்போதும் தடுக்க முடியாதே.

ஆனால் பிரகதியால் மட்டும் எப்படி (அவ்வப்போது தனது ஆதங்கங்களை வெளிக்காட்டினாலும்) இவ்வளவையும் சிரித்துக் கொண்டே ஏற்க முடிகிறது?

எல்லாவற்றையும்விட தன் கலைக் கர்வம் சிதைக்கப்படுவதைத்தான் சுந்தர்ராஜனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

பல மாணவர்கள் 'ஏதோ தொலையட்டும்' என்பதுபோல்தான் மிருதங்கம் கற்றுக் கொள்கிறார்கள். ஒருமுறை குமரனின் வீட்

டுக்குள்ளே நுழையும்போது 'உன் பிடுங் கலாலேதான் இந்த மிருதங்கத்தைக் கட்டிக் கிட்டு அழறேன். எனக்கு இன்னிக்கு ப்ராக் டிகல்ஸ் ரெகார்ட் எழுதணும் தெரியுமா? என்று அவன் அம்மாவிடம் கத்திக் கொண்டிருந்தான். அவரைப் பார்த்தபோது கூட அவன் முகம் அப்படியொன்றும் சிறுத்துவிடவில்லை. 'கேட்டால் எனக் கென்ன போச்சு' என்ற இமிர்.

'இன்னும் ஆதி தாளத்திலேயே இருக்கிங் களே சார். எப்ப மேல கத்துக்கறது? எப்ப ஸ்ரீராமுக்கு அரங்கேற்றம் வச்சுக்கிறது?' என்று சற்றே அதிகாரமாகக் கேட்கும் ஆடிட் டர் மாமியிடம் 'சொல்லிக் கொடுக்கும் பாடத்தையே சரியாக வாசிக்காமல் உங்க பையனின் விரல் தடுமாறும்போது எப்படி அடுத்தடுத்து மேலே போக?' என்று பளிச் சென்று சொல்ல முடிவதில்லை. பையனைத் திருத்துவதைவிட வாத்தியாரை மாற்றிவிட் டால்?... போதாக்குறைக்கு ஒரு சீ......னியர் வித்வானுக்கு அவர்கள் தூரத்து உறவு என்பதைப் போன வாரம்தான் கேள்விப் பட்டார்.

'அமெரிக்காவுக்குப் போனால் கூட மிருதங்கம் சொல்லிக் கொடுத்து நிறைய பக்க வருமானம் பார்க்கலாம்' என்ற தூண்டில் களையெல்லாம் வீசி மாணவர்களை இருத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதுவும் பத்தாவது மற்றும் ப்ளஸ் டூ மாணவர்கள் என்றால் கூடுதல் திகில். 'இந்த வருஷம் வேணா கொஞ்சம் கேப் கொடுக் கலாமே' என்று அவர்கள் பெற்றோர் கூறிவிடுவார்களோ என்ற பயம்.

சோர்வு அதிகமாக இருந்தது. வாக்கிங் தூரத்தைக் குறைத்துக் கொண்டு வழக்கத் தைவிட சற்று சீக்கிரமாகவே வீடு திரும்பி னார். விடியத் தொடங்கியிருந்தது. சாந்தா, அவர்கள் வீட்டிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்தாள். அவள் முகத்தில் அலாதி திருப்தி தென்பட்டது.

'இந்தப் பொண்ணு எங்க இந்த வேளை யிலே?' என்று கேட்டார் வீட்டுக்குள் நுழைந்தவுடன்.

'அவ தெனமுமே இந்த வேளையிலே வருவாளே. நீங்க வாக்கிங் போனவுடனே வருவா. இங்கே வந்து நம்ம பூஜை ரூமிலே உட்கார்ந்து தனக்குத் தெரிஞ்ச பாட்டைப் பாடுவா. நானும் கூட சேர்ந்து கடம் வாசிப் பேன்'

அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. முன்தினம்தான் பிரகதி தன் கைகளுக்குப் ப்ளாஸ்திரி ஒட்டிக் கொண்டு ஒரு கச் சேரிக்குக் கடம் வாசித்திருந்தாள். அவ்வளவு வலி என்றவள் இப்போது? 'ஓ, தினமும் ரெண்டு வித்வாசினிகளும் ஒரே மேடை யிலே கச்சேரி பண்றேளா? சேர்ந்திசையா? ஜுகல்பந்தியா?' என்றார்.



''சே! நீயெல்லாம் ஒரு போலீஸாய்யா?''

''என்ன ஸார் பண்றது... நானும் என்னென்னவோ தின்னு பார்க் கிறேன்... தொப்பை விழவே மாட் டேங்குது...!

— உ. ராஜாஜி

அவரது கிண்டல் பிரகதிக்குப் புரிந்தது. 'ரொம்ப சிரத்தையா பக்தியாப் பாடறா. குரல பிசிறினாலும் ராகம் தவறினாலும் கூட எனக்கு அது தப்பாத் தோணல்ல. பக்தின்றது பரவசம் இல்லையா? அவன் இருக்கான்றது தெரிஞ்சாலும் அதை தினமுமே உணருவது எவ்வளவு அற்புதம் தெரியுமா? சாந்தா வோட பாட்டு எனக்கு தினமும் ஒரு ஸ்பூன் டானிக் சாப்பிட்டமாதிரி' என்றாள்.

அடுத்த நாளிலிருந்து அந்தக் 'கச்சேரி'யில் மிருதங்கமும் இடம்பெறப் போவது அவளுக்கு அப்போது தெரியாது. ○



## சுமி சூப்பர் மார்க்கெட்

டெங்கு ஜுரத்துக்குப் போட்டியா பரவியிருக்கு விருது ஜுரம். வாங்கற ஜுரம்தான் வித்வான்களை வாட்டுதோன்னு பார்த்தா குடுக்கற ஜுரம் அதைக் காட்டிலும் அதிகமா சபாக்களை ஆட்டிப் படைக்குது. ஒரு விருதோ பரிசோ ஓரிரண்டு சபாக்கள் கொடுத்திட்டிருந்தது போய் ஒவ்வொரு சபாவும் ஒரே நாள்ல ஒரு டஜன் பரிசோ விருதோ கொடுக்கறேன்னு ஆரம்பிச்சாச்சு. விருதுக்கும் மதிப்பில்லை, விழாவுக்கும் மதிப்பில்லை. விளைவு...? நித்யஸ்ரீ மாதிரி ஒரு பாபுலர் ஆர்டிஸ்ட்டுக்குப் பட்டமும் பாராட்டும் கொடுக்கற விழாவிலகூட ஆறு மணிக்கு அரங்கம் காலி! கார்த்திக் பைன் ஆர்ட்ஸ்காரங்க ஒரு மணி நேரம் லேட்டா நிகழ்ச்சியை ஸ்டார்ட் பண்ணினதாலே கூட்டம் கொஞ்சம் சேர்ந்தது.

தலைமை வகித்த தலைமைச் செயலர் சங்கர், தமிழ்ப்பாட்டு நிறைய பாடணும்னு நித்யஸ்ரீயை மேடைல வைச்சுக்கிட்டு கார்த்திக் பைன் ஆர்ட்ஸ்ல பேசினது பெரிய ஜோக். அதிக தமிழ்ப்பாட்டு பாடற ஆர்டிஸ்ட்னு ஏற்கெனவே அம்மணிக்குப் பேர் வந்தாச்சு! பைன் ஆர்ட்ஸோ தமிழிசை விழாவே தனியே நடத்தி, தமிழிசை வேந்தர் பட்டம் வேற தருது!

பட், நித்யஸ்ரீயோட ஏற்புரை தமிழில்லை. மணிப் பிரவாளம் - சுமியளவுக்கு இல்லைன்னாலும் எ குட் ப்ரபோர்ஷன் அஃப் இங்க்லிஷ். சீசனின் சிறந்த பாடகருக்குப் பரிசு கொடுக்க அவர் நன்கொடை தந்து வைப்பு நிதி ஏற்படுத்தினதைப் பாராட்டணும்.

தமிழ்ப்பாட்டு டாபிக்ல இருக்கிறபோதே இன்னொரு விஷயமும் சொல்லிடறேன் - இப்போல்லாம் நிறைய சப்-ஸ்டாண்டர்ட் தமிழ் லிரிக்ஸ், கச்சேரி மேடைக்கு ஓடி வந்துடுது. பாடறவங்க எல்லாம் சேர்ந்து ஒரு சங்கப் பலகை நிறுவி தரக்கட்டுப்பாடு பண்ணலைன்னா தமிழுக்கே அவப் பெயர் வந்தாலும் வந்துடும்!

"இதுக்குத்தான் அப்பவே சொன்னேன், தியாகராஜர், தீக்ஷிதர், சியாமா சாஸ்த்ரி பாட்டு பாடினாலே போதும்னு..." அப்படின்னு யாராவது ஆரம்பிச்சுடுவாங்க!



• கார்த்திக் பைன் ஆர்ட்ஸில்...

• படம் : ஸ்ரீனிவாசன்

கமிங் பாக் டு நித்யஸ்ரீ... இளம் கலைஞர் ஒருத்தருக்குப் பட்டம் கொடுக்க ஆரம்பிச்ச கார்த்திக் பைன் ஆர்ட்ஸ் இப்போ அதே விழாவிலே நாட்டியப் பேரொளியும் கொடுத்து சரபோஜி மன்னருக்கு ஸ்டாம்ப் வெளியிட்டு, செயலாளர் கார்த்திக் ராஜகோபாலோட ஐம்பது வருட கலைச் சேவையையும் பாராட்டி... கூட்டாஞ்சோறு பொங்கியிருக்க வேண்டாம். ஒரு இளம் வித்வானுக்குக் கிடைக்க வேண்டிய தனி முக்கியத்துவம் குறையுதுன்றது ஒரு பக்கம் இருக்க, நாரத கான சபாவோட பிரும்மாண்டமான மேடை முழுக்க ஸ்பீக்கர்ஸ். எல்லாருக்கும் அறிமுகம், சால்வை... போகிற போக்கில் நம்மையும் கூப்பிட்டு ஒரு சால்வையைப் போத்திடுவாங்களோன்னு பயந்துபோய்

# மியோகோவுக்கு மலர்ச்செண்டு!



* மியோகோ

ஜூட் விடும்படியாகிடுச்சு!

கொஞ்சம் ஜப்பான் பக்கம் எட்டிப் பார்க்கலாமா...? தங்களோட கலாசாரத்தைப் பத்தி ரொம்ப பெருமிதப்படற ஒரு நாடு... இப்போ அங்கே ரொம்ப பேசப்படற விஷயம் பெண்கள் வேலைக்குப் போகற சப்ஜெக்ட்தான்! நம்ம நாட்டுல இது அரதப் பழசாயிடுச்சேன்னுவீங்க... ஜப்பான்ல பெண்களுக்குச் சம வேலை வாய்ப்புச் சட்டம்னு ஒண்ணு 1986ல்தான் கொண்டு வந்திருக்காங்க. அதுக்கப்புறம்தான் ஆண்களுக்கு இணையான பொறுப்புகள் பெண்களுக்குக் கிடைக்க ஆரம்பிச்சிருக்கு. 'பசிஃபிக் ஃப்ரெண்ட்'ன்ற ஜப்பானிய பத்திரிகைல ஆறு ஜப்பானிய பெண்கள் பேட்டி கொடுத்திருக்காங்க - எல்லாருமே பொறுப்பான பதவிகள்ல இருக்கறவங்க. இவங்கள்ல யாருமே ஆணாதிக்கம் பத்தி புகார் பண்ணலை; கடுப்படிக்கலை, கசப்புணர்வோட பேசலை...

அந்த ஆறு பேர்ல மியோகோ யாகியோட கதை ரொம்ப சுவாரஸ்யம்.

வேலைக்கு ஆள் பொருத்திக் கொடுக்கற தனியார் நிறுவனத்துல மூணு வருஷம் அனுபவம் மியோகோவுக்கு. அதுக்கப்புறம் சொந்தமா அதே பிஸினஸை ஆரம்பிச்சிருக்காங்க... அப்போதான் பிரச்னைகளும் ஆரம்பிச்சிருக்கு. தனியார் பிஸினஸ் - அதுவும் ஒரு சின்ன பொண்ணு வந்து தன் தகுதியைப் பத்தி தானே பேசினா யார் காது குடுத்துக் கேப்பாங்க...! எல்லாரும் சிரிச்சிட்டுப் போய்ட்டாங்களாம்.

"விடாப் பிடியா என்னை மாத்திக்கிட்டு முன்னேறினேன்"ன்னு சொல்றார் மியோகோ.

பழைய கம்பெனி மூலமா கிடைச்ச தொடர்புகளைப் பயன்படுத்திக்கறதை நிறுத்தினாராம். ஸ்கர்ட் போட்டுக்கிட்டு வேலைக்குப் போய்க்கிட்டிருந்தவர் பிசினஸ் ஸூட் அணிய ஆரம்பிச்சாராம். "நான் பாட்டுக்கு மினி ஸ்கர்ட் போட்டுட்டுப் போனா என்கூட பேசறவங்க தொனியே மாறிடுது." ஆணுக்குச் சமமா என்னை மத்தவங்க மதிக்கணும்னு கேட்டுக்கறப்போ என் தோற்றமும் அந்த கௌரவமான சமத்துவத்தை மத்தவங்க மனசுல வரவழைக்கத் தகுந்ததா இருக்கணும்"ன்னு சொல்றார்.

"சட்டம் மாறியிருக்கிறது உண்மைதான். ஆனா ஆண் - பெண் பேதம்ன்றது இன்னமும் நம்மை அறியாம மனசிலே இருந்துகிட்டிருக்கு.. 'ஆணாயிருந்திருந்தா கல்யாணம், குழந்தைன்ற விஷயங்கள்ல நமக்குப் பொறுப்பு குறைவாயிருந்திருக்குமே'ன்னு சில நேரம் தோணுது. ஆனா அதுவே சமத்துவ உணர்வுக்கு விரோதமான எண்ணம்னு என்னை நானே திருத்திக்க வேண்டியிருக்கு.. பெண்கள் பாடு இன்னும் கொஞ்சம் நாளைக்குக் கஷ்டம்தான். ஆனா எங்களை நாங்க நிரூபிச்சாகணும்னா எடுத்த காரியத்துல ஜெயிச்சு காட்டணும்."

'தட்ஸ் த ஸ்பிரிட்'னு இங்கேருந்து மானசிகமா ஒரு மணமான மலர்ச்செண்டு அனுப்பியிருக்கேன் மேடம் மியோகோவுக்கு!

- சுமி

ஐ.நா. சபையின் நான்காவது உலகப் பெண்கள் மாநாடு பெய்ஜிங்கில் 1995ம் ஆண்டு நடந்தது. தத்தம் நாட்டில் பெண்களுக்கு எதிராக இருக் கக்கூடிய சட்ட திட்டங்களை மாற்றுவதாக ஒப்புக் கொண்டு சென்ற அரசுகள் மறுபடியும் நியூயார்க்கில் 'பெய்ஜிங் +5' என்ற மாநாட்டில் 2000மாவது ஆண்டில் சந்தித்தன. Equality Now என்ற அமைப்பு பெய்ஜிங் வாக்குறுதிகளை நிறைவேற்றுவதில் எந்தெந்த அரசுகள் எந்த நிலையில் உள்ளன என்பதைத் தொடர்ந்து ஆராய்ந்து வந்தது. இன்னும் 45 நாடுகளில் பெண்களுக்கு எதிரான பாரபட்சமான சட்டங்கள் நடைமுறையில் இருந்து வருவதை இந்த அமைப்பு அறிக்கையாகத் தயாரித்தது.

அறிக்கையை வெறுமே காகிதத்தில் எழுதி சமர்ப்பிப்பதைவிட, பார்ப்பவர்களை உலுக்கி நிமிர்ந்து உட்கார வைக்கும் விதமாக ஒரு வலுவான நாடக நிகழ்வாக தயாரித்தால் என்ன? என்ற யோசனை Equality Nowன் இயக்குநர் நியூவிர்த்துக்குத் தோன்றியது. இப்படித் தோன்ற காரணம் அவருக்குக் கிடைத்த பிறந்த நாள் பரிசுதான். அன்று அவரது அலுவலக சகாக்கள் அவரை ஒரு நாடகத்துக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கேதான் அவர் சாரா ஜோன்ஸை சந்தித்தார். அன்றைக்கு நியூயார்க் நகரத்து மக்கள் எட்டு பேரின் வாழ்க்கையைத் தனி நபர் நாடகமாக சாரா நடித்துக் காட்டியதைப் பார்த்தார்.

வெவ்வேறு நாடுகளில் பெண்களுக்கு எதிரான சட்டங்களால் பெண்கள் படும் துயரங்கள், Women Cannot Wait (பெண்களால் காத்திருக்க முடியாது) என்ற நாடகமாக உருவானது இப்படித்தான்.

நாடகத்தில் இந்தியா, ஜப்பான், கென்யா, ஜோர்டான், பிரான்ஸ், உருகுவே, இஸ்ரேல் அமெரிக்கா ஆகிய எட்டு நாடுகளின் பெண்கள் - நர்ஸ், டீச்சர், இசைக் கலைஞர், 13 வயது சிறுமி, டீன் ஏஜ் பெண், தாய், சகோதரி, மனைவி - தாங்கள் சட்டங்களால் அனுபவிக்கும் கொடுமைகளைச் சொல்லி ஏன் சட்டங்கள் ஆணுக்கு ஒன்றாகவும் பெண்ணுக்கு வேறாகவும் இருக்கின்றன என்ற கேள்வியை எழுப்புகிறார்கள்.

அத்தனை அசல் பாத்திரங்களின் உணர்வுகளையும், தாம்

# பெண்களால்

### நாடகத்திலிருந்து சில பகுதிகள்

1. இந்தியா :

*என் பெயர் பிரவீன். எனக்குக் கல்யாணம் ஆகி 29 வருடங்கள் ஆச்சு. என் கணவன் பொதுவாக என்னையும் குடும்பத்தையும் நன்றாகக் காப்பாற்றினான் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் கல்யாணம் ஆன முதல் நாளிலிருந்து தினமும் அவனுடன் பாலுறவுக்கு என்னைக் கட்டாயப் படுத்தினான். நான் நர்ஸாக வேலை பார்க்கும் மருத்துவ மனைக்கு முரட்டுத்தனமான பாலுறவால், பாதிக்கப்பட்ட பெண்கள் காயங்களுடன் வரும் போதெல்லாம் உள்ளுக்குள் அமைதியாக விம்முவேன். அவர்களுக்குச் சிகிச்சையளிக்கும்போது என் இரவுகளும் என் நினைவுக்கு வரும். இப்போது இவ்வளவு வருடங்கள் கழித்து, என் பிள்ளைகள் பெரியவர்களாகி தனியே சென்றுவிட்டதால், என் கணவர் திரும்பவும் என்னைத் தினமும் தொல்லைப்படுத்துகிறார். இதனால் நானும் ஒரு நாள் மற்ற பெண்களைப் போல மருத்துவமனைக்குச் செல்ல நேர்ந்தது. அங்கே என்கூட வேலை பார்த்த எல்லாருக்கும் நான் அனுபவிக்கும் வேதனை தெரிந்தது. தொடர்ந்து இந்தக் கொடுமையுடன் வாழ்வது என் உடலை, மனத்தை பாதித்தது. இருபத்தொன்பது வருடங்களுக்குப் பிறகு என் மண வாழ்க்கையை விட்டு நான் வெளியேறிவிட்டேன். எனக்கு வயதாகிவிட்டதால் நான் கிறுக்குத்தனமாக நடந்து கொள்வதாக என் கணவர் சொல்கிறார். என் பிள்ளைகளிடம் போய் என் வேதனையை நான் எப்படி வெளிப்படையாகச் சொல்வேன்? என்னைப் போல எத்தனையோ பெண்கள் மனசுக்குள் புழுங்கிக் கொண்டிருக்கலாம். ஏன், உங்களுக்குத் தெரியாமல், உங்களுடைய அம்மா, மகள்கூட இந்தக் கொடுமையை அனுபவித்துக் கொண்டிருக்கலாம். இதற்குத் தீர்வுதான் என்ன?*

ஒருவராகவே, ஒரே இடத்தில் நின்றபடியே, வெவ்வேறு ஆங்கில உச்சரிப்பில் வெவ்வேறு பாவங்களுடன் தொடர்ந்து 50 நிமிடங்களுக்கு வெளிப்படுத்திய சாரா ஜோன்ஸின் நடிப்பு - அது நடிப்பு அல்ல வெளிப்பாடு என்று சொல்ல வேண்டும் - மிகவும் சிறப்பாக இருந்தது. ஒரே ஒரு சின்ன ஸ்கார்ஃபை மட்டுமே அவர் பயன்படுத்தினார். கைகளைச் சுற்றி, கழுத்தைச் சுற்றி, முக்காடாகத் தலையைச் சுற்றி, தோளில் துப்பட்டாவாக, சின்ன துணி பொம்மையாக அதைப் பயன்படுத்தினார். சாரா ஜோன்ஸ் + சின்ன ஸ்கார்ப் + எட்டு விதமான ஆங்கில உச்சரிப்பில் எட்டுவிதமான வாழ்க்கை அனுபவங்கள் எல்லாம், சென்னையில் 50 நிமிட நாடகம் முடிந்து சில நாளான பிறகும் இன்னும் உள்ளுக்குள் ரீங்கரிக்கிறது.

**-மா**

• சாரா ஜோன்ஸ்

# காத்திருக்க முடியாது!

2. ஜப்பான் :

நான் ஜப்பானிலிருந்து வந்திருக்கிறேன். என் நாட்டுல பெண்களுக்கு எதிரா இருக்கிற ஒரு சட்டத்தைப் பற்றி உங்களுக்குச் சொல்ல வந்திருக்கேன். நான் ஒரு இசைக் கலைஞரைத் திருமணம் செய்து கொண்டேன். திருமணத்துக்குப் பிறகு என் இசையாற்றல் பொழுது போக்காகத்தான் இருக்க வேண்டும் என்றான் என் கணவன். பெண் என்றால் அடக்க ஒடுக்கமாக இருக்க வேண்டும். குழந்தைகளைப் பெற்று வளர்க்க வேண்டும் என்று சொல்வான். நான் எந்த வேலை செய்தாலும் சரியாகச் செய்யவில்லை என்று குற்றம் கண்டு பிடிப்பான். பேஷண்ட்டாக இரு, என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டு எல்லாவற்றையும் பேஷண்ட்டாக பொறுத்துக் கொண்டு வந்த நான், கடைசியில் மருத்துவமனையில் பேஷண்ட்டாகச் சேர்க்கப்பட்டேன். என்னை அவன் அங்கே பார்க்க வந்தான். எதற்காகத் தெரியுமா? விவாகரத்து மனுவில் கையெழுத்து வாங்கத்தான். இப்போது அவன் திரும்பக் கல்யாணம் செய்து கொண்டு விட்டான். நானும் என்னிடம் அன்பாக இருக்கும் ஓர் ஆணைக் கண்டுபிடித்து விட்டேன். நாங்கள் திருமணம் செய்து கொள்ள நினைக்கிறோம். ஆனால் என்னுடைய ஜப்பானிய அரசு அதற்கு அனுமதி தர மறுக்கிறது. அரசாங்கச் சட்டங்கள் ஏன் ஆணுக்கு ஒரு மாதிரியாகவும் பெண்ணுக்கு இன்னொரு மாதிரியாகவும் இருக்கின்றன?

3. பிரான்ஸ் :

நான் ஒரு டீச்சர். என் தொழிலை மிகவும் நேசிக்கும் கடமை உணர்வு நிறைந்த டீச்சர். எங்கள் நாட்டில் ஒரு சட்டம் உண்டு. பெண்களை இரவு நேரப் பணிகளில் அமர்த்தக்கூடாது. பெண்கள் இரவில் தனியாக நடமாடும் அளவுக்கு ஸ்மார்ட்டானவர்கள் அல்ல, என்கிறது அரசு. தொழிலை நேசித்துக் கடமை உணர்வுடன் வேலை பார்க்கும் நான் அரசின் பார்வையில் ஒரு குற்றவாளி. ஏனெனில் நான் இரவு நேரப் பள்ளியில் பணி புரிகிறேன். ●

# சீரியல் கில்லர்

ஆண்டு 2012. ஏறக்குறைய எல்லாம் மாறிவிட்டது. ஒன்றைத் தவிர,

## காட்சி - 1

அஜய்குமாரின் ஆபீஸ். (அஜய், விலாசினி)

அஜய்: ஹே விலா! வாட் எ சர்ப்ரைஸ்!

விலா: என்ன சர்ப்ரைஸ்? நேத்து சாயங்காலம் பாத்தோம். இப்ப காலை 11 மணி.

அ: ராத்திரி பத்து மணிக்குக் கூட உன்னைப் பார்த்தேனே.

வி: பத்து மணிக்கு?

அ: பெரியம்மா சீரியல்லே. ஒஹ்! பதினஞ்சு வருஷமா எப்படி அதை ஓட்டு ஓட்டுனு ஓட்டறாங்களோ?

வி: ஆமா, பேவாட்ச் போல சீரியல், நூறு வருஷம் ஓட்டினாலும் நாக்கைத் தொங்கப் போட்டுக்கிட்டுப் பார்ப்பீங்க. நம்ம...

அ: ஓகே...ஓகே...!

வி: ரொம்ப முக்கியமான ஒருத்தரைப் பார்க்கப் போறோம்னு வரச் சொன்னீங்க?

அ: யெஸ்...யெஸ்... நம்ம கல்யாணத்துக்கு முன்னாடி நீ பிரதரை... என் ட்வின் பிரதரை மீட் பண்ணனும்.

வி: ட்வின்? இரட்டை? சொல்லவேயில்லையே?

அ: ம்... அவன் ரொம்ப புத்திசாலி. எல்லா எழுத்தாளர்களையும் கவிஞர்களையும் தூக்கி சாப்பிடக்கூடிய ஜாம்பவான்.

வி: வாவ்! அவரை மீட் பண்ணப் போறோமா? எங்க?

## காட்சி - 2

(மனநோய் மருத்துவ நிலையம். அஜய், விலாசினி, டாக்டர் பரணி, ராஜ்குமார்.)

டா: வெல்கம் மிஸ்டர் அஜய். ஹௌ ஆர் யூ?

அ: பைன். தாங்க்ஸ் டாக்டர்.

டா: யார் இந்த இலவச இணைப்பு?

அ: ஷி இஸ் விலாசினி. பெரியம்மா பொண்ணு.

டா: உனக்குப் பெரியம்மா கூட இருக்காங்களா?

அ: டாக்டர், பெரியம்மா சீரியல்ல பொண்ணா நடிக்கிற விலாசினி.

டா: ஐ சீ. எனக்கு சீரியல் கில்லர்களைப் பார்க்கவே நேரம் சரியாயிருக்கு.

அ: டாக்டர், ராஜ்குமார் எப்படி இருக்கான்?

டா: வெரி பேட் அண்ட் டேஞ்சரஸ். மத்தியானம் 12லேயிருந்து 4, சாயங்காலம் 7லிருந்து 10 மணி வரை ரொம்ப வயலன்ட்டா இருக்கான். பட் பெரிய புத்திசாலி, முரடன்.

அ: டாக்டர்..

டா: அவன் ஒரு மெகா சீரியலோஃப்ரினிக்! உங்க பாஷையிலே..

அ: தெரியும் டாக்டர். "சீரியல் கில்லர்!"

வி: வாட்? சீரியல் கில்லர்? கொலைகாரனா உங்க பிரதர்?

அ: நோ விலா..

டா: விலாசினி, சீரியல் கில்லர்னா கொலைகாரனில்ல. டீ.வி. மெகா தொடரைக் கொன்னுடுவான்.

வி: எப்படி?

டா: டீ.வி.யை அடிச்சு நொறுக்கிதான்! (அதற்குள் இரண்டு தடி காவலாளிகள் ராஜ்குமாரை அழைத்து வருகிறார்கள். குனிந்த மொட்டைத் தலையோடு கம்பிகளுக்கு அந்த பக்கம் வந்து அமருகிறான்.)

அ: ராஜு, நான் அஜய் வந்திருக்கேன்.

ரா: தெரியுது. கூட அது என்ன?

வி: 'அது' என்னவா?

அ: அது... நான் கட்டிக்கப்போறவ.

ரா: நினைச்சேன். பெண்கள் அனைவரும் நடிகைகள். நடிகைகள் எல்லோரும் பெண்களல்ல.

வி: ஏய், நான் நடிகைன்னு உனக்கெப்படி தெரியும்?

ரா: அஜய்! அத என்கிட்ட பேசச் சொல்லாதே.

வி: "அதுக்கு" ஒரு பேர் உண்டு. வி..லா..சினி...

ரா: அஜய், வழுக்கி பாதாளத்தில் விழப் போறே. முட்டாள்! முட்டாள்! நான்தான்

காப்பாத்தணும் போலிருக்கு.

அ: நான் அவளை நேசிக்கிறேன். நம்பறேன்.

ரா: ம்... எப்ப கல்யாணம்?

அ: 26 ஜனவரி.

ரா: நினைச்சேன். 26 ஜனவரி. அதே 26 ஜனவரி. உனக்கு ஞாபகமிருக்கா?

அ: 26 ஜனவரி? குடியரசு தினம்.

ரா: முட்டாள்! முட்டாள்! 26 ஜனவரிதான் அந்த சனியன் நம்ம வீட்டுக்குள்ள வந்த நாள்.

அ: ராஜு, வாழ்க்கைல சிலத மறந்திடணும்.

ரா: என்னால மறக்க முடியாது!

அ: அதான் உன்னோட இந்த நிலைமைக்குக் காரணம்.

ரா: என்னோட நிலைமைக்கு நான்தான் காரணமா அஜய்...?

அ: அப்புறம்?

ரா: (அடிக்குரலில்)
டீ.வி. ஒன்று இருக்குதோ,
சீரியல் பல இழுக்குதோ,
கேடு கெட்ட மானிடனின்,
புத்தி கலங்கடிக்குதோ!

அ: ராஜு நீ புத்திசாலி.

ரா: ஆனா அதிர்ஷ்டமில்லாதவன்.



அன்னிக்கு மட்டும் ரெண்டு நிமிஷம் கூடப் போயிருந்தா நான் ஹாஸ்டலுக்குப் போயிருப்பேன். நீ வீட்டில சித்தியோட....

அ: ராஜு ப்ளீஸ், பழசை மறந்துடு.

ரா: நோ! நீ முட்டாள். இப்ப இதுகிட்ட மாட்டிக்கிட்டு அழியப் போறே. நான் தான் உன்னை இந்த ..க்கிட்டேயிருந்து காப்பாத்தணும்.

வி: (கோபத்துடன்) ராஜு mind your tongue! (அதற்குள் ராஜு வயலண்டாகி கம்பிகளில் மோத, காவலாளிகள் வந்து அவனை அடித்து மயக்கமான நிலையில் தூக்கிச் செல்கிறார்கள். அப்போதும்..)

ரா: டீ.வி. ஒன்றி..ருக்..குதோ..

## காட்சி - 3

(வீடு. அஜய், விலாசினி, இன்ஸ்பெக்டர். அவசரவசரமாக இன்ஸ்பெக்டர் வருகிறார்)

இன்ஸ்: சார், ஒரு ஷாக்கிங் நியூஸ்.

அ: என்ன?

இன்ஸ்: ராஜ்குமார் தப்பிச்சுட்டார்.

அ: வ்வாட்?

வி: அத்தனை பாதுகாப்பான இடத்திலிருந்து எப்படி தப்பிக்க முடிஞ்சது?

அ: நான் சொல்லல, ராஜு பெரிய புத்திசாலி.

இன்ஸ்: மேடம், ராத்திரி ஒன்பது மணிக்கு எல்லா காவலாளிகளும் சீரியசா பெரியம்மா சீரியல் பார்த்திட்டிருந்தாங்க. அப்ப பன்னிரண்டு கேட், இருபத்தி நாலு பூட்டையும் உடைக்காம திறந்து வெளியே போயிட்டார்.

அ: நான் சொல்லல. ராஜு மகா புத்திசாலி. லுக் விலா, நீ தான் ஜாக்கிரதையா இருக்கணும். He will be after you. இன்ஸ்பெக்டர்...

இன்ஸ்: சார், நாங்க எல்லா டீ.வி. ஷோரூம்களுக்கும் ஜாக்கிரதையா இருக்கும்படி எச்சரிக்கை கொடுத்திட்டோம். இன்சூரன்ஸ் கம்பெனிகளுக்கும் இன்ஃபார்ம் பண்ணிட்டோம். நீங்க? நீங்க ரெண்டு பேர்?... சார் பேசாம நீங்க ரெண்டு பேரும் பாதுகாப்பா ஊட்டிக்குப் போயிடுங்களேன்!

## காட்சி - 4

நடுரோடு_ராஜ்குமார், அம்மா (கழுத்தை வெட்டி, வெட்டி தலையாட்டியபடி நடந்து போகிறான் ராஜ்குமார்)

ரா: ச்சே, வெளியே காத்துகூட இவ்வளவு பொல்யூட்டடா இருக்கு. (ஒரு டீ.வி. சீரியலின் பெரிய பேனர் அவன் கண்ணில் படுகிறது. அதைக் கண்டதும் ஆவேசமடைகிறான்.)

ரா: (பாடுகிறான்) படிப்பு பாதி

சீரியல் பாதி
கலந்து செய்த கலக்கல் நான்.
படிப்பு தின்று
சீரியல் கொன்று
மனிதனாகப் பார்க்கின்றேன் (அழுது கொண்டே)
சீரியல் தின்று
படிப்பு கொன்று... மிருக... (அழுகிறான்!... ம்மா...அம்மா... உடனே அவன் அம்மா தோன்றுகிறாள்)

அ: ராஜு... ராஜு.... ஏன்டா கண்ணா அழறே...

ரா: (அழுதபடியே அந்த பேனரை காட்டி)... ம்மா... அம்மா... அத... அடிச்சு நொறுக்கணும்...

அ: வேண்டாண்டா கண்ணா, அது வெறும் அம்பு. எய்தவர் யாரோ... அழாத கண்ணா....

"என் பையனைக் கண்டிக்கணுமா... ஏன்?"
"சங்கீத மும்மூர்த்திகள் யாருன்னு கேட்டா, 'இளையராஜா, ஏ.ஆர். ரஹ்மான், தேவா'ங்கிறான்.
— தஞ்சை தாமு

## காட்சி - 5

(ஊட்டியில் அஜய், ராஜுவின் வீடு. அஜய், விலாசினி.)

அ: விலா நானும் ராஜுவும் வளர்ந்த வீடு. அதோ... அந்த பீரோ.. ஓ-ஓ- அது அடிலே ராஜு அவன் டைரியை மறைச்சு வைச்சிருப்பான்.

(பீரோவின் அடியில் காலால் தட்ட) ஓ காட்! என்னால நம்பவே முடியல... அதே டைரி...

வி: ராஜுவோட டைரியா?

அ: (தூசு தட்டியவாறு)...ம்...ஸேம் டைரி... (பிரித்துப் படிக்கிறான்)

அன்புள்ள டைரி

ஜனவரி 26. இன்றுதான் அந்தச் சனியன் முதன் முறையாக வீட்டுக்குள், நடுஹாலுக்குள் நுழைந்தது. பெரியம்மா என்று பெயர். சித்தியைக் காட்டிலும் கொடுமை! இதுவரை வேலை பார்த்துக் கொண்டே டி.வி. பார்த்த சித்தி, பெரியம்மா ஆரம்பித்து முடியும் வரை ஆணி அடித்தது போல் உட்கார்ந்துவிட்டாள். எனக்கும் அஜய்க்கும் சோறு போடவில்லை. படிப்பு சொல்லித்தரவில்லை. பசியோடு நாங்களே தப்புத் தப்பாகக் கணக்கு போட்டோம். நிச்சயம் நாளை வகுப்பில் திருகல் திருவிழா உண்டு.

மார்ச் 14. அன்புள்ள டைரி, தொல்லை தாங்க முடியவில்லை. பெரியம்மா போல இன்னும் பல சீரியல்கள் வரவர மதியம் சாப்பாடும் அம்பேல். அப்பாவும் இவற்றில் மயங்க, எங்களோட பேசி விளையாடும் கொஞ்ச நேரமும் காலி..

ஜூலை 6: அன்புள்ள டைரி, சாப்பாடும், படிப்பும் சரிவர உள்ளே இறங்காமல் நாளுக்கு நாள் நாங்கள் மங்கிக் கொண்டே வந்தோம். அப்பாவும், சித்தியும் சீரியல் தின்று கொழுத்தார்கள். இன்று மாமா ஊரிலிருந்து வந்தார். எங்கள் நிலைமையைக் கண்டு அதிர்ச்சி அடைந்தார். எங்களில் ஒருவரை ஹாஸ்டலில் சேர்த்துப் படிக்க வைக்க தன்னால் முடியுமென்றார். சந்தோஷப்பட்டோம்.

ஆகஸ்ட் - 15: மாமா திரும்ப வந்தார். எங்களில் யாருக்கு விடுதலையென்று ஆவலாக காத்திருந்தோம். காசு, லக்ஷ்மி அத சுண்டிப் போட வேண்டாம், ஒரு நூதன முறை நான் சொல்கிறேன் என்றாள் சித்தி. அதன்படி அன்றிரவு, 'பெரியம்மா' சீரியல் இரவு பத்தடிப்பதற்கு முன் முடிந்து போனால், அஜய் ஹாஸ்டலுக்கு, பத்து மணியைக் கடந்தால் ராஜு ஹாஸ்டலுக்கு என்றாள். அஜய் அதிர்ஷ்டக்காரன். இரண்டு நிமிடம் முன்னால் முடிந்தாள் பெரியம்மா.

டிசம்பர் - 3: அஜய் இல்லாத தனிமை. சித்தியும் மோசமானாள். சீரியல்களும் மோசமாயின. தனியாகச் சீட்டாடினேன், பீடி குடித்தேன். சமைத்துச் சாப்பிட்டேன்.

ஜனவரி 1: அன்புள்ள டைரி, ஸ்கூலில் மாறு வேஷப் போட்டி. நானும் ஆசையோடு பெயர் கொடுத்திருந்தேன். போட நினைத்தது பெண் வேடம். சவுரி வைத்து தலை பின்னி விட சித்தியைப் பல முறை கதறி அழைத்தேன். 'தூரத்து மாமா' எனும் தொடர் பார்த்துக் கொண்டிருந்தாள். எனக்கோ நேரமானது... வெறுப்பில் ஓடிச் சென்று டி.வியை அணைத்தேன். ராட்சஸி ஆனாள்... கறிகாய் நறுக்கும் கத்தியால் எனக்கு மொட்டை அடித்தாள். "இப்ப போய் 'பொம்பின வேஷம் போடு!" என்று சிரித்தாள். டி.வியை ஆன் செய்தாள்.

ஜனவரி 2: பள்ளியில் எல்லோரும் கேலி செய்தார்கள். தலையில் கடம் வாசித்தார்கள். வீட்டிற்கு வந்ததும் டி.வியை அடித்து நொறுக்கினேன். சித்தி என்னை பதிலுக்கு... ரோட்டில் ஓடினேன். டி.வி. கடைகளில் இருந்தவற்றை முடிந்தவரை உடைத்தேன். ஓடினேன்... உடைத்தேன்...

வி: வெரி சாட் அஜய்! இது அன்புக்கும் படிப்புக்கும் ஏங்கிய ஒரு குழந்தை.

(அப்போது விலாசினியின் செல்ஃபோன் ஒலிக்கிறது.)



வி: அப்படியா... குட்... நாலு நாள்தானே...? ஓகே...

அ: என்ன?

வி: பெரியம்மா டீ.வி. சீரியல் ஷூட்டிங் நாலு நாள். ஊட்டியிலேயே வைச்சிருக்காங்க. ரொம்ப சௌகரியம்தாங்க. ஜாலி...

அ: ஜாலியில்ல. நீ காலி. ராஜு நிச்சயம் அங்கயும் வந்திடுவான்.

காட்சி - 6

(விலாசினி, அஜய், ராஜ்குமார், படப்பிடிப்பு யூனிட்)

ஊட்டி, ஒரு மலை உச்சியில் பெரியம்மா படப்பிடிப்பு.

டைரக்டர்: விலாசினி மேடம், நீங்க சோகமா அழுதுகிட்டே ஓடி வந்து இந்த மலை உச்சியிலேயிருந்து விழப் போறீங்க... அதான் ஷாட்...

(ராஜு எப்படியும் அங்கு வந்துவிடுவான் என்று சந்தேகப்பட்டு அஜய் அருகிலுள்ள மரப் புதர்களில் தேடுகிறான்.

மற்றொரு மறைவிலிருந்து விலாசினியைத் தேடி வந்த ராஜு ஷூட்டிங்கைக் கவனிக்கிறான். டைரக்டர் கூறியபடி விலாசினி, தலை முடி, புடவை தலைப்பு பறக்க அழுதபடி மலை உச்சிக்கு ஓடுகிறாள்.)

ரா: நல்லாவே அழறா ஏமாத்துக்காரி!

டை: மேடம், இன்னும் கொஞ்சம் எமோஷன் ஒன்ஸ் மோர்.

(அதற்குள் ஜூஸ் வருகிறது. விலாசினி ஏதோ ஜோக் அடிக்க, யூனிட்டே கொல் லென்று சிரிக்கிறது.)

டை: ரெடி ரெடி... எஸ், மேடம். நீங்க காட்டற எமோஷன் வீட்ல டீ.வி. பாக்கறவங்க எழுந்து உங்கள காப்பாத்த வரணும்...

கட்! வெரி குட் மேடம். (எல்லோரும் கை தட்டுகிறார்கள்.

ராஜு பார்த்து அசந்து போகிறான். டைரக்டர் லஞ்ச் பிரேக் அறிவிக்க எல்லோரும் சிரித்து பேசிக் கொண்டே சாப்பிடுகிறார்கள்.

இடையே அஜய், ராஜு இருக்கும் இடம் கண்டுபிடித்து இருவருக்கும் கை கலப்பு. ஒரு அஸிஸ்டெண்ட் டைரக்டர் இவர்கள் சண்டையைப் பார்த்து தன்னை மறக்கிறார். உடனே டைரக்டரிடம் ஓடிப்போய்...)

அ.டை: சார் கண்டுபிடிச்சிட்டேன்.... கண்டு...

டை: எதை?

அ.டை: அருமையான வில்லன் நம்ம சீரியலுக்குத் தேடினீங்களே அவன்...

டை: எங்க?

அ.டை: புதருக்குள்ள!

டை: புதர்ல்லயா?

(ராஜு மொட்டைத் தலையை வெட்டி வெட்டி வெளியே நடந்து வர)

டை: Fantastic தம்பி!

(ராஜுவைப் பார்த்து விலாசினி அரண்டு போகிறாள்.)

டை: (ராஜுவிடம்) சார்.. நீங்க நம்ம தொடர்ல முக்கியமான கேரக்டர் பண்றீங்க.

ரா: நா...ன்... நடிக்கணுமா?

டை: நோ சொல்லவே கூடாது... பிடிங்க ஜூஸ் அப்புறம் அட்வான்ஸ்...

ரா: இது....என்ன இதெல்லாம்... ?

டை: உங்க லுக் ஒண்ணே போதும்... இன்னும் ஒரு வருஷம் இழுக்கலாம் பெரியம்மாவை.

(அதற்குள் அஜய் புதரிலிருந்து மீண்டு வருகிறான்.)

அ: ராஜு... உன்ன விடமாட்டேன்... (ராஜு ஓட... அவன் அம்மா தோன்றுகிறாள்.)

அம்மா: ராஜு, போதும் கண்ணா, நீ வாங்கின அடி உதை. அம்மாகிட்ட வந்திடு...

(அஜய், டைரக்டர், அ.டைரக்டர் துரத்த ராஜு மலை உச்சிக்குப் போகிறான்.)

டை: சார், யார் தடுத்தாலும் நீங்கதான் நடிக்கணும்... இதோ அட்வான்ஸ்.

அ: ராஜு, நில்லு...

அம்மா: அம்மாகிட்ட வந்திடுடா கண்ணா, குதிடா.

(ராஜு நிற்கிறான். திரும்பி எல்லோரையும் பார்க்கிறான்.)

ரா: அம்மா... நான் வரலம்மா வரல!

அ: கண்ணா...

ரா: டீ.விக்கு இந்தப் பக்கம், தொடர் எடுக்கறாங்களே, இவங்கல்லாம் ஜாலியா சந்தோஷமா இருக்காங்கம்மா... அந்தப் பக்கம் பார்க்கிறவங்கதான் அழுது புலம்பி டென்ஷனாகி முட்டாளாப் போறாங்க...

அம்: ராஜு!

ரா: நான் இந்தப் பக்கம் சேரப் போறேன். எந்த பெரியம்மா என்னை இப்படி ஆக்கினதோ அதில நடிக்கப் போறேன். டீ.வி வழியா சித்திரையைச் சித்திரவதைச் செய்யப்போறேன்! நீ போம்மா... இனிமே நானே என்னைக் கவனிச்சிப்பேன்.

அம்: ரொம்ப சமத்து கண்ணா! ○

நில், கவனி, வெற்றிகொள்!



# கல்கி - ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்®

இணைந்து வழங்கும்

# இளைஞர் திருவிழா!

மனிதன், உலகம், இறைவன் என்ற மூன்று மட்டுமே அடிப்படை உண்மைகள். இவற்றுக்கு இடையே நிலவும் தொடர்பு தர்மமும் அதர்மமுமாக மாறி மாறி வந்தாலும், இறுதியில் எப்போதும் தர்மம் ஜெயிக்கும் என்றே நம்புகிறோம். ஆனால் கலி முற்றிய இந்தக் காலத்தில் எது தர்மம் என்பதே புதிராக இருக்கிறது. புதிரை அவிழ்க்க வருகிறார்கள் பண்பட்ட பேச்சாளர்கள்.



தலைப்பு:

## தர்மம்

இடம்:

காமராஜர் அரங்கம்,
தேனாம்பேட்டை,
சென்னை - 18

25.12.2001
காலை 10 மணி

நிறைவு நிகழ்ச்சி!

பேச்சாளர்கள்:

நகைச்சுவை அறிஞர் சோ. ராமசாமி

சிந்தனைச் செல்வர் கிருஷ்ண ராஜ வானவராயர்

அனைவரும் வருக, வருக! அனுமதி இலவசம்!

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Léf 16.12.2001




## மாதங்களில்

# மார்கழி நான்.

பகவான் கூறுகிறார் :

சூரியோதயத்துக்குச் சற்று முன்புள்ள நேரம் பிரம்ம முகூர்த்தம் எனப்படுகிறது. ஆத்ம சாதனத்துக்கு அது சிறந்த வேளையாகும். மனிதர்களுடைய ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒரு நாள் ஆகும். தை மாதமாகிய உத்தராய புண்ணிய காலம் அவர்களுக்கு சூரியோதயம். அதிலிருந்து உத்தராயணம் ஆறு மாதம் அவர்களுக்கு பகல். ஆடியிலிருந்து மார்கழி வரையில் தக்ஷிணாயணம் அவர்களுக்கு இரவு. அதில் மார்கழி மாதம் விடியற்காலம் தேவர்களது நாளில் பிரம்ம முகூர்த்தமாகிறது. அப்பொழுது செய்யும் தேவாராதனை, வந்தனை, வழிபாடு முதலியன மனதை நன்கு பண்படுத்த வல்லவை களாம். இங்ஙனம் மார்கழி மாதம் புலனடக்கம், கடவுள் வழிபாடு ஆகியவைகளோடு முழுதும் இணைக்கப்பட்டிருக்கிறபடியால் மாதங்களுள் தாம் மார்கழி மாதம் என்கிறார்.

பகவான்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2001 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka